





# நீங்கள் எங்கிருந்தாலும்...

# ஹிமாலயா புக்கெ ஸ்னோ

## உபயோகியுங்கள்.




ஏனென்றால் இது பிரத்தியேகமாக இந்தியாவின்
சீதோஷ்ணத்திற்கேற்ப தயாரிக்கப்பட்டது

சீதோஷ்ண நிலை எப்படி இருந்தாலும்—இந்தியாவில் நீங்கள் எங்கிருந்தாலும், ஹிமாலயா புக்கெ ஸ்னோ உங்கள் சருமத்தை அதிக மிருதுவாகவும், அழகாகவும் வைத்துக்கொள்கிறது. இதன் நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள்.

இன்னுமொரு நேர்த்தியான இராஸ்மிக் தயாரிப்பு

HBS. 6-X30 TM

இராஸ்மிக் கம். லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது.

# கல்கி



# பொருளடக்கம்

மலர் 11 இதழ் 34 | 1952 மார்ச் 23 | கர பங்குனி 10



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

குழந்தைகளின் சுரம், குலைக் கட்டி வியாதிகளுக்கு

## ஜம்மியின் "லிவர்க்யூர்"

எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களுக்கு குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிறார். அவரை நேரில் கலந்து ஆலோசிக்கலாம்.

ஆலோசனை நேரம்: காலை 9 முதல் 11 மணி வரை; மாலை 3 முதல் 5 மணி வரை

குறிப்பு: *மேற்கண்ட குறிப்பிட்ட இடங்களில் மட்டும் ஆலோசனை நேரம்: காலை 9 முதல் 11 மணி வரை

| இடம் | தேதி | விலாசம் |
|---|---|---|
| *ஈரோடு | 27-3-52 | M/s. ஸ்ரீ கிருஷ்ணா & கோ., ஜெனரல் மர்ச்சன்ட்ஸ். |
| சேலம் | 28, 29-3-52 | M/s. சேலம் மெடிகல் சப்ளைஸ் & பார்மஸி லிட். |
| *திருப்பூர் | 30-3-52 | M/s. ஆர். எஸ். வாசன் & கோ., கெமிஸ்ட்ஸ். |
| கோயமுத்தூர் | 31-3-52 1-4-52 | M/s. சல்வர் & கோ., ராஜா தெரு. |
| உதகமண்டலம் | 3-4-52 | M/s. எம். என். ஹாஜி அப்துல் ரஸாக் & கோ., பேன்ஸி ஹால், மார்க்கெட் ஸ்கொயர். |
| பாலக்காடு | 5-4-52 | M/s. நாதம் & கோ., கெமிஸ்ட்ஸ். |
| *பொள்ளாச்சி | 7-4-52 | M/s. எம்பயர் பார்மஸி, கெமிஸ்ட்ஸ். |
| *உடுமலைப்பேட்டை | 8-4-52 | M/s. ராஜேந்திரா & கோ., ஜெனரல் மர்ச்சன்ட்ஸ். |
| பழனி | 9-4-52 | M/s. கே. பி. ஆர். முத்துகிருஷ்ண செட்டியார் & சன்ஸ், நாமகிரி லக்ஷ்மி நிலையம். |
| திண்டுக்கல் | 10-4-52 | M/s. வி. ஆறுமுகம் பிள்ளை & சன்ஸ், மெயின் ரோடு. |
| மதுரை | 11, 12-4-52 | M/s. டி. என். வி. நாகலிங்கம் பிள்ளை & சன்ஸ், வடக்கு சித்திரை வீதி. |

○●○

**ஜம்மி வெங்கட்ரமணய்யா & சன்ஸ்**

மதராஸ் :: திருச்சிராப்பள்ளி

SISTA'S



# மார்ச் 21 உ முதல்

சென்னை வெலிங்டனில்

# பாட்சி வீரன்

அல்லது **வீர பாஸ்கர்** தமிழ்

காதலும் வீரமும் நிறைந்த வசீகரமான கதை

**மதுபாலா, பிரேம்நாத்** முதலியோர் நடித்தது

இப்பொழுது தமிழ்நாடெங்கும் வெற்றியுடன் நடைபெறுகிறது

தயாரிப்பு: பக்ஷிராஜா ஸ்டுடியோஸ் :: கோயமுத்தூர்



கல்கி

மலர் 11 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 34

# ஸ்ரீ சுப்பையா போட்ட போடு!

கோயமுத்தூர் தேசபக்தர் ஸ்ரீ சி. பி. சுப்பையா ஒரு பெரிய போடு போட்டிருக்கிறார். நியாயமாக, சென்னைக் காங்கிரஸ் வட்டாரங்களுக்கு அது ஒரு பெரிய அதிர்ச்சியை உண்டு பண்ணி யிருக்க வேண்டும். உண்டு பண்ணி யிராவிட்டால் அது ஸ்ரீ சுப்பையாவின் தவறு அன்று. அவர் போட்டது என்னமோ பெரிய போடுதான்!

இந்தியப் பார்லிமெண்டில் மேல் சபை என்பதாக ஒன்று இருக்கிறது. அம்மாதிரியே சென்னை ராஜ்யத்திற்கும் ஒரு மேல் சபை இருக்கிறது. இந்த இரு சபைகளுக்கும் அங்கத்தினர்கள் பொதுமக்களால் நேர்முகமாகத் தேர்ந்தெடுக்கப் படுவதில்லை. கலாசாலை ஆசிரியர்கள், பி. ஏ. பட்டதாரிகள், ஜில்லாபோர்டு நகரசபை அங்கத்தினர்கள், — இவர்கள் சில ஸ்தானங்களுக்கு அங்கத்தினரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். பொது மக்களால் கீழ்ச் சட்ட சபைகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர் இன்னும் சில ஸ்தானங்களைப் பூர்த்தி செய்ய வேண்டும்.

சென்னைச் சட்ட சபைக்குக் காங்கிரஸின் சார்பாக 152 மூர்த்திகள் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்கள் அல்லவா? சென்னை ராஜ்ய மேல் சபைக்கும் இந்தியப் பார்லிமெண்டு சபைக்கும் இவர்கள் சில அங்கத்தினரைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

"சென்னையில் மந்திரி சபை ஏற்படுத்தும் விஷயந்தான் ஒரே குழப்பமா யிருக்கிறதே! மேற்படி இரு சபைகளுக்கும் சில ஸ்தானங்களைப் பூர்த்தி செய்யும் உரிமையை யாவது நாம் உபயோகப் படுத்தலாம்!" என்று புதிய காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் ஆசைப்பட்டுக் கொண்டிருந்திருப்பார்கள். அந்த ஆசையும் நிறைவேற இடமில்லாமல் போய் விட்டது. "இன்னின்னாருக்கு உங்கள் வோட்டுக்களைக் கொடுத்துத் தேர்ந்தெடுங்கள்" என்று அவர்களுக்குச் சொல்லியாகி விட்டது. கட்டளையை மீறினால் கட்சியிலிருந்து கல்தாதான்! 152 மூர்த்திகளில் இன்னும் சிலர் போய் விடுவார்கள். அப்புறம் மந்திரி சபை அமைப்பதாவது, மண்ணாங்கட்டி யாவது!

இப்படிப் புதிய எம். எல். ஏ. க்களுக்குக் கட்டளையிட்ட விஷயத்திலேதான் ஸ்ரீ சி. பி. சுப்பையாவுக்குக் கோபம் பிறந்தது. "இது என்ன முறையற்ற காரியம்? தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை அங்கத்தினரைக் கலந்து கொள்ளாமல் அவர்கள் பேரில் அபேட்சகரைத் திணிப்பதா?" என்று கேட்டிருக்கிறார். அது மட்டும் அன்று.

இந்தியப் பார்லிமெண்டின் மேல் சபைக்கு ஸ்ரீ சுப்பையாவின் பெயரும் எடுக்கப் பட்டிருந்தது. "நான் மேற்படி சபையில் அங்கத்தினரா யிருக்கத் தகுதி யில்லாதவன். என்னைப் போன்றவர்களைத் தேர்ந்தெடுப்பது நகைக்கத் தக்க காரியம். ஆகையால் என் பெயரை நான் வாபஸ் பெற்றுக் கொள்கிறேன்" என்று அறிக்கை விட்டார்.

இவ்விதம் ஸ்ரீ சி. பி. சுப்பையா போட்ட போட்டினால் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ காமராஜ் கலங்கிப் போயிருப்பார் என்று சிலர் எதிர்பார்த்திருக்கலாம். அப்படி எதிர்பார்த்தவர்கள் ஏமாற வேண்டியதாயிற்று. அதைவிடப் பெரிய போடு ஒன்றை ஸ்ரீ காமராஜ் போட்டார். "பழம் நழுவிப் பாலில் விழுந்தது! நம்முடைய திருச்செங்கோடு டி. எஸ். பட்டாபிராமனுக்கு இடம் இல்லையே என்று தவித்துக் கொண்டிருந்தேன். கோயமுத்தூர் சுப்பையாவின் இடத்தில் பட்டாபிராமனைத் தூக்கிப் போடு!" என்றார். அத்துடன் ஸ்ரீ காமராஜுக்கு மிச்சமிருந்த தொல்லையும் தீர்ந்தது.

* * *

ஒருவர் வாழ்க்கையில் ஏதேனும் ஒரு துறையில் வெற்றி அடைந்தார் என்றால் அவரிடம் சில அபூர்வ குணங்கள் இருக்கத்தான் வேண்டும். ஸ்ரீ காமராஜ் சென்ற பதினாறு வருஷங்களாகத் தமிழ்நாட்டுக் காங்கிரஸின் சர்வாதிகாரியாக இருந்து வருகிறார். இது எப்படிச் சாத்தியமாயிற்று? ஏதோ சில அபூர்வமான குணாதிசயங்கள் அவரிடம் இருப்பதினாலேதான்.

அந்தக் குணாதிசயங்களில் முக்கியமானது இது:—தமக்குத் துணையாக இருந்து வந்தவர்களை ஸ்ரீ காமராஜ் எப்போதும் சரிவரக் கவனித்துக் கொள்வார். கடவுளே கைவிட்டாலும் ஸ்ரீ காமராஜ் கைவிடுவதில்லை!

தமிழ் நாடு தலைமைப் பதவியைத் தாம் விட்டு விடப் போவதாக அவரே சமீபத்தில் சொல்லி விட்டார். அதை நிறைவேற்றித் தீரவேண்டி வந்தாலும் வரலாம். அப்படி நேர்வதா யிருந்தால், அதற்குள்ளே திருப்பரங் குன்றத்திலிருந்து தமக்குத் துணை நின்றிருக்கும் சகாக்களில் சிலருக்குத் தம் நன்றிக் கடனைத் தீர்த்துவிட்டுப் போக அவர் விரும்புவது இயல்புதானே! இவ்விதம் தம் சிநேகிதர்களுக்கு உண்மையா யிருக்கவேண்டும் என்கிற உறுதியான எண்ணத்திற்காக ஸ்ரீ காமராஜை நாம் பாராட்டுகிறோம்.

*                *                *

தகுதி, ஆற்றல், உசிதா உசிதம் என்று பார்க்கப் போனால் தமிழ் நாட்டில் மேற்படி இரு மேல் சபைகளுக்கும் பொறுக்கப்படக் கூடியவர்கள் சிலர் இருக்கத்தான் இருக்கிறார்கள்.

ஆந்திர ஜில்லாக்களுக்காக "ஆந்திரப் பத்திரிகை" ஆசிரியர் ஸ்ரீ சம்பு பிரஸாத் அவர்களைப் பொறுக்கி யிருக்கிறார்கள். இன்னும் வடநாட்டில் பத்திரிகைத் தொழிலில் இருக்கும் ஸ்ரீ கே. ராமராவ் என்பவரையும் பொறுக்கி யிருக்கிறார்கள்.

தமிழ் நாட்டில் "சுதேசமித்திரன்" என்று ஒரு பத்திரிகை எழுபது வருஷங்களுக்கு மேலாகத் தமிழ் மக்களுக்குச் சேவை செய்து வருகிறது. தேசீயத்துக்கும் காங்கிரஸுக்கும் அதன் தொண்டுகள் சரித்திரப் பிரசித்தமானவை. "சுதேசமித்திரன்" ஆசிரியர் ஸ்ரீ சி. ஆர். சீனிவாசன் இன்று அகில இந்தியப் பத்திரிகாசிரியர் சங்கத்தின் தலைவர். அரசியல் துறையிலும் பொருளாதாரத் துறையிலும் நிபுணர்கள் என்று இந்தியாவில் பத்துப் பேரைப் பொறுக்கினால் ஸ்ரீ சி. ஆர். சீனிவாசன் அவர்களில் ஒருவரா யிருப்பார். இந்தியப் பார்லிமெண்ட் மேல் சபையில் அங்கம் வகிப்பதற்கு அவரைக் காட்டிலும் அதிக தகுதி வாய்ந்தவர் ஒருவரை இந்தியாவிலேயே காண முடியாது.

இன்னும், மதுரை ஸ்ரீ எல். கிருஷ்ணசாமி பாரதி பி. ஏ. பி. எல். குடும்பத்துடன் சிறையில் தவம் செய்த தியாகிகளில் ஒருவர். சென்ற பார்லிமெண்டில் அங்கத்தினராயிருந்து கொண்டு தமிழ் நாட்டின் கொடியைப் புதுடில்லியில் உயர்த்திப் பிடித்துக் கொண்டிருந்தவர். பேசாமடந்தை அங்கத்தினர் அல்ல. முக்கியமான பல விவாதங்களில் கலந்து கொண்டு சென்னை மாகாணத்தின் நலங்களுக்காக வாதாடி வந்தவர். எக்காரணத்தினாலோ அவருக்கும் சீட்டு விழவில்லை.

சென்னை இராஜ்ய மேல் சபைக்கு ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார், மதுரை ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர், முன்னாள் மேயர் ராமசாமி நாயுடு, டாக்டர் திரிமூர்த்தி, சர்தார் ஏ. வேதரத்தினம், ஸ்ரீ என். எம். ஆர். சுப்பராமன், ஸ்ரீ ஏ. பி. சி. வீரபாகு போன்றவர்களை எடுத்திருந்தால் அச்சபை கொஞ்சம் மேன்மையே அடைந்து விடும்.

தேச விடுதலைக்காக உயிரைக் கொடுக்கவும் துணிந்த வீரர்களில் ஒருவர் காரைக்குடி ஸ்ரீ சா. கணேசன். சுதந்திரப் போரிலிருந்து உயிருடன் மீண்டு வந்தவர் இன்று சமூக சேவைக்கும் தமிழ்த் தொண்டுக்கும் தம் வாழ்க்கையை அர்ப்பணம் செய்திருக்கிறார். ஸ்ரீ சா. கணேசனைக் காரைக்குடித் தொகுதிக்குத் தேர்தலுக்குப் பொறுக்கவில்லையென்று அந்தப் பக்கத்துக் காங்கிரஸ் அபிமானிகள் பலரும் குறைப்பட்டனர். இந்தச் சந்தர்ப்பத்தில் அவரை மேல்சபைக்குப் பொறுக்கி மேற்படி குறையை நிவர்த்தி செய்திருக்கலாம்.

ஆனால் இதையெல்லாம் கொட்டிக் கொட்டி அளந்து கொண்டிருப்பதில் பயன் என்ன! கொட்டிக் கொட்டி அளந்தால் குறுணி மூன்றரைப்படி ஆனாலும் ஆகுமே தவிர, நாலரைப்படி ஆகப் போவதில்லை. சென்னை மாகாணத்தின் அதிர்ஷ்டந்தான் இப்போது ஒரு மாதிரி என்று தெரிந்திருக்கிறதே! நிலைமை தற்சமயம் உள்ளதை விட இன்னும் மோசமாகப் போய்விடும் என்பதற்கு இடமில்லை!

ஏதோ இந்த மட்டும் ஸ்ரீ சி. பி. சுப்பையா தமக்குத் தோன்றிய உண்மையைச் சொல்ல வேண்டும் என்று முன் வந்ததற்காக அவரைப் பாராட்டுகிறோம். தகுதி, தகுதியின்மையைப் பாராமல் பலரும் ஆசைப் படக்கூடிய ஒரு பதவியைத் தமக்கு வேண்டாமென்று மறுதளித்ததற்காக இருமடங்கு அவரைப் பாராட்டுகிறோம்.

# பாடுபட்டு உயர்ந்த ஏழை)

நமது சினிமாக்களில் ஏழைகள் படும் பாட்டைப் பற்றிச் சென்ற இதழில் எழுதியிருந்தோம். "விசித்திரம்: ஆனால் உண்மை!" என்னும் தலைப்பின் கீழ் வரக்கூடிய ஒரு செய்தியை இது சம்பந்தமாகக் குறிப்பிட வேண்டும். "ஏழை படும் பாடு" என்ற தலைப்புடனேயே தமிழில் ஒரு படம் சில காலத்துக்கு முன்பு வெளியாயிற்று. அதில் நாம் குறிப்பிட்ட குறைகளைக் காண்பதற்குப் பதிலாக நாம் விரும்பும் உயரிய இலட்சியங்கள் பலவற்றைக் காண்கிறோம்.

"ஏழை படும் பாடு" என்னும் படம், உண்மையில், பாடுபட்டு உயர்ந்த ஏழை ஒருவனின் அற்புத சரித்திரத்தைச் சித்திரிக்கிறது.

இந்தப் படத்தில் உழைப்பை நேர்முகமாகவோ மறைமுகமாகவோ குறைத்துக் கூறும் இடம் ஒன்று கூடக் கிடையாது!

சட்டமும் நீதியும் சில சமயம் கருணையுடன் மாறுபட்டவையாகி, கொடுமையும் அநீதியும் ஆகின்றன. இத்தகைய கருணையற்ற சட்டத்தின் கொடுமைக்குக் கந்தன் உள்ளாகிறான். அதனால் அவன் வெகுவாகக் கஷ்டப்படுகிறான். எனினும் அந்தக் கொடுமைக்கு ஈடு கொடுத்துச் சமாளித்து அவனுடைய உழைப்பினாலும் மற்ற அரிய நற்குணங்களினாலும் உயர்கிறான்.

இந்தக் கதையின் — படத்தின் — ஜீவாதாரமான கட்டம், பாதிரியார் வீட்டில் கந்தன் திருடியதற்காகப் போலீஸாரால் கைது செய்யப்பட்டு அப்பாதிரியார் முன்னாலேயே கொண்டு வந்து நிறுத்தப்படும் கட்டந்தான்.

முதல் நாள் இரவு அப் பாதிரியார் அந்த மாஜி கைதியை அன்புடன் தம் இல்லத்தில் வரவேற்கிறார். வெள்ளித் தட்டில் விருந்தளிக்கிறார். அவனே மறுநாள் இரவு வந்து அதே வெள்ளித் தட்டைத் திருடிக் கொண்டு போகிறான். போலீஸார் அவனைப் பிடித்துக் கொண்டு வருகிறார்கள். "இதோ கையும் களவுமாய்ப் பிடித்து விட்டோம்!" என்கிறார்கள். "களவு என்ன களவு! இந்த வெள்ளித் தட்டை நான்தானே இவனுக்குக்

# ஒருவர் கிளம்பினர்!




திருவாங்கூர்—கொச்சி ராஜ்யத்தில் காங்கிரஸ் கட்சியார் மந்திரி சபை அமைத்திருக்கின்றனர்.

---

கொடுத்தேன்! அப்பனே! நான் கொடுத்த வெள்ளித்தட்டை மட்டும் எடுத்துக் கொண்டு வெள்ளி விளக்குகளை மறந்து வைத்துவிட்டுப் போனாயே!'' என்று பாதிரியார் கூறி, வெள்ளி விளக்குகளை மேரி அம்மன் சந்நிதியிலிருந்து எடுத்துக் கொண்டு வந்து கொடுக்கும்போது, பாதிரியாரும் ஏழைக் கந்தனும் மட்டும் உயரவில்லை; மனித குலமே உயர்ந்து விடுகிறது.

வெள்ளி விளக்குகளைக் கொடுத்த பாதிரியார் "கண்ணாடிப் பொருள்கள் செய்வது எப்படி!'' என்ற கைத் தொழில் வித்தையைப் போதிக்கும் புத்தகம் ஒன்றையும் அவனிடம் கொடுக்கிறார்.

அதை எடுத்துக் கொண்டு ஏழைக் கந்தன் போகிறான். கண்ணாடிப் பொருள் உற்பத்தி செய்து உயர்கிறான். கண்ணாடிப் பொருள் தொழிற்சாலையே வைத்துப் பல ஏழைகளுக்குப் பாடுபட்டு உயர்வதற்கு வசதியும் அளிக்கிறான். இன்னும் பல தர்மங்கள் செய்து உயர்கிறான்.

கந்தன் அத்தகைய செல்வச் சீமானாகவும் தர்மப் பிரபுவாகவும் ஆன பிறகும் சட்டம் அவனைப் பின் தொடர்கிறது. அதிலிருந்து தப்பித்து அவன் ஓடுகிறான். ஆனால் உழைப்பின் பெருமையை அதற்குள் அவன் நன்கு அறிந்து விட்டான். ஆகையால் போன இடத்திலும் மீண்டும் பாடுபட்டு உழைத்து உயர்கிறான்.

பாட்டுப் பாடித் தெருவிலே பிச்சையெடுக்கும் பெண்ணை அவன் பார்த்தபோது அவளை வீட்டுக்குள் அழைத்துச் சென்று அவளை வளர்த்தவர்களிடம் "பிச்சை எடுக்க விடக்கூடாது'' என்று உபதேசித்து விட்டுப் போகிறான்.

கதையின் கடைசி நெருக்கடியான கட்டம் வரும் சமயத்திலும் கந்தன் என்ன செய்து கொண்டிருக்கிறான் என்பதைப் படம் பார்த்த நேயர்கள் ஞாபகப்படுத்திக் கொள்வார்கள்.

அந்த வயது முதிர்ந்த நிலையிலும் அவன் தோட்ட வேலை செய்து கொண்டிருக்கிறான். பாதிரியார் கூறிய கைத் தொழிலின் சிறப்பை அவன் என்றும் மறக்க வில்லை.

இந்தப் படத்தில் உழைப்பின் சிறப்பு உயர்த்தப்படுவது மட்டும் அல்ல.

"மனிதன் எப்படி உயர்கிறான்!'' என்னும் நமது தலையங்கத்தின் முதல் பகுதியைத் தயவு செய்து ஞாபகப் படுத்திக் கொள்ளுங்கள்:

மனிதன் உழைப்பினால் உயர்கிறான்; மனிதன் வீர தீரங்களினால் உயர்கிறான்; நன்னடக்கையினால் உயர்கிறான்; தன்னலமற்றுச் சமூகத்துக்கும் தேசத்துக்கும் தொண்டு செய்வதினால் உயர்கிறான்; இடைவிடாத முயற்சியினால் உயர்கிறான்; தளராத ஊக்கத்தினால் உயர்கிறான்; தலைவர்களிடம் அசைக்க முடியாத நம்பிக்கை வைப்பதினால் உயர்கிறான்; அன்பினால் உயர்கிறான்; ஆண்மையினால் உயர்கிறான்; பலர் சேர்ந்து செய்யும் கூட்டுறவு முயற்சியினால் உயர்கிறான்; மலைபோன்ற கஷ்டங்கள் வந்தபோதிலும் மனந்தளராமல் மலையினும் பெரிய பிரயத்தனங்களைச் செய்து அந்தக் கஷ்டங்களை வெற்றி கொள்வதினால் உயர்கிறான்; சமூகத்துக்காகவும் நாட்டுக்காகவும் உயிரையும் கொடுக்க முன்வரும் தியாக புத்தியினால் மனிதன் உயர்கிறான்.

மனிதன் உயர்வதற்குரிய ஏறக்குறைய எல்லா அம்சங்களும் இப் படத்தில் போற்றப்பட்டிருக்கின்றன. உழைப்புடன் கூடிய அன்பும் தியாகமும்

மனிதனை அமரனாக உயர்த்திவிடும் என்பதை இந்தப் படத்திலே காண்கிறோம்.

* * *

உலகத்தின் நல்ல சிறந்த பேராசிரியர்கள் பத்துப் பேரைப் பொறுக்கினால், அவர்களில் ஒருவராகப் பிரான்சு தேசத்தின் விக்டர் ஹியூகோவைப் பொறுக்கியே தீரவேண்டும். அத்தகைய பேராசிரியர் எழுதிய நூல்களிலே நல்ல சிறந்த நாவல் 'லே மிஸரா பிலே' என்னும் அமர காவியம். உலகத்தின் நாகரிக பாஷைகள் அனைத்திலும் அது மொழிபெயர்க்கப் பட்டிருக்கிறது.

விக்டர் ஹியூகோ வாழ்ந்த காலத்தில் பிரான்சு தேசத்தின் சமூக நிலையை ஆதாரமாக வைத்து இக் கதை எழுதப்பட்டது.

சட்டத்துக்கும் கருணைக்கும் ஏற்படும் போராட்டத்தை ஆசிரியர் சித்திரித்திருக்கிறார்.

அதே சமயத்தில், பல தெய்வீகமான கதாபாத்திரங்களைச் சிருஷ்டி செய்திருக்கிறார்.

நம் நாட்டு மடாதிபதிகளைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு அதிகமாக அக்காலத்துப் பாதிரிமார்கள் மேனாட்டில் அபிவிர்த்தி பெற்றிருந்தார்கள். அக்காலத்தில் ஒரு பாதிரியாரைத் தெய்வ மனிதனாக விக்டர் ஹியூகோ சிருஷ்டி செய்திருக்கிறார்,

விக்டர் ஹியூகோவின் அமர காவியத்தைத் தமிழில் மொழிபெயர்த்த யோகி சுத்தானந்த பாரதியார் "ஏழை படும் பாடு" என்னும் தலைப்பை அளித்தார். அதே தலைப்பை வைத்துப் படம் எடுத்திருக்கிறார்கள். உலகப் பிரசித்தி பெற்ற கதையின் புகழுக்குப் பங்கம் வராத முறையில் எடுத்திருக்கிறார்கள்.

சினிமா நுட்ப சாஸ்திரத்தின் உயர்ந்த அம்சங்களை யெல்லாம் இந்தப் படத்தில் கையாண்டிருக்கிறார்கள். முக்கியமாக, ஒளிப் பதிவுக் கலை நம் தென்னிந்தியாவில் எத்தகைய சிகரத்தை அடைந்திருக்கிறது என்பதை இப்படத்தில் காணலாம்.

இதை நாம் எழுதும்போது, படத்தில் உள்ளக் கலக்கத்தைச் சித்திரிக்கும் கட்டம் ஒன்று நம் மனக் கண் முன்னால் நிற்கிறது. அப்போது மேலே கூரையிலிருந்து தொங்கும் 'பவர் லைட்' அசைந்தாடுகிறது. அதனால் அந்த விளக்கின் ஒளி மேலும் கீழும் போய் வருகிறதை அற்புதமான முறையில் பதிவு செய்திருக்கிறார்கள். இந்தக் கட்டத்தில், படம் பார்ப்பவர்கள் உணர்ச்சி வசப் பட்டவர்களா யிருந்தால், அவர்களுடைய உயிரே ஊசலாடத் தொடங்கிவிடும்!

கதையின் சிறப்பும் நுட்ப சாஸ்திரத் திறமையும் ஒருபுறமிருக்க, இப் படத்தில் கதாநாயகன் கந்தனாக ஸ்ரீ வி. நாகையா நடித்துப் படத்துக்கே பெருமை தந்திருக்கிறார். ஸ்ரீ நாகையா சிறந்த குண சித்திர நடிகர் என்பதை முன்னமே நாம் அறிவோம். "ஏழை படும் பாடு" என்னும் படத்தில் அவருடைய நடிப்புத் திறன் மிக மிக உயர்ந்து இமயமலைச் சிகரமாகி விடுகிறது. "தென்னாட்டில் ஒப்பற்ற குணசித்திர நடிகர் ஸ்ரீ நாகையா" என்பது இப்படத்தின் மூலம் தெள்ளத் தெளிவாக நிரூபிக்கப்படுகிறது.

ஸ்ரீ நாகையா நடித்திருக்கும் ஒரு தமிழ்ப் படத்தையோ தெலுங்குப் படத்தையோ சர்வ தேசிய

## ஒரு கை பார்க்கிறேன்!




சென்னைக் காங்கிரஸ் கட்சியின் தலைவர் தேர்தல் விஷயம் பெருந் தலைவலியாக இருந்து வருகிறது!

பிலிம் விழாவுக்கு எடுக்கவில்லையே யென்று நாம் குறைப்படாமலிருக்க முடியவில்லை

* * *

“ஏழை படும் பாடு” என்னும் படத்தில் சிறிதும் பொருத்தமற்ற வெள்ளைக்காரப் பெண்களின் நடனம் ஒன்று வந்து தொலைகிறது. அசல் கதையில் இல்லாத இரண்டொரு அதிகப் பிரசங்கப் பேச்சுக்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. படத்தின் மற்ற உயர்வுகளைக் கருதி மேற்கூறியவற்றை நாம் பொறுத்துக் கொள்கிறோம்.

‘பிற நாட்டுக் கதைகளைக் கொண்டு படம் எடுத்தால் இப்படிப்பட்ட கதைகளை யல்லவா பொறுக்க வேண்டும்! காப்பி யடித்தாலும் இப்படி யல்லவா மேன்மையாகக் காப்பி அடிக்க வேண்டும்!” என்று வியந்து பாராட்டுகிறோம்.

“ஏழை படும் பாடு” என்னும் படம் தமிழ் நாட்டில் நல்ல வெற்றி அடைந்தது என்பதை நினைக்கும்போது மகிழ்ச்சியும் பெருமையும் அடைகிறோம். உயர்தரமான படம் பாமர ரஞ்சகமாகவும் இருந்து வெற்றி அளித்தால் சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்ததுபோல் அல்லவா!

# பழமொழிக்கு ஆபத்து!

‘தண்ணீர் பட்ட பாடு’ என்று சொல்லுவது உண்டு. யாராவது எந்தப் பண்டத்தையாவது அமிதமாக, எல்லையில்லாமல் செலவழித்தால், அதைத் தண்ணீரைப்போல் வாரி இறைத்ததாக எல்லாரும் சொல்லுவார்கள்.

ஆனால் மேற்படி பழமொழிக்கே இப்போது ஆபத்து ஏற்பட்டு விட்டதென்று தோன்றுகிறது! பரம ஏழைகள் முதல் பெரும் செல்வந்தர்கள் வரையில் சகலருக்கும் எல்லையின்றி இலவசமாகக் கிடைத்து வந்த சாதனம் தண்ணீர் ஒன்றுதான். இது இலவசமாகக் கிடைப்பதாயினும், மனிதர்கள், மிருகங்கள், தாவர வர்க்கங்கள் எல்லாம் உயிர் வாழ்வதற்கு இன்றியமையாதது அல்லவா!

அந்தத் தண்ணீருக்கு இப்போது பஞ்சம் ஏற்பட்டுவிட்டதால் குறிப்பாக ஆந்திராவைச் சேர்ந்த ராயலசீமா பிரதேசத்தில், சித்தூர், கடப்பை, கர்நூல், அனந்தப்பூர் ஜில்லாக்களைச் சேர்ந்த பெரும் பகுதியில் ஜனங்கள் பட்டினி கிடக்கும்படியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

குடி தண்ணீருக்காக மக்கள் பத்து, பன்னிரண்டு மைல் தூரம் செல்லவேண்டியிருக்கிறதெனில் பஞ்சத்தின் கோரத்தன்மையை உணர்ந்து கொள்ளலாம். கால் நடைகள் புல் கிடைக்காமலும் தண்ணீர் கிடைக்காமலும் இறந்து வருகின்றன. ஆரஞ்சுத் தோட்டங்கள் தண்ணீர் இல்லாமல் வாடி வதங்கிக் காய்ந்து கருகிவிட்டன.

மேற்படி நிலைமையை நேரில் பரிசீலனை செய்து பரிகார முறைகளைக் கைக் கொள்வதற்காக நம் இந்திய சர்க்கார் உணவு மந்திரி ஸ்ரீ கே. எம். முன்ஷி பஞ்சப் பிரதேசங்களுக்கு விஜயம் செய்து விட்டுத் திரும்பிச் சென்றிருக்கிறார். இப்பஞ்ச நிலைமைக்குப் பரிகாரமாக இந்தியா சர்க்கார் தங்களால் இயன்ற சகல உதவியும் செய்வார்கள் என்று வாக்கு அளித்திருக்கிறார். அவர் வேறு என்ன செய்ய முடியும்! பகீரதன் பரமசிவனைக் குறித்துத் தவம் செய்து கங்கையைக் கொண்டு வந்தது போல ஸ்ரீ முன்ஷி வருணனைக் குறித்துத் தவம் புரிந்து மழையைக் கொண்டு வந்துவிட முடியுமா!

சென்னை சர்க்காரும் தாமதமின்றித் தகுந்த பரிகார முறைகளைக் கைக்கொண்டிருக்கிறார்கள்.

தண்ணீர்ப் பஞ்சமும் அதன் விளைவாக உணவுப் பஞ்சமும் ஏற்பட்டுள்ள இடங்களில் சர்க்கார் ஐம்பது லட்சம் ரூபாய் செலவில் ஏழை மக்களுக்குக் கஞ்சி வார்க்கும் இடங்களை அமைத்திருக்கிறார்கள். பஞ்ச நிவாரணத்துக்காக வரவு செலவுத் திட்டத்தில் ஐந்து கோடி ரூபாய் ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். பஞ்சத்தினால் ஏற்பட்டுள்ள வேலையில்லாக் கஷ்டத்தைத் தீர்க்க ரஸ்தா அமைத்தல் போன்ற மராமத்து வேலைகளைக் கைக்கொள்ளவும் சென்னை சர்க்கார் தீர்மானித்திருக்கிறார்கள்.

பல ஜில்லாக்களிலும் ஏற்பட்டுள்ள பஞ்ச நிலைமைக்குப் பரிகாரமாக சர்க்கார் தங்கள் கடமையைச் செய்ய வேண்டியது எவ்வளவு அவசியமோ அதுபோல் பொதுஜனங்களும் தங்கள் கடமையைச் செய்ய முன் வரவேண்டியது அவசியம்.

ராயலசீமா பஞ்ச நிவாரணக் கமிட்டிக்குச் சென்னை மாகாணத்தைச் சேர்ந்த பல பிரமுகர்கள் ஆயிரக் கணக்கில் நன்கொடைகள் அளித்திருக்கிறார்கள். அவர்களுடைய உதாரணத்தைப் பின்பற்றி மற்றவர்களும் தங்களால் இயன்ற தொகையைக் கொடுத்து உதவுவார்களாயின், பஞ்சத்தில் சிக்கிக்கொண்டு தவிக்கும் மக்களின் உயிரைக் காப்பாற்றிய பெருமையை அடைவார்கள்.

**அட்டைப்பட விளக்கம்**

ஒரு தாசில்தாரின் நண்பர் இன்னொரு தாசில்தாராகத்தான் இருக்கிறார்.

ஒரு பாட்டாளியின் நண்பன் அவனைப்போல் இன்னொரு பாட்டாளியாகத்தான் இருக்கிறான்.

ஒரு முதலாளியின் நண்பன் இன்னொரு முதலாளிதான்.

இதுவே மனித சுபாவத்தின் தன்மை.

இதற்கு ஏற்ப மெல்லியலாரான மங்கைமாரும் அவர்களைப் போலவே குறுகுறுப்பான பார்வையும் பளபளப்பான மேனியும் துள்ளியோடும் கதியுமுடைய மானினத்துடன் நட்புக் கொள்கின்றனர்.

கண்வர் ஆசிரமத்திலிருந்த சகுந்தலைக்கு உற்ற துணையாக இருந்தவை மான்கள்தான்.

காட்டில் வாசம் செய்தபோது சீதை தன் மணாளனை விரும்பிக் கேட்டது ஒரு மானைத்தான்.

அரண்ய வீட்டிலிருந்த சிவகாமி தனக்கு மாமல்லர் எழுதிய காதல் ஓலைகளை யெல்லாம் உற்சாகத்துடன் அந்தரங்கமாகப் படித்துக் காட்டியது ரதி என்ற மானுக்குத்தான்.

அந்தச் சம்பிரதாயத்தை யொட்டி மேற்கூறிய மங்கை நல்லார்களை நினைவு கூரும் வகையில் இந்த இதழ் அட்டைப்படச் சித்திரத்தை நமது சித்திரக்காரர் தீட்டியிருக்கிறார்.

இந்தச் சித்திரத்தைக் காணும்போது கவிமணி யவர்களின் பாடல் நினைவுக்கு வருகிறது.

மானைப் படைத்த தெய்வம்—புலியையும், வளர்த்து விடலாமோடி.
தேனைப் பழித்த சொல்லாய்—எனக்குநீ, தேர்ந்துரை செய்வாயோடி.

# பொன்னியின் செல்வன்



## பூர்வ கதை

சோழ சாம்ராஜ்யத்தின் பட்டத்து இளவரசன் ஆதித்த கரிகாலன் காஞ்சிமா நகரில் பொன் மாளிகை கட்டினான். அதில் வந்து சிறிது காலம் தங்கியிருக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு தன் தந்தை சுந்தர சோழ சக்கரவர்த்திக்கு ஓலை அனுப்பினான்.

ஓலை எடுத்துச் சென்றவன் வந்தியத்தேவன் என்னும் வீர வாலிபன். தஞ்சைக்குப் போகும் வழியில் அவன் இராஜ குடும்பத்துக்கு விரோதமாக நடந்துகொண்டிருந்த ஒரு பயங்கரச் சதியாலோசனையைப் பற்றித் தெரிந்து கொண்டான். அதிலிருந்து அவன் தூதனாக மட்டுமில்லாமல் ஒற்றனாகவும் மாறும்படி நேர்ந்தது.

சுந்தர சோழ சக்கரவர்த்தி தஞ்சை அரண்மனையில் நோய் வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாயிருந்தார். சதியாலோசனையில் முக்கியமாகச் சம்பந்தப்பட்டிருந்த பழுவேட்டரையர் சகோதரர்களின் பூரண ஆதிக்கத்தில் அவர் இருந்தார். தஞ்சைக் கோட்டைத் தலைவர் சின்னப் பழுவேட்டரையருடைய கட்டளையின்றிச் சக்கரவர்த்தியை யாரும் பார்க்க முடியாமலிருந்தது.

பெரிய பழுவேட்டரையர் முதுமைப் பிராயத்தில் நந்தினி என்னும் அழகிற் சிறந்த இளம் பிராயத்து மோகனாங்கியை மணம் செய்து கொண்டிருந்தார். தற்செயலாகக் கோட்டைக்கு வெளியே அவளை வந்தியத் தேவன் சந்தித்தான். அவளுடைய உதவியினால் தஞ்சைக் கோட்டைக்குள்ளே பிரவேசித்துச் சக்கரவர்த்தியைக் கண்டு ஓலையையும் கொடுத்தான். ஆனால் சதியாலோசனையைப் பற்றி எச்சரிக்கை செய்ய முடியாமற் போயிற்று.

இதற்குள் சின்னப் பழுவேட்டரையர் அவன்மீது சந்தேகம் கொண்டார். அவருடைய ஆட்களிடமிருந்து தப்பித்துப் பொக்கிஷ நிலவறையின் மூலமாகச் சென்ற சுரங்க வழியாக வந்தியத்தேவன் வெளியே சென்றான். குடந்தைக்கு அருகிலிருந்த சோழ நாட்டின் பழந் தலைநகரான பழையாறையை அடைந்தான். அங்கே சுந்தர சோழச் சக்கரவர்த்தியின் செல்வக் குமாரியான இளைய பிராட்டி குந்தவை தேவியைச் சந்தித்தான்.

குந்தவையின் தம்பியும் சக்கரவர்த்தியின் கடைசிப் புதல்வனுமான அருள்மொழிவர்மன் (பிற்காலத்து ராஜராஜன்) அப்போது ஈழநாட்டுப் போரில் ஈடுபட்டிருந்தான். அவனை உடனே அழைத்து வரும்படி குந்தவைதேவி வந்தியத்தேவனை இலங்கைக்கு அனுப்பினாள்.

கோடிக்கரையில் கலங்கரை விளக்கின் காவலரின் மகள் பூங்குழலி என்பவள் இருந்தாள். அவளுடைய உதவியினால் வந்தியத்தேவன் கடல் கடந்து சென்று இலங்கையில் இளவரசர் அருள்மொழிவர்மரைச் சந்தித்தான். இலங்கைச் சிம்மாதனத்தை இளவரசர் தமக்கு உரிமையாக்கிக் கொள்ள விரும்பியதாகக் குற்றம் சாட்டி அவரைக் கைது செய்து வரும்படி பழுவேட்டரையர்கள் இரண்டு கப்பல்களையும் வீரர்களையும் அனுப்பியிருந்தார்கள். அதே சமயத்தில் ஆதித்த கரிகாலன்



ணியம்.

தன் தம்பியைக் காஞ்சிக்கு அழைத்து வரும்படி தன் நண்பன் பார்த்திபேந்திரனை அனுப்பியிருந்தான்.

பழுவேட்டரையர்கள் அனுப்பியிருந்த வீரர்களில் பலர் இளவரசரைச் சிறைப்படுத்தும் முயற்சியில் கலந்து கொள்ள மறுத்து விட்டார்கள். மற்றவர்கள், அராபியக் குதிரை வர்த்தகர்கள் சிலரால் கொல்லப் பட்டார்கள். இளவரசர் பார்த்திபேந்திரனுடைய கப்பலில் ஏறிச் சென்றார். வழியில் பயங்கரமான சுழற் காற்று தாக்கியது. வந்தியத்தேவனைக் காப்பாற்றுவதற்காக இளவரசர் கடலில் குதித்தார். இருவரும் முறிந்த பாய்மரம் ஒன்றின் உதவியினால் பூதத் தீவை அடைந்தார்கள். அங்கிருந்து பூங்குழலி அவர்களைக் கோடிக் கரை கொண்டு வந்து சேர்த்தாள்.

இளவரசருக்கு அதற்குள் கடுமையான நடுக்கல் சுரம் வந்திருந்தது. குந்தவை தேவியிடமிருந்து சேந்தன் அமுதன் என்பவன் கோடிக் கரையில் வந்து காத்திருந்தான். இளவரசரை நாகைப் பட்டினம் சூடாமணி விஹாரத்திற்குச் சென்று அங்கே சில காலம் இருக்கும்படி இளைய பிராட்டி செய்தி அனுப்பியிருந்தாள். சேந்தன் அமுதனும் பூங்குழலியும் இளவரசரைக் கால்வாய் வழியாக நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் கொண்டு போய்ச் சேர்த்தார்கள்.

கோடிக் கரைக்குப் பெரிய பழுவேட்டரையரும் பழுவூர் இளைய ராணியும் வந்திருந்தார்கள். இளவரசர் சிறைப் படுத்திக் கொண்டு வரப்படுவார் என்று அவர்கள் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள். பார்த்திபேந்திரன் வந்து இளவரசர் கடும் சுழற் காற்றில் கடலில் குதித்து விட்டார் என்றும், திரும்பக் கப்பலுக்கு வரவில்லையென்றும் சொன்னான். பழுவேட்டரையர் பார்த்திபேந்திரனையும் அழைத்துக்கொண்டு தஞ்சாவூருக்குப் பிரயாணமானார்.

நந்தினி மிக மர்மமான ஒரு காரிய நிமித்தமாகப் பெரிய பழுவேட்டரையரை மணந்திருந்தாள். போரில் ஆதித்த கரிகாலனால் கொல்லப்பட்ட வீரபாண்டியனுக்கு 'ஆபத்துதவிகள்' என்ற மெய்க்காவலராயிருந்த ரவிதாஸன் என்னும் மந்திரவாதியும் அவனைச் சேர்ந்த சிலரும் நந்தினியுடன் அந்தரங்கத் தொடர்பு வைத்திருந்தனர். இளவரசர் இறந்து விட்டார் என்பதை ரவிதாஸன் நம்புவதற்காக, வந்தியத்தேவன் தானே இளவரசரை நடுக்கடலில் கொன்று விட்டதாகக் கூறினான். பின்னர் தமிழகமெங்கும் புகழ் பெற்றிருந்த அறிவின் செல்வியை, —அழகுத் தெய்வத்தை,—குந்தவை தேவியை,—மறுபடி பார்த்து, அவள் தனக்கு இட்ட கட்டளையை நிறைவேற்றி விட்டதைச் சொல்லுவதற்கு அவன் பழையாறையை நோக்கி ஆவலோடு புறப்பட்டான்.

வழியில் அவன் ஏறிச் சென்ற குதிரையின் காலில் கல் பொத்து அது நடமாடத் தொடங்கியது. குதிரைக் குளம்புகளுக்குக் கவசம் போடும் நோக்கத்துடன் சாலையோரத்திலிருந்த கொல்லன் பட்டறையொன்றில் அவன் புகுந்தான்.

மீன் உருவம் பதித்த அபூர்வமான வாள் ஒன்றைக் கொல்லன் செப்பனிட்டுக் கொண்டிருப்பதை வந்தியத்தேவன் பார்த்து விட்டு அங்கேயே தூங்கிப் போனான். இருட்டும் சமயத்தில் மறுபடியும் கிளம்பி முல்லையாற்றங் கரையோடு சென்றான். அங்கே ரவிதாஸனுடைய கூட்டாளி தேவராளன் தோன்றினான்.

தேவராளனுடன் பேசிக்கொண்டிருந்த போது சில வீரர்கள் திடீரென்று தோன்றி வந்தியத்தேவனைக் கட்டி ஒரு மூடு பல்லக்கில் போட்டுக் கொண்டு போனார்கள். மயக்கத்தில் ஆழ்ந்த வந்தியத்தேவன் கண் விழித்தபோது நந்தினி அவன் முன் வருவதைக் கண்டான்!



## அத்தியாயம் 14

# பறக்கும் குதிரை

நந்தினி ஒளி வீசிய அந்த வாளை எடுத்து ஆசையுடன் தன் மார்போடு அணைத்துக் கொண்டாள். பிறகு முகத்துடன் சேர்த்து வைத்துக் கொண்டு தன் செவ்விதழ்களினால் முத்தமிட்டாள். ஒரு கணம் அக்கினிக் கொழுந்தைச் செந்தாமரை மலர் முத்தமிடுவது போலிருந்தது. அடுத்த கணத்தில் இரத்த வர்ண மேகம் பூரண சந்திரனைக் குறுக்கே நின்று தடுக்கப் பார்ப்பது போலிருந்தது. நந்தினியின் முகம் அப்போது காபாலிகர்கள் பூசித்த இரத்த பலிகேட்கும் காளியின் கோர சௌந்தரிய முகம் போலாயிற்று. கத்தியை எடுத்து முன்போல் பக்கத்தில் வைத்ததும் அவளுடைய முகம் பழைய வசீகரத்தை அடைந்தது.

"ஆம்; தெய்வம் எனக்கு அளித்திருக்கும் சூசகம் இந்த வாள். ஆனால், அந்த சூசகத்தின் பொருள் இன்னதென்பதை நான் இன்னும் அறியவில்லை. இந்த வாளை நான் அடிக்கடி கொல்லன் உலைக்கு அனுப்பித் துரு நீக்கிப் பதப்படுத்திக் கூராக்கி வைத்துக்கொண்டு வருகிறேன். தாய்ப்புலி தான் பெற்ற குட்டிப் புலியைப் பாதுகாப்பதுபோல் இதை நான் பாதுகாத்து வருகிறேன். உரிய பிராயம் வருவதற்குள் புலிக்குட்டி நீளக் கொம்பு படைத்த காட்டு மாடுகளிடம் அகப்பட்டுக் கொள்ளக் கூடாது அல்லவா? அராபிய நாட்டார் தங்கள் குதிரையை எவ்வளவு அன்புடன் பேணுகிறார்களோ, அப்படி இதை நான் பாதுகாத்து வருகிறேன். நோய்ப்பட்ட சுந்தர சோழ சக்கரவர்த்திக்கு வானமாதேவி பணிவிடை செய்வதுபோல் நானும் இந்த வாளுக்குச் செய்து வருகிறேன். இதைக் கொண்டு நான் என்ன செய்ய வேண்டும் என்பதைத் தெய்வம் இன்னும் எனக்கு அறிவிக்கவில்லை. மலர் மாலை தொடுத்துப் பழகிய இந்தக் கைகளினால் இந்த வாளை எந்தக் கொடியவனுடைய விஷ நெஞ்சத்திலாவது செலுத்த வேண்டுமென்பது தெய்வத்தின் ஆக்ஞையோ, அல்லது என்னுடைய மார்பில் என்னுடைய கையினாலேயே இதைச் செலுத்திக் குபுகுபு வென்று பெருகும் இரத்தத்தை ஆடை ஆபரணங்களால் அலங்கரித்த இந்த உடம்பில் பூசிக் கொண்டு நான் சாக வேண்டும் என்பது தெய்வத்தின் சித்தமோ, இன்னும் அது எனக்குத் தெரியவில்லை. இந்த வாளை எனக்கு அளித்திருக்கும் தெய்வம் சமயம் வரும்போது அதையும் எனக்குத் தெரியப்படுத்தும். அந்தச் சமயம் எப்போது வரும் என்று தெரியாதபடியால் இரவும் பகலும் எந்த நேரத்திலும் ஆயத்தமாயிருக்கிறேன். ஆம்; அழகிற்குப் பெயர்போன பழுவூர் இளைய ராணிக்கு ஆடை ஆபரண அலங்காரங்களில் மிக்க பிரியம் என்பது நாடறிந்த செய்தி. இரவு பகல் அறுபது நாழிகையும் நான் இந்த என் மேனியை அலங்கரித்து அழகுபடுத்தி வைத்துக் கொண்டிருந்தேன். பாவம்! பெரிய பழுவேட்டரையர் அவருக்காகவும் அவருடைய கௌரவத்தை முன்னிட்டும் நான் இப்படி சதா சர்வகாலமும் சர்வாலங்காரத்துடன் விளங்குவதாக நினைத்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறார்! என் நெஞ்சகத்தில் கொழுந்துவிட்டெரியும் தீயை அவர் அறியார்!"

இதையெல்லாம் பிரமை பிடித்தவன் போலக் கேட்டுக் கொண்டிருந்த வல்லவரையன் சுய உணர்ச்சியை வருவித்துக் கொண்டு, "அம்மணி! பெரிய பழுவேட்டரையர் எங்கே?" என்று கேட்டான்.

"ஏன்? அந்தக் கிழவரைப் பார்ப்பதற்கு உமக்குப் பயமாயிருக்கிறதா?" என்றாள் நந்தினி.

"இல்லை, அம்மணி! தங்களைப் பார்க்கவே நான் பயப்படவில்லையே! பழுவேட்டரையரிடம் எனக்கு என்ன பயம்?" என்றான் வந்தியத்தேவன்.

"ஆகா! உம்மை எனக்குப் பிடித்திருப்பதின் காரணம் அதுதான். ஏதனாலோ என்னைக் கண்டு எல்லாரும் பயப்படுகிறார்கள். வீராதி வீரரும் எத்தனையோ போர்க் களங்களில் போரிட்டு உடம்பில் அறுபத்துநாலு புண் சுமந்தவருமான பெரிய பழுவேட்டரையர் என்னைக் கண்டு பயப்படுகிறார். சின்னப் பழுவேட்டரையர்,—காலனையும் கதிகலங்க அடிக்கக் கூடிய காலாந்தக கண்டர்,—என்னிடம் வரும்போது பயந்து நடுங்குகிறார். இந்தச் சோழ சாம்ராஜ்யத்தை ஏக சக்ராதிபதியாக ஆள விரும்பும் மதுராந்தகத் தேவர் என்னிடம்

வரும்போது பய பக்தியுடன் வருகிறார். யமலோகத்தை எட்டிப் பார்த்துக் கொண்டிருக்கும் சுந்தர சோழச் சக்கரவர்த்தி கூட நான் அருகில் சென்றால் நடுங்குகிறார். ஒவ்வொரு தடவை அவர் என்னைக் கண்டு மூர்ச்சையே அடைந்து விடுகிறார். இன்றைக்கு வந்தானே பார்த்திபேந்திர பல்லவன்? அவனுடைய அஞ்சா நெஞ்சத்தையும் வீரத்தைப் பற்றியும் வெகுவாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆதித்த கரிகாலரின் உயிர்த் தோழர் என்றும் அறிந்திருக்கிறேன். ஆனால் என் அருகில் வந்த அரை நாழிகைக் கெல்லாம் அவன் எப்படி அடங்கி ஒடுங்கிப் போய் விட்டான்? ஆதித்த கரிகாலரிடம் உடனே போக வேண்டிய கடமையையும் மறந்து என்னைத் தொடர்ந்து வருகிறான். நான் காலால் இட்ட பணியைத் தலையால் நிறைவேற்றி வைக்க ஆயத்தமாயிருக்கிறான். அதே சமயத்தில் என்னருகில் நெருங்கும்போது அவன் நடுங்குகிறான். அதைப் பார்க்கும்போது எனக்கு ஒன்று நினைவுக்கு வருகிறது. சிறு குழந்தையாயிருந்த போது எரியும் நெருப்பைக் காண எனக்கு ஆசையா யிருக்கும். நெருப்பின் அருகில் செல்வேன். தீயின் கொழுந்தைத் தொடுவதற்கு ஆசையுடன் கை விரலை நீட்டுவேன். ஆனால் அதற்குத் தைரியம் வராது. சட்டென்று விரலை எடுத்துக் கொண்டு விடுவேன். இம்மாதிரி எத்தனையோ தடவை செய்திருக்கிறேன். பார்த்திபேந்திரன் என் பக்கத்தில் நெருங்கி வருவதையும் பயந்து விலகுவதையும் பார்க்கும் போது அந்தப் பழைய ஞாபகம் எனக்கு வந்தது. பல்லவன் மட்டும் என்ன? நீர் யாருடைய தூதராக ஓலை எடுத்துக் கொண்டு காஞ்சியை விட்டுக் கிளம்பினீரோ, அந்த ஆதித்த கரிகாலரும் அப்படித்தான். நாங்கள் குழந்தைகளாயிருந்த நாளிலிருந்து அவருக்கு என்பேரில் அளவில்லாத வாஞ்சை; கூடவே ஒரு பயம். அதனால் என் வாழ்க்கை எப்படியெல்லாம் மாறிவிட்டது? ஐயா! உமது எஜமானரை நீர் மறுபடியும் சந்திக்கும் போது எனக்காக ஒரு செய்தி சொல்வீரா? 'சென்றதை யெல்லாம் நான் மறந்து விட்டேன். நான் இப்போது அவருக்குப் பாட்டி உறவு பூண்ட பழுவூர் ராணி. என்னைப் பார்ப்பதற்குச் சிறிதும் பயப்பட வேண்டாம். அவரை நான் கடித்துத் தின்று விழுங்கிவிட மாட்டேன்!' என்று சொல்லுவீரா?''

''தேவி! நான் உயிரோடு திரும்பிப் போய் ஆதித்த கரிகாலரைப் பார்ப்பேன் என்பது நிச்சயமில்லை. அப்படிப் பார்த்தால் அவரிடம் நான் சொல்லுவதற்கு எத்தனையோ செய்திகள் இருக்கின்றன. தங்களுடைய செய்தியைச் சொல்லுவதாக என்னால் உறுதி கூற முடியாது. தயவு செய்து மன்னிக்க வேணும்!''

''ஆம்; நான் பார்த்திருப்பவர்களுக்குள்ளே நீர் ஒருவர்தான் தைரியசாலி. மனதில் உள்ளதை ஒளியாமல் பேசுகிறவர். ஆகையால் தான் உம்மை எனக்குப் பிடித்திருக்கிறது. வாணர்குல வீரரே! நான் அதிகம் பேரைப் பார்ப்பது கிடையாது. பழையாறை இளைய பிராட்டியைப் போல் ரதத்தில் ஏறிப் பிரயாணம் செய்வதில்லை. எங்கேயாவது போக வேண்டி நேர்ந்தால் மூடு பல்லக்கில் போகிறேன். எனக்கு யார் மூலமாகவாவது ஏதேனும் காரியம் ஆகவேண்டியிருந்தால் அவர்களை மட்டுந்தான் பார்க்கிறேன். அவர்கள் பெரும்பாலும் கோழைகளா யிருக்கிறார்கள். மனதில் உள்ளதைச் சொல்லுவதற்குத் துணிவில்லை. நீர் மனதில் தோன்றுவதை ஒளிக்காமல் சொல்கிறீர்......''

''ஒளிப்பதில் பயனில்லை என்று நான் அறிந்திருக்கிறேன், ராணி! தங்களுடைய கண்கள் ஊடுருவிச் சென்று அறிய முடியாத இரகசியம் எந்த மனிதனுடைய நெஞ்சிலும் இருக்க முடியாது.''

''அது உண்மையாக இருக்கலாம். ஆனால் உம்முடைய நெஞ்சில் உள்ளதைத்தான் நான் இன்னும் அறிந்து கொள்ள முடியவில்லை. போனால் போகட்டும். பழுவேட்டரையரைப் பற்றிக் கேட்டீர். என் கணவரும் பார்த்திபேந்திரனும் பரிவாரங்களுடன் பக்கத்துக் கிராமத்துக்குச் சென்றிருக்கிறார்கள். அங்கே கண்ணகிக் கூத்தும் வேலனாட்டமும் நடைபெறுகின்றன. சின்ன இளவரசரைப் பற்றி வெறியாட்டக்காரனிடம் ஏதாவது தெரிந்து கொள்ள முடியுமா என்று பார்ப்பதற்காகப் போயிருக்கிறார்கள். பைத்தியக்காரர்கள்! யாரைக் கேட்க வேண்டுமோ அவரைப் பிடித்துக் கேட்காமல் ஜோசியக்காரனிடம் சென்றிருக்கிறார்கள். திரும்பி வருவதற்கு வெகு நேரம் ஆகும். ஆகையால்தான் உம்மை நான் அழைத்துவரச் செய்தேன். ஐயா! மறுபடியும் கேட்கிறேன். இளவரசரைப் பற்றிய உண்மை உமக்குத் தெரியும் அல்லவா? அதை நீர் எனக்குச் சொல்ல மாட்டீர் அல்லவா?''

"இல்லை, தேவி! சொல்லுவதற்கில்லை! இனிமேல் எந்தக் காரியத்திற்கும் பொய் புனைந்துரைப்பதில்லையென்றும், உண்மையே சொல்லுவதென்றும் இன்றைக்குத்தான் தீர்மானம் செய்து கொண்டேன். ஆகையால் இளவரசரைப் பற்றிச் சொல்ல முடியாது. சற்று முன்னால்கூட என் தீர்மானத்தை மறந்து விட்டேன். மன்னிக்க வேணும்!" என்று சொல்லிக் கொண்டே வந்தியத்தேவன் தன்னுடைய இடைக் கச்சின் சுருளை அவிழ்த்து அதற்குள்ளே யிருந்த பனை இலச்சினை மோதிரத்தை எடுத்தான்.

"அம்மணி! இதோ தாங்கள் அளித்த பனை முத்திரை மோதிரம். இலங்கையில் பூதிவிக்கிரம கேசரியின் ஆட்கள் இதை என்னிடமிருந்து பலவந்தமாகக் கவர்ந்து கொண்டது உண்மைதான். ஆனால் சேனாதிபதி திருப்பிக் கொடுத்து விட்டார். இதோ தங்களிடம் சேர்ப்பித்து விடுகிறேன்; பெற்றுக் கொண்டு அருள்புரிய வேணும்!" என்று கூறி முத்திரை மோதிரத்தை நீட்டினான்.

நந்தினி அதை உற்றுப் பார்த்துத் தான் கொடுத்த முத்திரை மோதிரம் அதுதான் என்று தெரிந்து கொண்டாள்.

"ஐயா! நான் கொடுத்ததைத் திரும்பி வாங்கிக் கொள்ளும் வழக்கமில்லை. உம்முடைய உண்மையைச் சோதித்து அறிவதற்காகவே கேட்டேன். சோதனையில் நீர் தேறி விட்டீர். என்னுடைய ஆட்களைக் கொண்டு உம்மைச் சோதனை போடும்படியான அவசியத்தை எனக்கு ஏற்படுத்தவில்லை. மோதிரத்தை என்னுடைய ஞாபகத்துக்காக நீரே வைத்துக் கொள்ளலாம்!" என்றாள்.

"அம்மணி! யோசித்துச் சொல்லுங்கள். இது என்னிடமிருந்தால் மீண்டும் அவசியம் நேரும்போது உபயோகப்படுத்த வேண்டி யிருக்கும்......"

"அதைப்பற்றிக் கவலை இல்லை. எப்படி வேணுமானாலும் உபயோகப்படுத்திக் கொள்ளலாம். உம்மை இப்போது மறுபடியும் கண்ணைக் கட்டிப் பல்லக்கிலே ஏற்றிக் கொண்டு போகச் சொல்லப் போகிறேன். உம்மைப் பிடித்த இடத்திலேயே திரும்ப விட்டு விடுவார்கள்......"

"நான் அதற்கு மறுத்தால்?"

"இந்தப் பாழடைந்த அரண்மனையிலிருந்தும் கோட்டையிலிருந்தும் உம்மால் திரும்பிப் போக முடியாது. திரும்பத் திரும்பப் புறப்பட்ட இடத்துக்குத்தான் வந்து கொண்டிருப்பீர்......"

"தேவி! இந்தக் கோட்டை? இந்தப் பாழடைந்த அரண்மனை?......"

"ஆம்; ஒரு காலத்தில் இந்தச் சோழ நாடு பல்லவர் ஆட்சியில் இருந்தது. வெகு காலம் இருந்தது. அப்போது பல்லவ சக்கரவர்த்திகள் இங்கே கோட்டையும் அரண்மனையும் கட்டி யிருந்தார்கள். பிறகு சோழநாடு பாண்டியர்கள் வசப்பட்டது. பாண்டிய மன்னர்கள் சில சமயம் இந்த அரண்மனையில் வசித்தார்கள். விஜயாலய சோழர் காலத்தில் இங்கே ஒரு பெரிய யுத்தம் நடந்தது. கோட்டை இடிந்து தகர்ந்தது. அரண்மனையிலும் பாதி அழிந்தது. மிச்சம் அழியாமலிருந்த பகுதியில் இப்போது நாம் இருக்கிறோம். இந்தக் கோட்டையைச் சிலர் பல்லவராயன் கோட்டை என்றும் இன்னும் சிலர் பாண்டியராயன் கோட்டை என்றும் சொல்வார்கள். இரண்டிலும் உண்மை உண்டு. ஆனால் நன்றாக வழி தெரிந்தவர்களாலேதான் இதற்குள்ளே வந்து விட்டு வெளியேற முடியும்! என்ன சொல்கிறீர்? என் ஆட்களை அழைத்துக் கொண்டு போய் விடச் சொல்லட்டுமா? அல்லது நீரே வழி கண்டு பிடித்து......"

"இல்லை, தேவி! வழி கண்டு பிடித்துச் செல்ல எனக்கு நேரமில்லை. என்னை அழைத்து வந்தவர்களே திரும்ப அழைத்துச் செல்லட்டும். ஆனால்,.........நான் போவதற்கு முன்னால்.........என்னைத் தங்கள் அழைத்து வரும்படி சொன்ன காரணம் வேறொன்றும் இல்லையா? நான் தங்களுக்குச் செய்யக் கூடிய உதவி வேறொன்று மில்லையா? அப்படி ஏதாவது இருந்தால், சொல்லுங்கள்!"

"நல்லது; நீர் கேட்கிறபடியால் சொல்கிறேன். பறக்கும் குதிரை ஒன்று எனக்கு வேண்டும். உம்மால் முடிந்தால் சம்பாதித்து வந்து கொடுக்கலாம்."

"என்ன? பறக்கும் குதிரை என்று சொன்னீர்கள்?"

"ஆம்; பறக்கும் குதிரைதான்!"

"பறப்பதுபோல் அதிவேகமாய் ஓடக் கூடிய அரபு நாட்டுக் குதிரையைச் சொல்கிறீர்களா?"

"இல்லை; இல்லை! என்னால் அத்தகைய குதிரைமேல் ஏறவே முடியாது. பூமியில் கால் வைத்து ஓடும் குதிரையை நான் சொல்ல வில்லை. பறவைகளைப்

போல் இறகுகளை விரித்து வானத்தில் பறந்து செல்லும் குதிரையைச் சொல்கிறேன். அம்மாதிரி அதிசயக் குதிரைகள் இந்தப் பூவுலகில் எங்கேயோ இருப்பதாகக் கதைகளில் கேட்டிருக்கிறேன். அத்தகைய இறகுள்ள பறக்கும் குதிரைதான் எனக்கு வேண்டும்!''

''எதற்காக? சொர்க்கலோகத்துக்குப் பறந்து போவதற்காகவா?''

''என்னைப் பார்த்தால் சொர்க்கத்துக்குப் போகக் கூடியவளாகத் தோன்றுகிறதா? அத்தகைய புண்ணியம் செய்தவள் அல்ல நான். கொடிய பாவங்கள் பல செய்தவள்.''

''சொர்க்கத்தில் உள்ளவர்கள் புண்ணியம் மட்டுந்தானா செய்கிறார்கள்? அங்கேயும் பாவங்கள் செய்கிறார்கள். அதற்குப் பரிகாரம் தேடப் பூவுலகத்திற்கு வருகிறார்கள். வந்த காரியம் ஆனதும் சொர்க்கத்துக்குப் போகிறார்கள்.''

''இல்லை; எனக்குச் சொர்க்கத்துக்குப் போக விருப்பம் இல்லை. பாண்டிய நாட்டில் ஒரு பாலைவனம் இருக்கிறது. அதன் நடுவில் சில மொட்டைப் பாறைகள் இருக்கின்றன. புல் பூண்டு முளைக்காத பாறைகள். அவற்றில் சில முழைகள் இருக்கின்றன. ஒரு காலத்தில் அந்த முழைகளில் திகம்பர ஜைனர்கள் இருந்து தவம் செய்தார்கள். இப்போது பாம்புகளும் நரிகளும் அவற்றில் வசிக்கின்றன. தேவலோகத்து அமராவதி நகரைக் காட்டிலும் அந்தப் பாண்டிய நாட்டுப் பாலைவனப் பாறைகளே எனக்கு அதிகம் பிடித்தமானவை.''

''தேவி! தங்களுடைய ஆசை அதிசயமானதுதான்.''

''பறக்கும் குதிரை கிடைத்தால் நான் அந்தப் பாலை வனத்துக்குப் போவேன். பிறகு அங்கிருந்து இலங்கைத் தீவுக்குப் பறந்து செல்வேன். இலங்கையில் வானை முட்டும் மலைகளும் அம்மலைகளை மறைக்கும்படி உயர்ந்த மரங்கள் அடர்ந்த காடுகளும் இருக்கின்றனவாம். இந்தச் சோழ நாட்டில் காணப்படும் எருமை மந்தைகளைப் போல் இலங்கைக் காடுகளில் யானை மந்தைகள் திரியுமாம். அவற்றை யெல்லாம் பார்ப்பேன். இன்னும் இந்தப் பூவுலகத்தின் மத்தியில் உலகம் தோன்றின நாள்தொட்டுப் பனிக் கட்டியால் மூடப்பட்ட சிகரங்களை யுடைய மலைகள் இருக்கின்றனவாம். சூரியன் உதயமாகும் சமயத்தில் அவை வெள்ளி மலைகளைப் போல் ஜொலிக்குமாம். பறக்கும் குதிரைமேல் ஏறிச் சென்று அம்மலைச் சிகரங்களைப் பார்க்க விரும்புகிறேன். இன்னும் அப்பால் பாண்டிய நாட்டுப் பாலைவனத்தைப் போல் பதினாயிரம் மடங்கு விஸ்தாரமான பாலைவனங்கள் ஒரே வெண் மணல் காடாக இருக்குமாம். பகல் வேளையில் அங்கே எரியும் தீயின் மத்தியில் இருப்பதுபோலவே தோன்றுமாம். அங்கே யெல்லாம் போக விரும்புகிறேன். இன்னும் அப்பால் போனால் கடுங்குளிர் காரணமாகக் கடல் நீர் உறைந்து கெட்டிப்பட்டு மனிதர்களும் மிருகங்களும் நடந்து போகும்படி யிருக்குமாம். பறக்கும் குதிரைமேல் ஏறிச்சென்று அந்த இடங்களைப் பார்க்க விரும்புகிறேன்...''

''தேவி! என்றால் அத்தகைய பறக்கும் குதிரையைத் தங்களுக்குக் கொண்டு வந்து தர முடியாது. ஆனால் தாங்கள் கூறிய சில இடங்களுக்குப் போகச் சுலபமான வழி இருக்கிறது. ஒரு நல்ல படகிலே ஏறினால் அரை நாளில் இலங்கைக்குப் போகலாம். கப்பல் ஏறிச் சென்றால்......''

''ஐயா! அந்த வழி எனக்குத் தெரியாத வழி அல்ல. ஆனால் எனக்குக் கடலைக் கண்டால் பயம். கப்பலில் ஏறுவதென்றால் பயம். நதியைப் படகில் ஏறிக் கடக்கும் போது படகு அசைந்தால் கூடப் பயம். ஆகையால் உம்முடைய யோசனை எனக்குச் சிறிதும் பயன்படாது. நீர் போய் வரலாம்!'' என்று கூறி நந்தினி எழுந்தாள்.

''தேவி! வேறொன்றும் தாங்கள் என்னிடம் சொல்வதற்கு இல்லையா?''

''இல்லை! நீர் ஏதோ சொல்ல விரும்புவது போலக் காண்கிறது.''

''ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன். அதற்கு மட்டும் விடை சொல்ல வேண்டும். சில நாளைக்கு முன்பு தாங்கள் இலங்கைக்கு வந்திருக்கவில்லையா? அநுராதபுரத்தின் வீதிகளில் இருண்ட நிழலில் தனியாக நின்றிருக்க வில்லையா?''

''இல்லவே இல்லை. பழுவேட்டரையரின் அரண்மனையையும் காவலையும் தாண்டி நான் ஒரு பொழுதும் அப்பால் சென்றதே இல்லை. உமக்கு ஏன் அத்தகைய சந்தேகம் உதித்தது?''

''அம்மணி! இலங்கையில் சில தினங்களுக்கு முன்பு தங்களைப் பார்த்தேன். அல்லது தங்களைப் போன்ற மாய உருவம் ஒன்றைப் பார்த்தேன். 'பறக்கும்

குதிரை' என்றெல்லாம் சொல்லுகிறீர்களே? ஒரு வேளை உண்மையில் அத்தகைய குதிரை தங்களிடம் இருக்கிறதோ, அதில் ஏறி அங்கு வந்தீர்களோ என்று நினைத்தேன். ஆனால் இப்போது போல் ஆடை ஆபரணங்கள் புனைந்து அலங்காரமாக இருக்கவில்லை. சாதாரண சேலை ஒன்று மட்டும் உடுத்தி ஒருவித ஆபரணமும் புனையாமல் கூந்தலை விரித்துப் போட்டுக் கொண்டு நின்றீர்கள். அந்த ஸ்திரீ தாங்கள் அல்லவா?''

''இல்லை, நான் இல்லை, ஐயா! நீர் கூறும் அந்த ஸ்திரீ வாய் திறந்து ஏதாவது பேசினாளா?''

''இல்லை; ஜாடையினாலேதான் பேசினாள். ஆனால் தங்களுக்கு மந்திரவாதிகளுடன் பழக்கம் இருக்கிறது. ஒருவேளை அத்தகைய மந்திர சக்தியினால் தங்களுடைய சூக்ஷ்ம வடிவம் அங்கே வந்திருக்கலாம் அல்லவா?''

''நானே, என்னுடைய சூக்ஷ்ம சரீரமோ இல்லை என்றால்?...''

''தங்களை வடிவத்தில் மிகவும் ஒத்த வாய் பேசமுடியாத ஊமை ஸ்திரீயாக அவள் இருக்க வேண்டும்.''

நந்தினியின் பார்வை எங்கேயோ வெகு தூரத்தில் சென்றிருந்தது. ஒரு நெடிய பெருமூச்சு விட்டாள்.

''ஐயா! சற்று முன்னால் எனக்கு ஏதேனும் உதவி செய்ய விரும்புவதாகச் சொன்னீர் அல்லவா?''

''ஆம்!''

''அது தாங்கள் உண்மையாகச் சொன்ன வார்த்தைதானே?''

''சந்தேகமில்லை.''

''அப்படியானால் இதைக் கேளும். எப்போதாவது ஒரு சமயம் மறுபடியும் அந்த ஸ்திரீயைப் பார்க்க நேர்ந்தால் அவளை எப்படியாவது பிடித்துக் கொண்டு வந்து என்னிடம் சேர்ப்பியும். அது முடியாவிட்டால் என்னையாவது அவளிடம் அழைத்துக் கொண்டு செல்லும்!'' என்றாள் நந்தினி.

அரை நாழிகைக்கெல்லாம் வந்தியத்தேவன் மறுபடியும் முல்லையாற்றங்கரையில் நின்றான். அவனுடைய குதிரையும் பக்கத்தில் நின்றது. அவனை அங்கே அழைத்து வந்தவர்கள் ஒரு நொடியில் மறைந்து விட்டார்கள். தேவராளனைக் கூடக் காணவே இல்லை.

முல்லையாற்றங்கரையோரமாகக் குதிரையை மெதுவாகவே செலுத்திக் கொண்டு வந்தியத்தேவன் இரவெல்லாம் பிரயாணம் செய்தான். மூன்றாம் ஜாமத்தில் வால் நட்சத்திரம் அதன் பூரண வளர்ச்சியை அடைந்து வானத்தில் ஒரு நெடிய பகுதியை அடைத்துக் கொண்டு காணப்பட்டது. மக்கள் உள்ளத்தில் பீதியை விளைவித்த அந்தத் தூமகேதுவின் காரணமாக உண்மையிலேயே ஏதேனும் விபரீதம் ஏற்படப் போகிறதா அல்லது இதெல்லாம் வெறும் குருட்டு நம்பிக்கைதானா என்று அடிக்கடி அவன் சிந்தனை செய்தான். நந்தினியின் நினைவும் இடையிடையே வந்து கொண்டிருந்தது. அவள் கூறிய வார்த்தைகள் எல்லாம் அவன் மனத்தில் நன்கு பதிந்திருந்தன. முதல் தடவை தஞ்சை அரண்மனையில் அவளைப் பார்த்தபோது ஏற்பட்ட அருவருப்பு உணர்ச்சி இப்போது மறைந்து விட்டது. ஏதோ பயங்கரமான துன்பங்களில் அடிபட்டவள் இவள் என்ற எண்ணத்தினால் ஒருவித அநுதாபமே உண்டாகியிருந்தது. ஆயினும் அவளுடைய நோக்கம் என்ன, அவள் செய்ய விரும்பும் காரியம் என்ன, அவளுடைய உண்மையான வாழ்க்கை வரலாறு என்ன என்பவை மர்மமாக இருந்தபடியால் ஒரு பக்கத்தில் கோபமும் இருந்தது. ஒப்பில்லாத சௌந்தரியத்தோடு ஏதோ ஒருவித மாயா சக்தி உடையவள் அவள் என்றும் தோன்றியது. ஆதலின் அவளுடன் இனி எவ்வித சம்பந்தமும் வைத்துக் கொள்ளாமலிருப்பதே நல்லது. பனை இலச்சினை உள்ள மோதிரத்தை அவள் திரும்பி வாங்கிக் கொண்டிருந்தால் எவ்வளவோ நன்றாயிருக்கும். அதை வாங்கிக் கொள்ள மறுத்து விட்டாளே? நதியிலே எறிந்து விடலாம் என்றால், அதற்கும் மனம் வரவில்லை. இந்த அபாயகரமான காலத்தில் அது மீண்டும் சமயத்துக்கு உபயோகப்படலாம். எதற்காக எறிய வேண்டும்?

பழையாறைக்குச் சென்று இளைய பிராட்டியைப் பார்த்துச் சொல்லவேண்டிய செய்தியையும் சொல்லி விட்டால், அப்புறம் அதை எறிந்தே விடலாம். இம்மாதிரி தொல்லையான காரியங்களில் பின்னர் பிரவேசிக்கவே கூடாது.

இரவு நாலாம் ஜாமத்தில் கிழக்குத் திசையில் வெள்ளி முளைத்தது. சுக்கிரனை எதிரிட்டுக் கொண்டு போகக்கூடாது என்று வந்தியத்தேவன் கேள்விப்பட்டிருந்தான். குதிரையை நிறுத்தி ஒரு மரத்தில் கட்டிவிட்டுத் தானும் தரையில் படுத்துச் சிறிது உறங்கினான். (தொடரும்)

# வட்ட மேஜை

## சமூகம் முன்னேறுமா?

'சம்சாரம்' என்னும் படத்தையும் அதில் வரும் கதா பாத்திரங்களையும் சிலர் தாங்கியும் பாராட்டியும் பேச முன் வருவது அளவில்லாத ஆச்சரியத்தை அளிக்கிறது. ஒரு கதையிலோ படத்திலோ நல்ல பாத்திரங்களும் கெட்ட பாத்திரங்களும் இருக்கத்தான் செய்வார்கள். வீரர்களும் இருப்பார்கள்; கோழைகளும் இருப்பார்கள். ஆனால் நல்லவர்களிடமும் வீரர்களிடமும் அனுதாபம் உண்டாகும்படி அமைப்பது தான் சமூக முன்னேற்றத்திற்கு உரியது. கெட்டவர்களிடமும் கூட சில சமயம் அனுதாபம் உண்டாக இடம் உண்டு. ஆனால் ஒன்றுக்கும் உதவாத கோழைகளிடம் அனுதாபம் உண்டானால் அதைப்போல் ஒரு சமூகத்தின் வீழ்ச்சியைக் காட்டுவது வேறொன்றுமில்லை.

"நெஞ்சு பொறுக்குதில்லையே—இந்த
நிலைகெட்ட மனிதரை நினைந்துவிட்டால்"

என்று கவியரசர் பாரதியார் புலம்பினாரே, அத்தகைய நிலைகெட்ட சமூகம்தான் கோழைகளிடம் அனுதாபம் கொள்ளும்.

'சம்சாரம்' படத்தில் வரும் கதா பாத்திரங்களைக் கொஞ்சம் பார்க்கலாம். ஆண் சிங்கங்கள் மூன்று பேர் அதில் வருகிறார்கள். ஒருவன்,—முக்கிய கதாநாயகன்,—தாயும் தங்கையும் படுத்திய கொடுமையைத் தாளாமல், தாலி கட்டிய மனைவியைப் பிரசவ ஆஸ்பத்திரியில் விட்டுவிட்டுச் சொல்லிக் கொள்ளாமல் ஓடிப் போகிறான்.

இன்னொரு ஆண் சிங்கம் தாயார், மாமியார், மனைவி மூன்று பேரிடமும் அகப்பட்டுக் கொண்டு அவர்களுடைய கைப்பொம்மையாகிக் கோமாளியாகத் தத்தளிக்கிறான். மூன்றாவது வாலிப சிங்கம் டெலிபோன் மணி அடிக்கும் சத்தத்தைக் கேட்டு நாற்காலியின் அடியில் ஒளிந்து கொள்ளும் வீர மகன். இவன், கார் ஓட்டிச் சென்ற காலேஜ் பெண்ணின் திடீர்க் காதலினால் ஆலை முதலாளிக்கு மாப்பிள்ளையாகி மாமனார் வீடே சொர்க்கம் என்றிருக்கிறான்!

ஆண்மைக்குரிய மேலான பண்புகளைக் காட்டுகிறவன் யாரும் மேற்படி படத்தில் இல்லை. இத்தகைய படத்தைப் பார்த்து நம் ஆண் மணிகள் பரவசமாகிறார்கள் என்றால், "ஊக்கமும் உள்வலியும்" வேண்டுமென்றும், "வைரமுடைய நெஞ்சு" வேண்டுமென்றும் பாரதியார் பாடிக் கதறியதெல்லாம் வீண் என்றே தோன்றுகிறது.

மேற்படி படத்தில் வரும் பெண்களைப் பார்த்தாலோ அதைவிட மோசமாக இருக்கிறது. மூன்று பேர் ஈவிரக்கமற்ற கோர ராட்சசிகள். கதாநாயகி தான்பெற்ற குழந்தைகளுக்குப் பிச்சை வாங்கப் பாட்டுச் சொல்லிக் கொடுத்து அனுப்புகிறவள். இன்னொருத்தி காலேஜ் பெண்களின் 'காரிகேச்சர்' (Caricature) அதாவது "அவலட்சண சித்திரம் என்று சொல்லக் கூடியவள். பாரதியார் பாடிய புதுமைப் பெண்ணுக்கோ, பாரத நாட்டின் பழைய பண்பாட்டுக்கு உரிய வீராங்கனைக்கோ உதாரணம் படத்தில் யாரும் இல்லை.

"கதாநாயகி தன் கற்பைக் காப்பாற்றிக் கொள்வதற்காகக் குழந்தைகளைப் பிச்சைவாங்க அனுப்புகிறாள். அதில் என்ன தவறு!" என்று ஒருவர் ஆத்திரத்துடன் பரிந்துபேச முன்வருகிறார்.

ஒரு ஸ்திரீ கற்பைக் காத்துக்கொண்டு மானமாக ஜீவனம் செய்யத் தற்காலத்தில் வழி ஒன்றும் இல்லையா! ஆயிரம் பதினாயிரக் கணக்கான பெண் மணிகள் இக்காலத்தில் தன்மானத்துடன் பற்பல வேலைகளில் அமர்ந்து ஜீவனம் நடத்தவில்லையா! அதற்கு வழி இல்லை என்றால், அப்படிப்பட்ட சமூகத்தைப் பூகம்பம் வந்து அழித்து விடலாமே!

சின்னஞ்சிறு குழந்தைகள் பாட்டுப் பாடிக் கொண்டு பங்களாக்களுக்குச் சென்று பிச்சை எடுக்கிறார்கள்! அவர்களை நிறுத்தி 'ஏனப்பா பிச்சை எடுக்கிறாய்! உனக்கு அப்பா அம்மா இல்லையா!' என்று கேட்பார் யாரும் இல்லை. அந்த பங்களாக்களில் வாழ்பவர்கள் மனிதர்கள் தானா!

கதையில் வரும் அத்தனை பாத்திரங்களில் அந்தச் சிறு பையன் ஒருவனுக்குத்தான் பிச்சை எடுப்பது பிசகு என்றும் வேலை செய்து ஜீவிக்க வேண்டும் என்றும் தோன்றுகிறது.

பெரியோர்கள் யாருக்குமே தோன்றவில்லை. அத்தகைய சமூகத்தில், சிறுபிள்ளைகளைத் தவிர பெரியோர்கள் எல்லோரும் கடலில் விழுந்து மூழ்கிச் செத்து விடுவதே நலம்.

சென்ற வாரத்தில் சென்னை நகரில் "Cross Winds" என்ற ஆங்கிலப் படம் ஒன்று காட்டப்பட்டது. நான்கு புருஷர்களும் ஒரு பெண்ணும் கடலில் மூழ்கிக் கிடந்த தங்கக் கட்டிகளைத் தேடிச் செல்லுகிறார்கள். அந்த நான்கு பேர்களில் நல்லவர்களும் இருக்கிறார்கள்; கெட்டவர்களும் இருக்கிறார்கள். ஆனால் அந்தப் பெண்ணானவள் காட்டுமிராண்டிகளிடம் அகப்பட்டுக் கொள்ளும் போது அந்நால்வரும் எப்படிப்பட்ட சாகசச் செயல்களை செய்து அப்பெண்ணை மீட்கிறார்கள் என்பதை நினைத்தாலே மெய் சிலிர்க்கிறது.

இது போன்ற வீர உணர்ச்சியும், நெஞ்சுத்துணிவும் பொருந்திய படங்களை எடுக்கும் சமூகம் மேன்மை அடையுமா! அல்லது "சம்சாரம்" "கிரகசாரம்", "பிச்சைக்காரன்", "பிச்சைக்காரி" "யாசகன்", "ஆண்டி" "மாமியார்" "சாமியார்" முதலான படங்களை எடுக்கும் சமூகமும் அத்தகைய படங்களைப் பார்த்துக் களித்து வரும் சமூகமும் முன்னேறுமா!

சென்னை
17—3—52

"புதுமைப் பெண்"

✱

## பெண்களின் அழகு

சமீபத்தில் சென்னையில் நடந்த 'அழகுப் போட்டி'யைப் பற்றி அறிந்த பெண்கள் அனைவரும் வெட்கி மனம் வெதும்பி இருப்பார்கள் என்பதில் சந்தேகம் இல்லை.

"காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு" என்பதுபோல் ஒவ்வொரு பெற்றோருக்கும் தம் பெண்கள் அழகுள்ளவர்களாகத்தான் இருப்பார்கள். "பருவத்தில் பன்றியும் அழகிடும்" என்பது பழமொழி. தமக்கு வேண்டியவர்களிடம், இல்லாத அழகுகள் கூட இருப்பதாக எண்ணுவது மக்கள் சுபாவம். அப்படி இருக்கும்போது, நாடு, பண்பாடு, சீதோஷ்ண ஸ்திதி ஆகியவைகளில் மாறுபட்டவர்களிடையே அழகைத் தேர்ந்தெடுக்க முற்படுவது, பயித்தியக்காரத்தனமாகும்.

பெண்மை என்பது புற அழகு மட்டு மன்று. கற்பு, அன்பு, அருள், ஆகியவைகள் நிறைந்த அகத்தின் அழகும் கூடியதே பெண்மை.

"பத்தினிப் பெண்டிர் பிறர் நெஞ்சு புகார்" அதாவது, பத்தினிப் பெண்கள் தாம் அழகி என்ற எண்ணத்தைக் கூடப் பிறர் நெஞ்சில் புகவிட

மாட்டார்கள் என்பதே. சோழநாட்டுக் காரிகை ஒருத்தி தன்னைப் பிரிந்து சென்ற கணவன் மீண்டு வருமளவும் தன் அழகிய முகத்தை அவலட்சணமாக மாற்றிக் கொண்டிருந்தாளாம். கணவன் மறந்திருந்த போதும், தன் மனம் மாறாதிருந்து அவன் விரும்பி வந்தபோது மனம் மகிழ்ந்து அவனுடன் இல்லறம் நடத்தச் சென்ற இடத்தில் அவன் இறந்துபோன பின்பும் அவனுடைய குற்றமற்ற தன்மையை உலகுக்கு எடுத்துக் காட்டிய கண்ணகியின் கற்பழகும், ராஜபுத்திர ஸ்திரீகளின் பலவித வீர அழகுகளும், காக்கைப் பாடினியார், ஔவை போன்றவர்களின் அறிவழகும், ஆண்டாள், மீரா போன்றவர்களின் பக்தி அழகும், உலகில் என்றென்றும் நிலைத்திருக்கக் கூடிய தன்மையுடைய பெண்மை அழகல்லவா!

ஆகையால் புற அழகைப் போற்றும் அநாகரிகமான இந்த 'அழகுப் போட்டியை'ப் பெண்கள் வன்மையாகக் கண்டித்து நம் நாட்டுப் பெண் குலத்தின் பழைய மதிப்பு இழந்து போய்விடாது மேலும் சிறப்புறச் செய்வோமாக!

சேலம்
15—3—52 லக்ஷ்மி

★

## உழைப்பின் பெருமை

“கல்கி”யில் “நெருப்புடன் விளையாடாதீர்” என்ற தங்கள் கட்டுரையைப் படித்தேன். தாங்கள் அதில் குறிப்பிட்டுள்ள விஷயங்களைத் தமிழ் நாட்டின் பட முதலாளிகளும் நடிகர்களும் கதாசிரியர்களும் கருத்திற்கொள்ள வேண்டிய மிக முக்கியமான விஷயங்கள்.

தற்போதுள்ள சென்னை அரசியல் நெருக்கடிக்குச் சொல்லப்படும் காரணங்கள் சிலவற்றுள் கீழ்த்தரமான வர்க்க உணர்ச்சிகளைத் தூண்டிவிடக்கூடிய படங்களையும், நாடகங்களையும் நாட்டிலே நடமாட விட்டதையும் ஒன்றாகக் குறிப்பிட வேண்டும். ஆகவே இனியாகிலும் படத்தொழில் சம்பந்தப்பட்ட அனைவரும் உழைப்பின் பெருமையை உணர்த்தி அன்புடன் வாழ மக்களைத் தூண்டும் படங்களைத் தயாரித்து நம் நாட்டின் பெருமையை உயர்த்தப் பாடுபடுவார்களா!

தோட்டக்குறிச்சி
12—3—52 ம. சி. திருமலைசாமி

★

## நம் பட முதலாளிகள்!

தங்கள் 'மனிதன் எப்படி உயர்கிறான்!' என்ற கட்டுரையைப் படித்தேன்.

சினிமா ஓர் உயர்ந்த கலை. அதை, நாட்டு மக்களுக்குப் பயன்படும் முறையில் அமைக்க வேண்டுமேயல்லாது, பணம் பெருக்குவ தொன்றையே லட்சியமாகக் கொண்டு படம் எடுத்தல் மிகத் தவறான செயலாகும்.

அதுமட்டுமன்றிச் சங்கீதம், நடனம் முதலிய உயர்ந்த கலைகளையும் நம் சினிமாக்களில் சித்திரவதை செய்கிறார்கள். இதைக் கண்டு எந்த உண்மையான சங்கீத, நடன ரஸிகர்களும் பொறுக்க மாட்டார்கள்.

கர்நாடக சங்கீதம் மங்கி விடுவதின் காரணம் 'டப்பா' சங்கீதமே. எங்கு சென்றாலும் 'டப்பா' சங்கீதந்தான் காதில் விழுகிறது.

நடனமும் அதே போன்றுதான். எந்த சினிமாவை எடுத்தாலும், அதில் ஒரு நடனக் காட்சி இடம் பெற்றிருக்கும். பரத நாட்டியம் என்ற பெயரில், அதற்கு முற்றிலும் ஒவ்வாத ஒரு ஆட்டம். ஒருவர் ஆண்வேடம். மற்றவர் பெண்வேடம். இருவருமாகச் சேர்ந்து குதித்தல். இதுவே தற்காலத்திய சினிமா நடனம்.

சினிமா ஒரு கலை மாத்திரமன்று. ஒரு பிரசாரக் கருவியுமாகும். அதன் மூலமே நாட்டு மக்களிடையே உத்ஸாகத்தை எழுப்ப முடியும். நம் முன்னோர்கள் எவ்வாறு உழைத்தார்கள், எப்படிப் பெருமையுடன் வாழ்ந்தார்கள் என்பதை மக்களுக்கு உணர்த்த வேண்டுமானால், அதற்குச் சினிமா ஓர் உயர்ந்த சாதனமாகும்.

சினிமா, சங்கீதம் நடனம் முதலிய கலைகள் உயர வேண்டுமாயின் பணத்தையே முக்கியமாகக் கருதாமல் நாட்டின் நலத்தையும், கலைகளின் வளர்ச்சியையும் ஓரளவு கவனிக்க வேண்டும். அப்படிப் பட முதலாளிகள் நினைத்தால் நமது படங்கள் அயல் நாட்டாரிடையே பெருமையுடன் உலாவ முடியும். அதனால் நமது நாட்டின் பெருமையும் பண்பாடும் உயரும்.

காலடி
10—3—52 எம். லலிதா

★

## அநாகரிகம்

நம் நாட்டுப் பெண்மணிகளின் அழகை விளம்பரப் படுத்தி வியாபாரத்தை விருத்தி செய்து கொள்ளும் முறை பல ஆண்டுகளாக நம் நாட்டில் அமுலில் இருந்து வருகிறது. ஒரு நாரீமணியின் படத்தைப் போட்டுப் பாமர ஜனங்களைத் தங்கள் பொருள்களை விரும்பும்படி செய்து வந்த அதே வியாபார 'டெக்னிக்' தான் இன்று அவலட்சணப் போட்டி அளவுக்கு வளர்ந்திருக்கிறது. இத்தகைய 'அவலட்சணப் போட்டி' சுத்த ஆபாசம், அநாகரிகம் என்பது அப்பழுக்கற்ற உண்மை.

கோயம்புத்தூர்
14—3—52 டி. ஸ்ரீனிவாசன்

★

## ஐயோ! தமிழா!

“மனிதன் எப்படி உயர்கிறான்!” என்ற கட்டுரையைக் கண்ணுற்றேன். அதற்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்!

பிச்சை எடுப்போரையும், கொடுப்போரையும் தடுக்கும் சட்டம் இந்தியாவுக்கு மட்டுமல்ல, உலக நாடுகளுக்கே மிக மிக அவசியம். அதை விடுத்து, “பிச்சை போடு அம்மா!” என்றுபாடினால், “ஐயோ! தமிழா! உன் நிலை இப்படியா ஆக வேண்டும்!”

அமெரிக்கா, பிரிட்டன், போன்ற இன்னும் அநேக நாட்டுப் படங்களையும் நாம் பார்க்காமலில்லை. இந்தியாவை விட அந்த நாடுகளெல்லாம் பணச் செழிப்புள்ள நாடுதான். ஆனால் அங்கெல்லாம் ஏழை, எளியோர் இல்லை என்று சொல்ல முடியுமா! எங்கும் இருக்கத்தான் செய்வார்கள். அதற்காக அந்த நாட்டவர்கள், இந்த அவல நிலையை அயலான் அறிய வேண்டும் என்று பறைசாற்றித் திரிகிறார்களா! இல்லை; அதற்கு மாறாகத் தம் நாட்டுப் பெருமையை உயர்த்திக் காட்டுகிறார்கள். அது வன்றோ கலை!

ஆனால், நம் நாட்டிலோ, எவ்வளவு தூரம் தாழ்த்த முடியுமோ அவ்வளவு தூரம் தாழ்த்தி விட்டார்கள். இனிமேலாவது இந்த அவல நிலை ஒழித்து அழகான தமிழ்ப் படங்கள், முயற்சி திருவினையாக்கும் என்ற உயர்ந்த கருத்தோடு வெளிவர வேண்டும் என்பதே எனது அவா.

கொழும்பு
25—2—52 ஏ. ஆர். ஷண்முகம்

# பஜகோவிந்தம்

**சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்**

## 30

அகக் கோயிலைக் காப்பாய் மகனே!
மிகக் கவனம் வைப்பாய்! மிகக் கவனம்
வைப்பாய்!!
சுவாசத்தை ஒழுங்காக்கி யமர்ந்து
அவாவை யடக்கி ஐவர் சூர்க்கரை
மெய்யெது மோசமெது வென்றோர்ந்து
செய்யும் ஜெபமும் தியானமுங் கொண்டு
பையப் பையப் பயில்வாய் அலையாதிருக்க
மெய்ப் பொருளில் சித்தத்தை நிறுத்தவுமே.

**ப்ராணயாமம் ப்ரத்யாஹாரம்**
**நித்யா நித்ய விவேக விசாரம்**
**ஜாப்ய ஸமேத ஸமாதி விதானம்**
**குர்வவதானம் மஹத் அவதானம்**

ப்ரத்யாஹாரம் என்றால் இழுத்துப் பிடித்தல், அதாவது அவாவை அடக்கி ஐம்புலன்களை இழுத்துப் பிடித்தல். அடங்காக் குதிரைகளான புலன்களைக் கடிவாளம் போட்டு இழுத்துப் பிடித்து வாழ்க்கையைச் செலுத்துவது, ப்ரத்யாஹாரம்.

பக்தனுடைய முக்கிய வேலை புலன்களைக் காப்பதாகும். காக்கும் சக்தி பக்தியினின்று உண்டாகும். எவ்வளவு அறிவு இருந்தாலும் புலன்காக்காத அறிவு ஞானமாகாது.

புலன்களின் வேகத்தை அடக்கினால் அடக்கிய வெற்றியே ஆனந்தம் தரும். இதற்காகத்தான் பல சாதனங்களைப் பல ஆச்சாரியர்கள் சொல்லி வந்திருக்கிறார்கள். ஜபமும் தியானமும் பிரபந்தங்கள் ஓதுவதும், சங்கீர்த்தனமும், பிராணாயாமமும், விரதம் காத்தலும் இன்னும் வேறு எல்லாம் இதற்காகவே. முயற்சி செய்து உடனே வெற்றி பெற முடியாமற் போனாலும் மனம் தளராமல் மேலும் மேலும் முயல வேண்டும்.

நீ என்பது தேகமல்ல. உள்ளமே நீ. வெளித் தோற்றம் கவனிக்கத் தகும். ஆனால் உள்ளம்தான் மிகவும் கவனிக்க வேண்டிய பொருள். அனைத்துக்கும் மூலஸ்தானம் உள்ளம். அதை மிக ஜாக்கிரதையாகக் காக்கவேண்டும். சத்துரு உள்ளே நுழையாமல் கோட்டையை அதன் காவற்படையானது தூங்காமல் காப்பதுபோல், விவேகமானது தூங்காமல் உள்ளத்தைக் காக்க வேண்டும். எது உண்மை, எது ஏமாற்றம், எது பொய்த் தோற்றம், எது நிலையில்லாதது, எது நிலையான சுகம் என்பதை யெல்லாம் அறிவது விவேகம். மிகக் கவனமாய்க் காப்பாய் என்று இருமுறை பாட்டில் சங்கரர் சொல்லியது மனங் காத்தலின் அவசியத்தை வற்புறுத்துவதற்காக.

प्राणायामम् प्रत्याहारम्
नित्यानित्यविवेकविचारम् ।
जाप्यसमेतसमाधिविधानम्
कुर्ववधानम् महदवधानम् ॥

## 31

நம்முடைய தேகமும் உள்ளமும் ஆண்டவனுடைய கோயில். அதைச் சுத்தமாக வைத்துக் காப்பது நம் கடமை. காக்கும் வழி பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். நேரில் உபதேசித்தும் சாஸ்திரங்கள் எழுதி அவற்றின் மூலம் எக்காலத்துக்கும் உபதேசித்து வந்திருக்கிறார்கள். பெரியோர்களாகிய நம்முடைய ஆச்சாரியர்களை நமஸ்கரித்து ஆண்டவன் மேல் பாரம் செலுத்தி முயற்சி செய்ய வேண்டும்.

**குருசரணம்புஜ நிர்பர பக்த:**
**ஸம்ஸாராத் அசிராத் பவமுக்த:**

"குருவை நம்பு, முற்றிலும் நம்பு, வாழ்க்கைத் துயரத்தினின்று விடுதலையடைவாய்" என்கிறார். இக்காலத்தில் எல்லாரும் குருவிடம் நேரில் உபதேசம் பெறுவதற்குச் சவுகரியம் இல்லை. குருவினிடம் உபதேசம் பெறும் வழக்கமும் அனேகமாக நின்றுபோய் விட்டது. ஆனால் எவ்விதத்தில் ஞானம் கண்டாலும் அது குருவினிட மிருந்து வந்ததேயாகும். ஒரு புத்தகமே குருவாகலாம். ஒரு கோயில் கோபுரமே ஞானோதயத்துக்குக் காரணமாகி அதுவே குருவாகலாம். ஆனைமுகமூர்த்தி ஒன்று அல்லது கல்லில் வெட்டிய ஒரு அனுமான் விக்கிரகம் அல்லது வேறு பக்தி செலுத்திய ஒரு லிங்கம், ஞான உதயத்துக்குக் காரணமாக இருக்கும். எதாயினும்சரி, அதுவே நமக்கு குரு. அதனில் பக்தியும் சிரத்தையும் வைத்து முயன்றால் நிச்சயம் முக்தி பெறுவோம்.

மண்ணிலும் மரத்திலும் கல்லிலுமா பக்தி செலுத்துவது என்று சிலர் கேட்பார்கள். கடவுள் அனைத்திலும் இருக்கிறபடியால் உயிரற்ற பொருள்களை அசட்டை செய்தல் அறியாமையாகும், உயிரற்ற பொருள்களிலுள்ள பெரும் ரகசியங்களை முற்றிலும் நாம் காணவில்லை. ஒரு உயிரற்ற கல்லோடு நம் பக்தியும் கலந்தால் அதன் வேகம் மிகப் பெரிது. ஆழ்வார் நாயன்மார்களின் பாடல்களைப் பாடினோமானால் இதை நன்றாய்க் காண்போம். நம்பிக்கையின்றிச் சந்தேகப்பட்டுக் கொண்டேயிருந்தால் மாலுமியில்லாத படகைப்போல் கடலில் அலைந்து காற்றில் அடிபட்டுக் கெடுவோம்.

**ப**ஜகோவிந்தம் கடைசிப் பாட்டு.

**குருவின் பாதகமலத்தில் குறையாபக்தி வைப்பாயேல்**
**பிறவிச் சிறையினின்று துரிதம் மீள்வாய் உறுதி.**
**புலனும் மனமும் ஒழுங்குபட்டால் காண்பாய் உன்னுள்ளத்திலேயே**
**உலகத்தையாளும் தேவனுடைய ஒளிமய உருவத்தை**

**குருசரணாம்புஜ நிர்ப்பர பக்த:**
**ஸம்ஸாராத் அசிராத் பவமுக்த:**
**ஸேந்த்ரிய மானஸ நியமாத் ஏவம்**
**த்ரக்ஷ்யஸி நிஜஹ்ருதயஸ்தம் தேவம்.**

"பழங்குடில் தொறுமெழுந்தருளிய பரனே!" என்று பாடினார் மாணிக்கவாசகர். பழங்குடில் என்றது நம்முடைய சீர்கெட்ட இதயம், அதனில் குடியிருக்கிறான் அத்தன். வேறு எங்கேயும் கஷ்டப்பட்டுத் தேடவேண்டியதில்லை.

**ரா**மகிருஷ்ண பரமஹம்ஸர் சொன்ன கதை ஒன்று உண்டு. காட்டுக் கொட்டகையில் படுத்திருந்த ஒரு குடியானவனுக்குத் தூக்கம் விழித்துச் சுருட்டுப் பிடிக்க வேண்டுமென்று எண்ணம் தோன்றிற்றும். நடு இரவில் அடுத்த வயலில் தன் நண்பன் கொட்டகைக்குப் போய், "அண்ணே! அண்ணே!" என்று அவனை எழுப்பினான். அவனும் எழுந்து வெளியே வந்து என்ன விஷயம் என்றான்.

"ஒரு நெருப்புக்குச்சி தருவாயா? சுருட்டுப் பிடிக்க ஆசையாக இருக்கிறது" என்றான்.

"பைத்தியக்காரா! கையில் லாந்தர் பிடித்து வந்திருக்கிறாய். அதை மறந்துவிட்டு நெருப்புக்கு நள்ளிரவில் என்னிடம் வந்தாயே? உன் லாந்தரில் சுருட்டு பற்ற வைத்துக் கொள்வதற்கென்ன?" என்று தூங்கி எழுந்த குடியானவன் சொன்னான்.

"அப்படியா, மறந்து விட்டேன். லாந்தர் இருக்க உன்னண்டை ஏன் வந்தேன்!" என்றான் முதல் குடியானவன்.

கையில் பிடித்த லாந்தரைப் போல், நம் உள்ளத்தில் ஆண்டவன் இருக்க இங்கு மங்கும் தேடி அவனைக் காண வேண்டி அலைகிறோம். உள்ளத்தில் இருக்கும் விளக்கைத்தான் ஸ்ரீ சங்கரர் கடைசிப் பாட்டில் சொல்லுகிறார். "நிஜஹ்ருதயஸ்தம் தேவம்" என்றால் உன்னுடைய இதயத்திலேயே இருக்கும் 'செந்தழல் புரை திருமேனியன்'. ஒளிமயமான ஈசன். உன் புலன்களையும் உள்ளத்தையும் வசமாக்கி நல் வழியில் வாழ்ந்து பக்தி செய்தாயானால் வேறொன்றும் வேண்டாம். அதனாலேயே ஜோதி உருவத்தை உனக்குள்ளேயே நீ காண்பாய் என்று சங்கரர் பஜகோவிந்தத்தை முடிக்கிறார்.

முடிவுரை

**கோவிந்தனை** வந்தித்தால் புலன் காத்தலில் வெற்றி பெறுவோம்.

மனித சமுதாயம் கூட்டுறவு தத்துவத்தின் ஆதாரத்தைக் கொண்டு நிற்கிறது. கூட்டுறவின் நியமமே தருமம் என்பது. ஆசையும் பாவமும் மக்களைப் பிடித்துக் கொண்டால் அந்தக் கூட்டுறவுத் தருமம் கெட்டுப் போகிறது. மக்கள் ஒருவரையொருவர் நம்ப மாட்டார்கள். ஒருவரையொருவர் கண்டு பயப்பட்டும் கவலைப்பட்டும் துவேஷித்தும் துக்கமடைவார்கள். கூட்டுறவு நடைபெறாது. அனைவரும் துயரமடைவார்கள். மனித சமுதாயத்திற்குத் தருமமும் தெய்வ பக்தியும் இன்றியமையாத மூலதனம். இதை இழந்தபடியாலே பலவித கஷ்டங்களை அனுபவிக்கிறோம். இதைச் சீர்படுத்துவதற்கு ஒவ்வொருவனும் செய்ய வேண்டியது! பிறரை எதிர்பார்க்காமல் தன் பாட்டுக்குத் தன் மனச்சாட்சி அதாவது உள்ளத்தில் காவலிருக்கும் தரும தேவதையின் எண்ணத்தின்படி நடந்து வர வேண்டும். அப்படிச் செய்து வந்தால், பிறகு சிறு துளிகள் சேர்ந்து மழையாகப் பெய்வது போல் தருமமும் பெருகிச் சமூகமும் நாடும் செழிக்கும்.

**பஜகோவிந்தம் முற்றிற்று.**

---

**गुरुचरणाम्बुजनिर्भरभक्तः**
**संसारादचिराद्भव मुक्तः ।**
**सेन्द्रियमानसनियमादेवम्**
**द्रक्ष्यसि निजहृदयस्थम् देवम् ॥**

# தி யுனைடெட் கமர்ஷியல் பாங்க் லிட்.

**கல்கத்தா**

*

அங்கீகாரம் பெற்ற
மூலதனம் ... ரூ. 8 கோடி

வாக்களிக்கப்பட்ட
மூலதனம் ... ரூ. 4 கோடி

செலுத்தப்பட்ட
மூலதனம் .... ரூ. 2 கோடி

ரிஸர்வ் நிதி ... ரூ. 67½ லட்சம்

★

போர்ட் ஆப் டைரக்டர்கள் :

**G. D. பிர்லா** (சேர்மன்)

ஈஸ்வரி பிரசாத் கோயங்கா
வைஸ் சேர்மன்

ரமன்லால் G. சரய்யா
வைஸ் சேர்மன்

அனந்த சரண் லா
பைஜ்நாத் ஜலான்
கோபிந்த்லால் பங்கூர்
P. D. ஹிம்மத் சின்கா
ராமேஷ்வர்லால் நோபானி
மகாதேவ் L. தனுகார்
மதன்மோஹன் R. ரூயா
மோஹன்லால் L. ஷா
மோதிலால் தபுரியா
நவின்சந்திர மபத்லால்

ஜெனரல் மானேஜர் :

**B. T. தாகூர்**

*

இந்தியா, பர்மா, பாகிஸ்தான், மலேயா முதலிய தேசங்களின் முக்கிய பட்டணங்களிலும் நகரங்களிலும் கிளை ஆபீஸ்களுடன், உலகம் பூராவும் ஏஜன்ஸி ஸ்தாபனங்களுடன் கூடிய நமது பாங்க் சகலவிதமான பாங்க் அலுவல்களையும் முற்றிலும் திறமையாகச் சேவை செய்யுமாறு நிறுவப்பட்டிருக்கிறது.

---

## அழகிய தோற்றம்
### உத்தியோகத்தில் உதவுகிறது






...அழகிய தோற்றத்துடன் விளங்க உயர்ந்த துணியை நெப்பாக தைத்திருக்க வேண்டும். இதில் பரிட்சை பார்க்காதீர்கள். ''பின்னி''மில்ஸ் தயாரிக்கும் ''ஸான் போரைஸ்டு'', நைனுவா, லண்ட்லின் முதலிய துணிகளையே கேட்டு வாங்கி உங்கள் அழகிய தோற்றத்தை ஸ்திரப்படுத்திக் கொள்ளுங்கள்.

**VENKATESH VASTRALAYA**

Retail Showroom at
**2, Thambu Chetti Street**
Madras 1 Phone : 4688

# என்றுமே மதிப்பில் குறையாத முதலீடுகள்.

## நேஷனல் ஸேவிங்ஸ் ஸர்ட்டிபிகேட்டுகள்.

## பத்து வருஷ ட்ரெஷரி ஸேவிங்ஸ் டிபாஸிட்டுகள்.

கிடைக்கும் வட்டிக்கு

# வரி கிடையாது

இந்தியா நேஷனல் ஸேவிங்ஸ் கமிஷனர், நிதிமந்திரி காரியாலயம், கார்ட்டன் காஸில், ஸிம்லா வெளியீடு.

AC 361. TM

# ஓவியனும் மன்மதனும்

கு. ரா.

ஐம்பது வருஷங்களுக்கு முன் ஆண்டியப்பனுக்கும் பிச்சைக்கண்ணு அம்மாளுக்கும் தரித்திரத்தின் நடுவில் பிறந்தவர்தான் தனபால் என்பது வெகு சிலருக்கே தெரியும். "நம்முடைய பெயர் ராசிதானோ என்னமோ நமக்கு அதிர்ஷ்டமே இல்லை. இந்தப் பிள்ளைக்குத் தனபால் என்று பெயர் வைத்துப் பார்ப்போம்" என்று ஆண்டியப்பனும் பிச்சைக்கண்ணுவும் செய்த தீர்மானம் தீர்க்க தரிசனம் வாய்ந்ததாக அமைந்து விட்டது.

தனபாலினுடைய பெயருக்கு முன்னால் ராவ்பகதூர், திவான்பகதூர் முதலிய பட்டங்கள் அலங்கரிக்கவில்லை. பெயருக்குப் பின்னால் எம். ஏ., எம். எல். ஏ., எம். எல். ஸி. முதலிய பட்டங்களும் அலங்கரிக்க வில்லை. கேவலம் எஸ். எஸ். எல். ஸி. என்ற பட்டத்தைக்கூட அவர் அடையவில்லை. ஆனால் தமது இருபதாவது வயதில் வியாபாரத் துறையில் இறங்கிய அவர் முப்பது வருஷ காலமாக அதில் முனைந்து பாடுபட்டு இன்று பல லட்சங்களுக்கு அதிபதியாக விளங்கி வந்தார்.

பணக் கவலை என்பதையே அறியாத தனபால் இப்பொழுது ஒரு மகத்தான மனக் கவலையில் மூழ்கியிருந்தார். அவருடைய ஒரே மகள் ஹேமப்ரபாவுக்குத் தக்க இடத்தில் திருமணம் நடக்கவேண்டுமே என்பது தான் அந்தக் கவலை. முருங்கைவனம் ஜமீன்தார் முருகப்பதேவரின் மூத்த குமாரன் மேல் நாட்டுச் சுற்றுப் பிரயாணத்தை முடித்துக் கொண்டு சமீபத்தில்தான் தாய்நாடு திரும்பியிருந்தான். பி. எஸ். ஸி. ஹானர்ஸ் படித்து வந்த ஹேமாவுக்கு அவனே சரியான ஜோடி என்று தனபால் அபிப்பிராயப் பட்டபடியே முருங்கைவனம் ஜமீன்தாரும் அபிப்பிராயப் பட்டுப் பெண் கேட்டு எழுதியிருந்தார்.

வாரத்தில் மூன்று ஹிந்தி சினிமாக்களும், இரண்டு இங்கிலீஷ் படங்களும் பார்க்கும் வழக்கமுடைய ஹேமாவின் வாழ்க்கையில் அந்தச் சினிமாக்களில் அடிக்கடி வரும் சம்பவம் போன்ற தொன்று ஏற்படுமென்று யார் எதிர்பார்த்திருக்க முடியும்?



எலிஸபெத் ராணி கல்லூரியின் சகமாணவிகளுடன் மாமல்லபுரத்துக்கு 'எக்ஸ்கர்ஷன்' சென்றிருந்தபோது அந்தச் சம்பவம் நடந்தது. மாமல்லபுரத்துச் சிற்பங்களைச் சித்திரத்தில் தீட்டுவதற்காக அங்கு வந்திருந்த சைத்திரிகன் தினகரனும் ஹேமாவும் சந்தித்துக் கொண்டனர். தோழிகளை விட்டுச் சற்று அவசரமாகக் கற்பாறைகளின் மீது பாய்ந்து ஏறின ஹேமாவும், ஓரிடத்தில் சிற்பம் ஒன்றின் முன் நின்று கொண்டு "இதைப் போன்ற உயிருள்ள பெண்ணும் இருப்பாளா!" என்று நினைத்துக் கொண்டிருந்த தினகரனும் திடீரென்று ஒருவரை மற்றவர் பார்க்க நேரிட்டு விட்டது. அந்த முதல் சந்திப்பிலேயே "இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்திவிட்டனர்!" ஓவியக்காரனும் ஓவியம் உருக்கொண்டன்ன ஒயிலாளும் ஒருவரை ஒருவர் சந்தித்துக் கொண்ட சந்தர்ப்பத்தை மன்மதன் சும்மா விடுவானா? அவன் உடனே மலரம்புகளை எய்து விட்டான். அதே சமயத்தில் தென்றல் மெல்லெனத் தவழ்ந்தது! எங்கிருந்தோ ஒரு மாங்குயில் தன்னுடைய தீங் குரலில் கூவிற்று.

திகைப்பு நீங்கப் பெற்ற பின் தினகரன் தன்னைச் சமாளித்துக்கொண்டு "மன்னிக்க வேண்டும்! உங்களுக்கு வழிகாட்டி யாரும் வரவில்லைபோ லிருக்கிறதே! நான் வரட்டுமா?" என்று கேட்டான். சினிமா காட்சிகள் பலவற்றில் வருவதுபோல "இந்த வழுக்குப் பாறையில் வழிகாட்டுவதுடன் நிற்காமல் வாழ்க்கைப் பாதையிலும் நீங்கள் தான் வழிகாட்ட வேண்டும்!" என்று ஹேமா சொல்ல வேண்டு மென்று நினைத்தாள். ஆனால் அதை அவள் சொல்லாமலேயே தினகரன் புரிந்து கொண்டு விட்டான்.

தம்முடைய ஒரே பெண் ஒரு ஏழைச் சைத்திரிகனைக் காதலிக்கிறாள் என்பதைக் கேள்விப்பட்ட தனபாலர் திடுக்கிட்டுப்போய் விட்டார். முருங்கைவனம் ஜமீன்தாருடைய சம்பந்தத்தையும் அதனால் வரக் கூடிய ஒரு 'கோ'காரத்தையும் (லட்சத்தை 'ல' காரம் என்று வழங்குவது போலக் கோடியை 'கோ' காரம் என்று அழைத்தால் என்ன?) இழப்பதா என்று அவருடைய வியாபார மனம் துடி துடித்தது. ஹேமாவைக் கூப்பிட்டுப் பல தடவை கெஞ்சினார். முருங்கை வனம் ஜமீன்தார் பிள்ளையைப் பிடிக்கா விட்டால் வேறு யாராவது உயர்குலச் செல்வப்பிரமுகர் பிள்ளையை மணம் முடிப்பதாகச் சொல்லிப் பார்த்தார். ஆனால் ஹேமாவோ "சிற்பங்களுக்கிடையில் அவருடைய கம்பீரமான உருவம் அழியாச் சிற்பம் போல என்னுள்ளத்தே பதிந்து விட்டது.

"அவரை நான் மறக்க மாட்டேன். பாறைகளுக் கிடையில் உதித்த எங்கள் காதல் அந்தப் பாறையைப் போலவேதான்

அசைக்க முடியாத பலம் பொருந்தியது!'' என்று சொல்லி விட்டாள்.

தனபாலர் ஒரு நிமிஷம் யோசித்தார். பிறகு "ஹேமா! நீ அசட்டுப் பெண் உனக்கு இருக்கும் உறுதி உன்னுடைய காதலனுக்கு இருக்குமா? அவன் உன்னை மணக்கும் யோக்கியதை உள்ளவனா என்பதை நான் அறிய வேண்டாமா? நாளை இரவு அவனை இங்கு வரச் சொல். என் முடிவைப் பிறகு தெரிவிக்கிறேன்'' என்றார்.

பிறகு தினகரனும் தனபாலரும் தனிமையில் சந்தித்தனர். தினகரனின் உயர்ந்த உருவமும், களை பொருந்திய புன்னகையும், கலையொளி வீசிய கண்களும் தனபாலரையே வசீகரிக்கத்தான் செய்தது.

"தினகரன் அவர்களே! என்னுடைய குமாரி உம்மை மணக்கும்படி நேர்ந்தால் அவளுக்கு நான் ஒன்றுமே கொடுக்க மாட்டேன் என்பது உமக்குத் தெரியுமா?'' என்று கேட்டார் தனபாலர்.

"மன்னிக்க வேண்டும்! உங்களுடைய பணத்தை விரும்பி நான் ஹேமாவைக் காதலிக்கவில்லை.''

"உம்மிடம் நிறையப் பணம் இருக்கிறதா?''

"என்னிடமா? என்னிடம் பணம் ரூபாய் அணா கணக்கில் இல்லைதான். கலைச் செல்வம் நிறைய இருக்கிறது.''

"கலை சோறு போடுமா! இந்தக் காலத்தில் எச்சிற்கலையிலும் சோறு கிடையாது. கலையிலும் சோறு கிடையாது தெரியுமா, உமக்கு!'' என்று சொல்லி விட்டுத் தமது ஹாஸ்யத்தைத் தாமே வியந்து சினிமாப் பாணியில் ஒரு கர்ஜனைச் சிரிப்புச் சிரித்தார் தனபாலர்.

"தெரியும். உங்களைப் போன்ற செல்வர்களெல்லாம் கலையைக் கொலை செய்வதையே தொழிலாக வைத்துக் கொண்டிருக்கும் போது...'' என்றான் தினகரன்.

"அது கிடக்கட்டும், ஹேமாவை நீர் மணம் புரிந்து கொண்டால் அவளை வாரத்துக்கு நான்கு முறையாவது சினிமாவுக்கு அழைத்துப் போக உம்மால் முடியுமா?''

"என்னுடைய சித்திரசாலையில் என்னுடன் இருந்து பழகிய பின்னரும் அவளுக்குச் சினிமா காட்சிகளில் ஆவல் இருக்குமானால் நான் தடை செய்ய மாட்டேன்.''

"ஓகோ! சரிதான். உமது கையில் பணம் இல்லை என்று சொல்லி விட்டீர். ஆகையினால் என்னுடைய பெண் உம்மைக் கல்யாணம் செய்து கொண்டதும் ஒரு ஏழைக் குடும்பத்துப் பெண்ணைப் போலக் கஷ்டப்பட வேண்டியதுதான். இல்லையா?''

"உமது பெண் அதற்குச் சம்மதித்து விட்டாள் என்றபிறகு உமக்கேன் அந்தக் கவலை?''

"உம்முடைய சித்திரக் கலை முன்னேற நான் ஒரு வழி சொல்லுகிறேன்.''

"சொல்லுங்கள்.''

"இப்பொழுது உம்முடைய கையில் ஆயிரம் ரூபாய் தருகிறேன். அதை எடுத்துக் கொண்டு உங்கள் சித்திர சாலையின் அபிவிருத்திக்குச் செலவழியுங்கள். ஹேமாவை மறந்து விடுங்கள்'' என்றார் தனபாலர்.

"முடியாது'' என்றான் தினகரன்.

"பத்தாயிரம் தருகிறேன்'' என்றார் தனபாலர்.

"இருபதாயிரம் தந்தாலும் மறக்க மாட்டேன்'' என்றான் தினகரன்.

"முப்பதினாயிரம் தருகிறேன். இந்தாரும் எடுத்துக் கொள்ளும்'' என்று சொல்லி விட்டு அந்த அறையின் மறைவிடம் ஒன்றில் இருந்த இரும்புப் பெட்டியைத் திறந்து முப்பது நோட்டுக் கட்டுகளைத் தினகரன் முன் எடுத்து வைத்தார் தனபாலர்.

"எங்களுடைய காதலை விலை கொடுத்து வாங்க முடியாது உங்களால்!'' என்றான் தினகரன் கண்டிப்பான குரலில்.

"ஐம்பதினாயிரம் ரூபாய் சம்மதமா? உம்முடைய ஆயுள் முழுவதும் நீர் வர்ணங்களைக் குழைத்துச் சித்திரங்கள் தீட்டினாலும் சம்பாதிக்க முடியாத தொகை!''

"உங்களுடைய பெண்ணரசியும் பொன்னரசியுமான ஹேமப்ரபாவுக்கு முன் இந்தத் தொகைகள் எல்லாம் காலின் கீழ் போட்டுத் துவைக்க லாயக்கானவை!''

"அப்படியானால் நீர் அதிகத் தொகையை எதிர் பார்க்கிறீர் போலிருக்கிறது. சரியாக ஒரு லட்சம் ரூபாய் கொடுத்து விடுகிறேன். கண் காணாத ஊருக்குப் போய் விடும். என்னுடைய மகள் ஹேமா கேவலம் ஒரு பிச்சைக்காரச் சைத்திரிகனுடன் ஏழை வாழ்வு நடத்தும் கஷ்டத்தை நான் காணாமல் இருக்கும் வழியைச் செய்யும்'' என்றார் தனபாலர். அவருடைய குரல் உணர்ச்சி வசப்பட்டுத் தழதழத்தது.

ஒரு நிமிஷம் மௌனமாக உட்கார்ந்திருந்த தினகரன் திடீரென்று எழுந்திருந்தான். "தனபாலரே, மீதி எழுபதினாயிரம் ரூபாய்களை எடும்'' என்றான். தன் காதுகளையே நம்பாத தனபாலர் இரும்புப் பெட்டியண்டை சென்று மீண்டும் எழுபது நோட்டுக் கட்டுகளை எடுத்து வந்து மேஜைமீது வைத்தார். இப்பொழுது தினகரன் முன் சரியாக ஒரு லட்சம் ரூபாய்கள் இருந்தன.

இப்பொழுது தினகரன் கம்பீரமான குரலில், "தனபாலரே! ஏழைச் சைத்திரிகனான தினகரனுக்கு அவனுடைய காதலை மறக்க லட்சம் ரூபாய் வழங்கினீர்கள். அதை அவன் ஏற்றுக் கொண்டு விட்டான். ஆனால் அதே சமயத்தில் அவன் ஏழைப் பட்டத்தைத் துறந்து ஒரு லட்சாதிபதியாகிவிட்டான். ஆகவே, பணக்கார சைத்திரிகன் என்ற முறையில், ஒரு லகார சொத்துக்கு உரிமையாளன் என்ற முறையில் உங்கள் பெண்ணைக் கேட்கிறேன். கொடுக்க மறுக்க மாட்டீர்களே?'' என்றான்.

தனபாலர் தமது தோல்வியை ஒரு புன்னகையுடன் ஒப்புக்கொண்டார்.

# வருகிறது !



**R. பத்மனாபன்**

அளிக்கும்

# குமாரி










## 1. அரசனின் சூழ்ச்சி!

பூரண சந்திரன் ஆகாயத்தில் உல்லாசமாகப் பவனி வந்து கொண்டிருந்தான். விஜயநகரத்து வெள்ளை மாளிகையின் மேல் அந்த வெண்ணிலவு வீசி அதைப் பூலோக சொர்க்கமாக்கிக் கொண்டிருந்தது. வெள்ளை மாளிகை விஜயநகரத்து அரண்மனையின் நடு நாயகமாக விளங்கியது. அந்த வெள்ளை மாளிகையில்தான் அரசன் எப்போதும் இருப்பது வழக்கம். அந்த மாளிகை முழுவதும் விலை உயர்ந்த சலவைக் கல்லால் ஆனது. எத்தனையோ கட்டிட நிபுணர்கள் கூடித் தங்கள் திறமை முழுவதையும் காட்டி அந்த மாளிகையை நிர்மாணித் திருந்தார்கள்.

அப்பொழுது பாதி ராத்திரி மணி பன்னிரண்டு இருக்கும். அரசனும் ராணியும் மேல் மாடியில் இருந்த சலவைக்கல் ஆசனத்தில் அமர்ந்திருந்தார்கள். அவர்கள் என்ன வெல்லாமோ பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் முகத்தில் படர்ந்திருந்த கவலைக் குறியிலிருந்து அவர்கள் மனம் ஏதோ கவலையில் ஈடுபட்டிருக்கிறது என்று தெரிந்தது.

ஆம், அவர்களது மனக் கவலைக்குக் காரணம் குழந்தை இல்லாததுதான். ராணி அன்றைய தினம் அரசனிடம் இது பற்றிக் கூறி ரொம்பவும் வருத்தப் பட்டாள். ஆகவே, இருவரும் மௌனமாகச் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார்கள்.

அந்த நிசிவேளையில் எங்கேயோ தூரத்திலிருந்து ஒரு குழந்தை அழும் சத்தம் கேட்டது. அந்த நிசப்தமாயிருந்த அந்த நேரத்தில் அரசனுக்கு அந்தக் குரல் மிகவும் வேதனை தருவதாயிருந்தது. வெகு நேரமாகியும் அந்த அழுகைக் குரல் ஓய்கிறதாகக் காணோம். தாயின் அரவணைப்பில் இருந்தால் குழந்தை இப்படி அழுவானேன்? உடனே போய்ப் பார்க்க வேண்டும் என்று அரசனுடைய மனதில் ஏதோ ஒன்று வற்புறுத்தி அழைத்தது. எவ்வளவோ விதமாக மனசைச் சமாதானப் படுத்திக் கொண்டும் அரசனுக்குப் போய்ப் பார்க்க வேண்டும் என்னும் எண்ணமே மேலோங்கி நின்றது.

அரசன் பரபரப்புடன் எழுந்து ராணியிடம் கூடச் சொல்லாமல் விடு விடு என்று மேல் மாடியிலிருந்து கீழே இறங்கினான். அந்தக் குழந்தையின் அழு குரல் அரண்மனை நந்தவனப் பக்கமாகக் கேட்டது. அரசன் நேரே அந்தப்புரத்துக் குறுக்கு வழியாக அரண்மனை நந்தவனத்துக்குச் சென்றான். ஒன்றும் புரியாமல் அந்தக் குரல் வந்த திசையை நோக்கி நடந்தான்.

சில நிமிஷங்கள் நடந்த பிறகு நந்தவனத்துத் தடாகக் கரையில் ஒரு அழகான குழந்தை படுத்திருப்பதை அரசன் பார்த்தான். அந்தக் குழந்தை கையையும் காலையும் உதைத்துக் கொண்டு அழுதது. தங்க விக்கிரகம் போன்றிருந்த அந்த ஆண் குழந்தை மெல்லிய புல் தரையில் ஒரு துணியை விரித்துப் படுக்கவிடப் பட்டிருந்தது.

அந்தக் குழந்தையின் இணையற்ற ரூப சௌந்தர்யம் அரசனைப் பிரமிக்க வைத்தது. குழந்தையின் அருகே யாரும் இல்லை. குழந்தைக்குச் சுமார் மூன்று மாதம் இருக்கும். அரசன் அந்தக் குழந்தையைத் தூக்கிக் கொண்டு விடு விடு என்று வெள்ளை மாளிகையைநோக்கி நடந்தான். அரசன் அன்போடு அணைத்துக் கொண்டதும் குழந்தையும் டக்கென்று அழுகையை நிறுத்தியது.

கையில் குழந்தையுடன் அரசனைக் கண்ட ராணிக்கு ஒன்றும் புரியவில்லை.

"அரசே, இது என்ன? இது யார் குழந்தை?" என்று பிரமை பிடித்தாற்போல் கேட்டாள்.

"தேவி, நாம் குழந்தை இல்லை என்று வெகு நாட்களாக வருந்தினோ மல்லவா? கடவுளாகப் பார்த்து நமக்கு இந்தக் குழந்தையை அளித்திருக்கிறார்!" என்று அரசன் சந்தோஷத்தோடு சொல்லிக் குழந்தையை ராணியின் கையில் கொடுத்தான்.

ராணி பேராவலோடு அந்தக் குழந்தையைக் கையில் வாங்கிக் கொண்டாள்.

"மகாராஜா, இந்தக் குழந்தையை எங்கே கண்டு எடுத்தீர்கள்? யாருடையது என்று உங்களுக்குத் தெரியுமா?" என்று மூச்சு விடாமல் கேட்டாள் ராணி.

"தேவி, இந்தக் குழந்தை நந்தவனத்துத் தடாகக் கரையில் உள்ள புல் தரையில் விடப் பட்டிருந்தது. இந்தக் குழந்தையின் தாய் தகப்பன்மார்கள் யாரென்று தெரியவில்லை.

இது கடவுள் செயல்தான். இல்லை யென்றால் நமது கட்டுக் காவல்களை யெல்லாம் கடந்து யார் அவ்வளவு இரக்கமில்லாமல் நமது நந்தவனத்தில் இந்தக் குழந்தையை விட்டுச் சென்றிருக்க முடியும்? மேலும் நம் நாட்டில், பெற்ற குழந்தையைக் கூட இரக்கம் இல்லாமல் விட்டுச் செல்லும் அளவுக்கு யாரும் வறுமையில் வாடவில்லையே! ஆகையினால் தெய்வ அநுக்ரஹத்தால் நமக்குக் கிடைத்த குழந்தை இது என்பதில் சந்தேகமில்லை. குழந்தையை எடுத்து நாம் வளர்க்க வேண்டியது தான் நமது கடமை" என்று அரசன் சொன்னதும் ராணி அதற்குச் சம்மதித்தாள்.



"மகாராஜா, நமக்குத் தெய்வம் தந்த குழந்தை அல்லவா இவன்? ஆகையினால் இவனுக்குத் **தேவராஜன்** என்று பெயர் வைக்கலாம் என்று நினைக்கிறேன். உங்கள் விருப்பம் என்ன?" என்று கேட்டாள் ராணி.

"ஆகா, அப்படியே வைக்கலாம். பொருத்தமான பெயர்!" என்று அரசன் சந்தோஷத்தோடு கூறினான்.

மறு நாள் காலையில் வழக்கம்போல் சபை கூடியது. அரசன் அந்தச் சபையில் தேவராஜனைப் பற்றித் தெரிவித்து அவனைத் தான் கண்டு எடுத்த விதத்தையும் பற்றிக் கூறினான். சபையோர்கள் யாவரும் குழந்தையை ஏக மனதாக வாழ்த்தித் தங்கள் சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

தேவராஜன் கம்பீரமான ராஜ குமாரனானான். அரசன் அவனுக்கு, வில்வித்தை, வாள் வித்தை முதலிய அரசகுலத்து வித்தைகளையெல்லாம் சந்தேகத்துக்கு இடம் இல்லாமல் பயிற்சியளித்து, அவனை இணையற்ற வீரனாக்கினான். குதிரை சவாரியிலும் நல்ல பயிற்சியளித்தான். தேவராஜனும் மிகவும் புத்தி கூர்மையோடு அவற்றை யெல்லாம் கற்றுக் கொண்டான்.

தேவராஜனுக்கு ஐந்து வயது ஆனபோது ராணிக்கு இரண்டு ஆண் குழந்தைகள் பிறந்தன. அரசனுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. மூத்தவனுக்குக் **கருணாகரன்** என்றும் இளையவனுக்குப் **பிரபாகரன்** என்றும் பெயர் வைத்து மிகவும் செல்வமாக வளர்த்தான்.

ராணிக்குக் குழந்தைகள் பிறந்ததிலிருந்து தேவராஜன் மீது அரசன் வைத்திருந்த அன்பு கொஞ்சம் கொஞ்சமாகக் குறைய ஆரம்பித்தது. 'என்ன இருந்தாலும் இவன் அநாதை தானே! இவனை நாம் கண்டு எடுத்து வந்து வளர்த்திராவிட்டால் இவன் தெருத் தெருவாக அலைந்து பிச்சை எடுக்க வேண்டியவன் தானே!' என்று நினைத்து அவனை அலட்சியம் செய்ய ஆரம்பித்தான் அரசன்.

தேவராஜனுக்குப் பதினைந்து வயதாகும் வரையில் அரசன் தன்னை அலட்சியம் செய்கிறான் என்பது தெரியவில்லை. கொஞ்சம் விவரம் தெரிய ஆரம்பித்ததும் அவனுக்குத் தான் தாய் தந்தையற்ற அநாதை என்பதும், இந்த அரசன் தன்னைப் பெற்ற தந்தை அல்ல என்பதும் தெரிய வந்தன.

ராஜ குமாரர்களான கருணாகரனும் பிரபாகரனும் வாள் வித்தை, வில்வித்தை எல்லாம் பயின்றனர். ஆனால் அவர்களுக்குத் தேவராஜனைப் போல அவ் வித்தைகளிலெல்லாம் அவ்வளவு திறமை ஏற்பட வில்லை. கல்வியிலும் அவர்களால் தேவராஜனை விடத் தேர்ச்சி பெற முடியவில்லை. ஆனால் அரசன் அவர்களுக்குத்தான் ராஜ்யத்தைக் கொடுக்க விரும்பினான். தேவராஜனை எப்படியாவது துரத்தி விடவேண்டும் என்று நிர்மானித்தான்.

ராஜ குமாரர்களுக்கு விவாக வயது வந்தது. அரசன் தன் குமாரர்களுக்கு நல்ல ராஜ குடும்பத்தைச் சேர்ந்த அழகான பெண்ணைக் கல்யாணம் செய்ய வேண்டும் என்று விரும்பினான். ஆனால் தேவராஜனுக்கு ராஜ குடும்பத்துப் பெண்ணை மணம் செய்து வைக்க அவனுக்கு விருப்பமில்லை. ஆகவே அதற்காக அரசன் ஒரு சூழ்ச்சி செய்தான்.

மூன்று ராஜகுமாரர்களும் அரண்மனை மாடியிலிருந்து மூன்று திக்குகளை நோக்கி வில்லை வளைத்து அம்பு எய்ய வேண்டியது. அந்த அம்பு எய்த இடத்தில் இருக்கும் பெண்ணை மணந்து கொள்ள வேண்டியது என்று ஏற்பாடு செய்தான். கருணாகரனும் பிரபாகரனும் அம்பு எய்ய வேண்டிய இடத்தைச் சமீபமாக இருக்க ஏற்பாடு செய்தான். அந்த இடங்களில் இரண்டு அழகான ராஜகுமாரிகள் தனித் தனியாக தங்கள் பரிவாரங்களுடன் தங்கும்படி ஏற்பாடு செய்தான்.

இந்தச் சூழ்ச்சி ஒன்றும் தேவராஜனுக்குத் தெரியாதாகையினால் அவன் பலமாகத் தன் வில்லை நாணேற்றி அம்பை எய்தான். அது வான வீதியில் 'விர்'ரென்று பறந்து கண்ணுக் கெட்டாத தூரத்தில் சென்று மறைந்தது.

கருணாகரனும் பிரபாகரனும் எய்த அம்புகள் அரசனுடைய ஏற்பாட்டின்படி அந்தந்த ராஜகுமாரிகள் இருந்த பக்கமாகச் சென்று விழுந்தன.

தேவராஜன் எய்த அம்பு மிகத் தூரத்துக்குச் சென்று விடவே, அந்த அம்பு விழுந்த இடத்தைக் கண்டு பிடிக்கும் பொருட்டு தேவராஜன் ஒரு குதிரையின் மீது பிரயாணம் செய்ய வேண்டியதாயிற்று. அவனுடன் ராஜசபைப் பிரமுகர்களும் ரதங்களில் ஏறிக் கொண்டு தொடர்ந்தனர்.

(அடுத்த இதழில் முடியும்)

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

# ஏப்ரல் ஆண்டு மலர்

## வைஜயந்திமாலாவின்

### நாட்டிய

# மாலா

சிறந்த தமிழ் நாவல் பத்திரிகை

★

நிர்வாக ஆசிரியர் :

**எம். டி. ராமன்**

ஆசிரியர் :

**எஸ். எஸ். சர்மா**

★

**ஆண்டு மலர் விலை ரூ. 1-0-0**

வருட சந்தா ரூ. 6-0-0 அனுப்புகிறவர்களுக்கு மட்டும் ஆண்டு மலர் இனாம்

★

மலரின் அம்சங்கள் :

கிளேஸ் காகிதங்கள்
மலரின் பரிசு நாவல்
கருத்துள்ள கதைகள்
சங்கீத நவரத்தினங்கள்
மதராஸ் பிரமுகர்கள்
பம்பாய் காட்சிகள்
ஆர்ட் வர்ணப் படங்கள்
சினிமா காட்சிகள்

**பணச் செலவு இல்லாமல் ரூ. 100 தரும் பரிசு.**

எமது ஏஜண்டுகள் இல்லாத ஊர்களில் தனி ஏஜெண்டுகள், கமிஷன் நீங்கி தொகை அனுப்பி மலர் பெற்றுக் கொள்ளலாம்.

★

விவரங்களுக்கு :

**நாட்டியமாலா**

3/4, எல்டாம்ஸ் ரோடு,

தேனாம்பேட்டை, மதராஸ்-18

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

# நரைமயிர் நிரந்தரமாக போய்விட்டது



# ஹென்னல்

நிரந்தரமாக நரையை நீக்குகிறது

Pearline Paris Ltd.
P.O. Box 493
Bombay.




விடிந்தால் என் அண்ணாவின் குழந்தைக்குக் காப்பிடுவதாக இருந்தது. வீட்டில் ஒரே பரபரப்பு. எனக்கோ பகல் முழுவதும் அலைந்த களைப்பு. அம்மாவிடம் சொன்னேன். "சற்று நிம்மதியாய்த் தூங்கினால் நல்லது என்று படுகிறது. ஆனால் படுப்பதற்குத்தான் வசதியான இடத்தைக் காணோம்" என்றேன்.

"ஆமாம், அம்மா! நீயும் கூட்டத்தோடு கூட்டமாக அலைந்து படுத்துவிடாதே! அதெல்லாம் உன் உடம்புக்கு ஒத்து வராது. என்னுடைய மாடி அறைச் சாவியைத் தருகிறேன். போய்ச் சற்றுப் படுத்துக் கொள்" என்றாள் அம்மா.

அறையைத் திறந்தவள் மின்சார விளக்கைப் போடுவதற்குக் கூடச் சோம்பல் கொண்டவளாய் அம்மாவின் கட்டிலின் மேல் அப்படியே சாய்ந்தேன். தன்னை மிஞ்சிய அலுப்பு நிமிஷத்தில் கண்ணைக் கிறக்கிற்று.

'கடக்' என்ற சத்தம் கேட்டுத் திடுக்கிட்டு விழித்துக் கொண்டேன். கண்ணைத் திறந்து பார்த்தபோது எதிரே விளக்கு வெளிச்சம் தெரியவில்லை. கீழே இருந்து ஆரவார சப்தம் மட்டும் கேட்டுக் கொண்டிருந்ததே தவிர மாடி முழுவதும் ஒரே இருட்டு மயமாக இருந்தது. அம்மா எழுந்து ஏதாவது எடுக்க வந்திருந்தால் விளக்கைப் போடாமலா வந்திருப்பாள்! ஒருவேளை எலியின் உபத்திரவமாக இருக்கலாமோ என்று நினைத்து விளக்கைப் போட்டுப் பார்த்தேன். ஒன்றையும் காணோம். உடனே அலுப்புடன் வந்து படுத்தேன். ஆனால் விளக்கை மட்டும் அணைக்கவில்லை. சற்று நேரத்துக்கெல்லாம் மீண்டும் அதே சத்தம் கேட்டது. உடனே பரபரப்புடன் எழுந்தேன்.

சத்தம் அம்மா பீரோவின் அடியிலிருந்து கேட்பதைப் போல் தோன்றவே குனிந்து பார்த்தேன். யானை முடி வளையல் ஒன்று பீரோவின் கீழே உருண்டு கிடந்ததைத் தவிர வேறொன்றையுமே காணவில்லை. அம்மா நகைகள் எடுத்தபோது வளையல் நழுவிக் கீழே விழுந்திருக்க வேண்டும். மறதியாக விட்டுப் போயிருப்பாள் என்று நினைத்துப் பக்கத்திலிருந்த மேஜையின் மேல் வைத்துவிட்டு மீண்டும் படுக்கைக்குச் சென்றேன். "ஏன் விமலா! நீ கூடவா என்னைப் புறக்கணித்து விட்டுப் போகப் பார்க்கிறாய்!" என்ற சத்தத்தைக் கேட்டு ஒன்றும் புரியாமல் விழித்தேன். "ஏன் திகைக்கிறாய் விமலா! நான்தான்!" என்று மீண்டும் அதே குரல் கணீரென்று சொல்லியது.

"என்ன! வளையல் அல்லவா பேசுகிற மாதிரி இருக்கிறது!"

"ஆம். வளையலேதான் பேசுகிறேன். உம். உனக்குக்கூட நான் பேசுவது வேடிக்கையாக இருக்கிறது இல்லையா! நானும் இருக்கிற நிலையிலிருந்தால்..."

"ஏன்! உன் நிலைக்கென்ன!" அதனுடன் பேச்சுக் கொடுக்கத் துணிந்தேன்.

"என் வாழ்க்கை முழுவதையும் விவரமாகக் கூறினாலல்லவா இன்றைய நிலையைப் புரிந்து கொள்ள முடியும்!"

"உன் வரலாறு முழுவதையும்தான் விவரமாகச் சொல்லேன். நான் கேட்கிறேன்" என்றதும் உற்சாகத்தினால் ஒரு துள்ளுத் துள்ளியது வளையல். துள்ளிய வேகத்தில் உருண்டு என் மடியிலேயே வந்து விழுந்துவிட்டது. எடுத்துப் பார்த்தேன் கருகருவென்றிருந்த யானையின் முடியை, அதாவது அதன் வால் மயிரைத் தங்கத்துள் பொதிந்து அழகான வளையலாகச் செய்திருந்த ஒரு ஜோடி வளையலையும் ஒரு நூலால் ஒன்றாகச் சேர்த்து முடிபோட்டிருந்தது. வளையல் மிகவும் பழமை



"ஏன் அப்பா, 'என் நாத்தனார்' என்று ஒரு சினிமா வந்திருக்கிறதே! அதில் மனிதன் உயருவதற்கு ஏதாவது இருக்கிறதா?"

"மனிதன் உயருவதற்கு அந்தப் படத்தில் ஒன்றும் இல்லை. அப்படி உயர வேண்டுமானால் ரூ. 2-8-0 கொடுத்து 'பால்கனி' யில் தான் உட்கார வேண்டும்!"

யானது போலிருந்தது. ஆனாலும் அதன் அழகு மாறாமலிருந்ததைக் கண்டு அதிசயித்தேன்.

"என்ன அழகான பூவேலை!" என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன். அதன் அழகின் பிரமிப்பில் சற்று வாய்விட்டுச் சொல்லிவிட்டேன் போலிருக்கிறது.

"நீயாவது எங்களை அழகு என்று ஒப்புக் கொள்கிறாயே, அதுவே போதும்" என்றது ஒரு வளையல்.

"ஏன், வளையலைப் பார்த்த யாருக்குமே அப்படித்தான் தோன்றும்..." என்றேன்.

"உன் அம்மாவுக்கு அப்படித் தோன்றியதாகத் தெரியவில்லையே!"

"என் அம்மாவுக்கு அழகு என்று தோன்றுமலா உன்னைச் சிருஷ்டித்து வைத்திருக்கிறாள்!"

"உம்...அந்தக் காலமா இப்போது!"

"அந்தக் காலம் அந்தக் காலம் என்று பெருமையடித்துக் கொள்கிறாயே, அந்தக் காலத்தைத் தான் சற்று விரிவாகச் சொல்லேன் பார்ப்போம்."

"சொல்லட்டுமா!" என்று இரண்டும் ஏக காலத்தில் குதித்தன. "ஒவ்வொருவராய்ச் சொல்லுங்கள் போதும்" என்றதும் வலது கை வளையல் தொடங்கியது. ஏனென்றால் வலது கை வளையல் யாருக்குமே சற்றுப் பெரிதாக இருக்கும். அதனால் தன்னைப் பெரிதாக நினைத்துக்கொண்டு ஆரம்பித்தது வலது கை வளையல்.

"உன் அண்ணாவின் குழந்தைக்குத்தானே நாளைக்குக் காப்பு இடப்போகிறார்கள்! உன் அண்ணா பாபு இருக்கிறானே அவனுக்காகச் சிருஷ்டிக்கப்பட்டவர்கள் நாங்கள்.

"அப்பொழுது உன் அம்மா பிறந்த வீட்டில் பிரசவித்திருந்தாள். குழந்தைக்குப் புண்யாவாசனத்தன்று நாலைந்து வளையல்கள் வெகுமதியாக வந்திருந்தன. முப்பது நாளைக்குள் பாபு திருதிருவென்று வளர்ந்துவிட்டான். அப்பொழுது உங்கம்மா குழந்தையின் கையில் இருந்த வளையல்களை அழித்து அதன் கைக்கிசைந்தாற்போல் சற்றுப் பருமனாகச் செய்ய வேண்டுமென்று சொன்னாள். அப்போது உங்கம்மாவின் பாட்டி வந்தாள். தன் பெட்டியில் பல வருஷங்களாகப் பத்திரப்படுத்தி யிருந்த என்னை தூக்கித் வந்து 'இந்தாடி பெண்ணே, வளையல் செய்வது தான் செய்யப் போகிறாய். அதோடு இந்த யானை முடியையும் ஒரு வளையலோடு சேர்த்துச் செய்து போடு. குழந்தைக்குச் சீர் தட்டாது' என்றாள்.

"சீரோ குணமோ அதெல்லாம் ஒன்றும் தெரியாது உங்கம்மாவுக்கு. குழந்தையின் சிவந்த மேனிக்குக் கருகருவென்றிருந்த என்னை அணிந்து பார்க்க ஆசை கொண்டாள். மறு கணமே வளையல்கள் ஆசாரியின் கைக்கு மாறிவிட்டன.

"தளதளவென்றிருந்த பாபுவின் கைகளில் நான் சரணடைந்த போது எனக்கு ஒரே உற்சாகமாக இருந்தது. அதற்கிசைந்தாற் போல் குழந்தையைப் பார்க்க வருகிறவர்களெல்லாம் குழந்தையின் சிவப்புக்கும் வளையலின் கறுப்புக்கும் என்ன பொருத்தமாக இருக்கிறது என்று வர்ணிக்கும் போது உங்கம்மாவை விட எனக்குத்தான் ஒரே ஆனந்தமாக இருக்கும்.

"ஆனால் இதற்கெல்லாம் நேர் மாறானவர் போலிருக்கிறது உன் அப்பா. குழந்தையை எடுத்துக் கொண்டு வீட்டிற்கு வந்தபோது ஆசையுடன் என்னைப் பார்த்ததும் என் அழகையும் என்னைச் சிருஷ்டித்த ஆசாரியையும் இதற்கெல்லாம் யோசனை சொன்ன மனைவியையும் வாயார வாழ்த்தப் போகிறார் என்கிற பெருமிதத்தில் திளைத்துப் போயிருந்தேன். ஆனால் அவரோ 'இதென்ன வளையல் புதிதாகச் செய்து வந்திருக்கிறாய் கரு நிறத்தில்!' என்றார். அதைக் கேட்டு என் மனசு என்ன பாடுபட்டிருக்கும் என்று நீயே ஊகித்துக் கொள். கரு நிறம் ஒன்றுதான் அவர் கண்ணில் பட்டிருந்தது. கருநிறத்தின் அழகும் அதன் அழகை எடுத்துக்காட்டப் பொன்னால் செய்திருந்த பூவேலையும் அவர் கண்ணில் படவில்லை போலும்.

"'ஏன், வளையல் குழந்தைக்கு அழகாயில்லையா!' என்று பெருமையுடன் கேட்டாள் உங்கம்மா.

"'ரொம்ப அழகாய்த்தானிருக்கிறது. பொன்னை அப்படியே செய்து போட்டுக் கொண்டால் பளபளப்பு குறைந்து விடுமென்று அதனோடு யானை முடி, பாசி ரப்பர்...இப்படி எதையாவது போட்டுக் கொள்வதுதான் பெரிய பேஷனோ! நன்றாய் வந்தது பேஷன்..."

"'பாஷனோ இல்லையோ... குழைந்தைக்குச் சீர் தட்டாது என்பதற்காகப் பாட்டி போடச் சொன்னாள்..."

"'சீருமாச்சு செனத்தியுமாச்சு. உனக்கு எதையாவது மாற்றிக் கொண்டே யிருக்க வேண்டும். சரி, சரி, குழந்தையை எடு. நான் வெளியில் போக வேண்டும்' என்று சொல்லி விட்டுப் புறப்பட்டுவிட்டார் உன் அப்பா.

"நல்ல வேளை! இந்த மட்டும் பாராட்டுக் கிடைக்காவிட்டாலும், என்னால் அவர்களுக்குள் சண்டை மூளாமலிருந்ததே! அதுவே போதும்! என்று திருப்தி பட்டுக் கொண்டேன்.

இதற்குள் இடது கை வளையல் ஒரு துள்ளுத் துள்ளியது. "நீயே கம்மா கதையளந்து கொண்டு போகிறாயே. நானும்தான் கொஞ்ச நேரம் பேச

வேண்டாமா !'' என்றதும் ''சரி, மிருதியை நீதான் சொல்லேன்'' என்று அதற்கு அனுமதி கொடுத்தேன்.

உற்சாகத்தால் ஒரு துள்ளல் துள்ளிக் கொண்டு ஆரம்பித்தது இடதுகை வளையல்.

''பாபு ஆறு மாதத்தில் செக்கச் சிவக்க தளதள வென்று 'செலுலாயிடு' பொம்மை மாதிரி இருந்தான். மற்ற வளையல்களெல்லாம் கையைப் பிடிக்கிற தென்பதற்காகக் கழற்றிவிட்ட உன் அம்மா எங்களுக்கு மட்டும் சுயராஜ்யம் கொடுத்திருந்தாள். குழந்தையின் கை மூளியாக இராமல் இது மட்டும் இன்னும் கொஞ்ச நாளைக்கு இருக்கட்டு மென்று சொன்னபோது பூரிப்பு தாங்க மாட்டாமல் ஜொலித்து கொடுத்தோம். பல வளையல்களினூடே பார்வை குன்றிப் போயிருந்த எங்களுக்கு இப்பொழுது தனி ராஜ்யம் கிடைத்ததும் ஒரே உற்சாகமா யிருந்தோம். அந்த உற்சாகமெல்லாம் உன் அப்பா ஆபீஸிலிருந்து வரும் வரையில்தான்.

'' 'குழந்தையின் கையிலிருந்த வளையலெல்லாம் எங்கே! ஏன் இப்படி வெறிச்சோடிப் போயிருக்கிறது!' என்றார் உன் அப்பா.

'' வெறிச்சோடிப் போயிருக்கிறதாம். நாங்கள் கொடுக்கிற அழகு அவர் கண்ணுக்குப் படவில்லை போலிருக்கிறது.

'' 'கையைப் பிடிக்க ஆரம்பித்தது. அதனால் கழற்றி விட்டேன்' என்றாள் உங்கம்மா.

'' 'இதைமட்டும் ஏன் போட்டு வைத்திருக்கிறாய்! இதுவும்தான் பிடிப்பா யிருக்கிறது.'

'' 'இதையும் சேர்த்துக் கழற்றிவிடு. இன்னும் சில நாள் போனால் ஆசாரி வந்துதான் வெட்டியெடுக்க நேரிடும்' என்று அவர் சொன்னதைக் கேட்டு என் உடம்பு நடுங்கியது. இவர் குழந்தைக்கு அழகு செய்த தண்டனைக்காக வெட்டுப்பட வேண்டுமா என்பதை நினைத்தபோது என் உள்ளம் துடித்தது. இதற்காக அன்று மாலை குழந்தைக்கு எண்ணெய் தேய்த்து விடும்போது மனமுருகி நழுவிக் கீழே விழுந்து விட்டேன்.

'' 'பார்த்தேனோ! நீங்களும் சொன்னீர்கள்; வளையலும் ரோஷத்துடன் கழன்று கீழே விழுந்து விட்டது'' என்றாள் உங்கம்மா.

'' உங்கம்மாவுக்கு எப்படியோ எங்கள் உள்ளத் துடிப்பு தெரிந்துதானிருந்தது. உங்கப்பாவுக்கும் அது தெரிந்திருந்தால்......'' என்று சொல்லி அந்த வளையல் ஒரு பெருமூச்சு விட்டது.

'' ஏன் பெரு மூச்சு விடுகிறாய்! உன்னால் சொல்ல முடியவில்லையானால் நான் சொல்லுகிறேன்'' என்று கூறித் தொடர ஆரம்பித்தது வலது கை வளையல்:

'' வாஸ்தவம்தான்! அந்த அழகுப் பதுமைக் கரங்களில் சோபிக்க முடியாமல் உன் அம்மாவின் பெட்டிக்குள் தகர டப்பாவில் அடக்கமானதிலிருந்து வாழ்க்கையே சூனியமாகப் போய் விட்டது போலிருந்தது. நல்லகாலமாக எங்களுக்கு அதிக நாள் சிறைவாசம் காத்திருக்கவில்லை.

'' பின்னும் ஒரு வருஷத்தில் மற்றொரு தளிர்க் கரங்கள் எங்களை ஏற்கக் காத்திருந்தபோது பெரிதும் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினோம். பாபுவுக்குத் தங்கை...... அவனைப்போலவே இவளும் அழகுச் சிகரமாக இருப்பாள் என்று எண்ணி இறுமாந்திருந்தோம். ஆனால் குழந்தையின் காப்பிடலுக்கு வந்திருந்தவர்கள் பேசிக் கொண்டதிலிருந்துதான் உண்மையை அறிய முடிந்தது.

'' 'குழந்தையின் கரம் எது! வளையல் எது என்று தெரிந்து கொள்ள முடியவில்லையேடி!' என்றாள் ஒருத்தி. அதன் அர்த்தம் குழந்தையின் நிறம் கறுப்பு என்பதே!

'' இதைக் கேட்டதும் எனக்கோ துக்கம் மென்னியைப் பிடித்தது. பாபுவின் நிறத்திற்குப் பொருத்தமாக இருந்தோம் நாங்கள். இந்தக் குழந்தையின் நிறத்துக்கு எடுக்கவில்லை யென்றால் அது எங்கள் குற்றமா! அல்லது கறுப்பாகப் பிறந்தது குழந்தையின் குற்றமா!

''உன் அப்பாவைப் பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை யல்லவா! பாபுவின் கரங்களிலிருந்த காலத்தில் அழகு அழகு என்று எல்லாரும் சொன்ன போதே அந்த அழகு அவர் கண்ணில் படாமல் எங்களைக் கரித்துக் கொண்டிருப்பார். இப்பொழுது அழகுக் கோணலாகத் தோன்றும் எங்கள் நிலை அவர் கண்களுக்குப் படாமலா போய்விடும்!

'' 'இதோ பார், தங்கம்! எனக்கென்னவோ இந்த வளையலைக் கண்டாலே பிடிக்கவில்லை. அதன் நிறமும் அழகும்... அதோ நம் சாந்தாவுக்கு என்ன

---



பம்பாய் பயர்ஸ்டோன் தொழில் ஸ்தாபன உற்பத்திக் குறிப்பு இலாகா தலைமை அதிகாரி ஸ்ரீ P. G. மேனன் பிரண்ட்போர்ட் (இங்கிலாந்து)விலுள்ள மிகப் பெரிய பயர்ஸ்டோன் தொழிற்சாலையில் கையாளப்படும் தொழில் நுட்பங்களை நேரிடகண்டு அறியவும், மற்றுமிதர கைத்தொழில் ஸ்தாபனங்களைப் பார்ப்பதற்கும் ஏர் இந்தியா இண்டர்நேஷனல் விமான மூலம் இங்கிலாந்துக்கு சென்ற 6-3-1952ல் பிரயாணமானார்.

ஸ்ரீ மேனன் பாலக்காடு விக்டோரியா காலேஜில் படித்துப் பட்டம் பெற்று, 1940 ஜனவரி 21-ல் பயர்ஸ்டோன் ஸ்தாபனத்தில் சேர்ந்து, படிப்படியாக வேலையில் உயர்ந்து, 1948 முதல் உற்பத்திக் குறிப்பு (Production Scheduling) இலாகா தலைமைப் பதவி பொறுப்பை மிகத் திறமையாக நிர்வகித்து வருகிறார். ஸ்ரீ மேனன் இங்கிலாந்தில் இரண்டு மாதம் தங்கி, பல அரிய தொழிற் நுட்பங்களை நேரிட அறிந்து கொள்ளுவதோடு தற்போது இந்தியாவில் பயர்ஸ்டோன் தொழிற்சாலையில் வெகு சீக்கிரத்தில் உற்பத்தி செய்யவிருக்கும் பற்பல இதர பண்டங்களைப்பற்றிய தொழில் நுட்பங்களையும் அறிந்து கொள்ளுவார்.

ஸ்ரீ மேனனின் தற்போதைய பிரயாணமானது, பயர்ஸ்டோன் ஸ்தாபனத்தின் இந்திய தொழிலாளிகளை அவரவர்களின் படிப்பு, பயிற்சி, திறமைக்கேற்றபடி உயர்ந்த பொறுப்பு வாய்ந்த பதவிகளை ஏற்கும் திறமையாக ஆக்கும் பயர்ஸ்டோன் ஸ்தாபனத்தாரின் முக்கிய திட்டத்தின் ஓர் அம்சமாகும்.

விகாரமாகக் காட்டுகிறது என்கிறாய்! உடனே கழற்றி எறி! அதன் பிறகாவது குழந்தை சற்று அழகாயிருக்கிறதா என்று பார்ப்போம்' என்றார்.

"எங்களுக்கு எப்படியிருந்தது தெரியுமா! இவர் குழந்தை அழகாயில்லையென்றால் அது எங்கள் தவறு......! எப்படி அவரிடம் கேட்க முடியும்! வாயில்லா ஜீவன்கள்தானே நாங்கள்!

"ஆயிரம் பேர் போற்றிய அதே வாயால் இப்பொழுது பதினாயிரம் பேர் தூற்றும்போது கேட்டுக் கொண்டிருக்க உங்கம்மாவுக்கே பொறுக்கவில்லை போலும். ஆகவே எங்களை அகற்ற வந்தபோது நாங்களாகவே கழன்று விட்டோம்."

"மீதியை நான் சொல்லுகிறேன், விமலா!" என்று தொடங்கியது இடது கை வளையல்.

"சொல்லு, சொல்லு, சீக்கிரம் சொல்லு! விடியப் போகிறது. நான் கீழே போகணும். அதோ மேளச் சத்தம் கூடத் தொடங்கி விட்டது, பார்!" என்றேன். அப்பொழுதுதான் நாயனக்காரன் கொளு மேளத்திற்குச் சுருதி கூட்டிக் கொண்டிருந்தான்.

"பிறகு என்ன, வருஷம் ஒரு குழந்தையாக அந்த வீட்டில் தோன்றுவதும் உங்கம்மா எங்களை எடுத்து ஆசையோடு அந்தக் குழந்தைகளுக்குப் பூணுவதும் வழக்கம்போல் உங்கப்பா ஏதாவது முரண்பேசிக் கழற்றி எறிவதுமாக வருஷம் எட்டு ஓடிவிட்டது. ஒவ்வொரு சமயம் உங்கப்பா பேசுகிற பேச்சு பொறுக்க முடியாமல் தரையில் முட்டிக் கொள்வோம். மோதிக் கொள்வோம் குழந்தையின் கையோடு சேர்ந்துதான். ஐயோ பாவம் ஒன்றுமறியாத சிசுவின் கரங்களை நோகச் செய்கிறோமே என்று அனுதாபம் தோன்றுவதுண்டு. எங்களைக் கொடுமைப் படுத்துகிறவரின் குழந்தை தானே நன்றாக அழட்டுமே என்று பின்னும் பலமாக முட்டிக் கொள்வோம். குழந்தை 'வீல்' என்று அலறும்.

"இன்னொரு தடவை உங்கப்பா என்ன சொன்னார் தெரியுமா! குழந்தைகள் நகை என்று வீட்டில் 'ஸ்டாக்' இருப்பதால்தான் இவருக்கு அதிகக் குழந்தைகள் பிறந்துவிட்டனவாம். இதனால் வீட்டிலிருக்கிற குழந்தை நகைகளை யெல்லாம் அழித்து விட வேண்டு மென்று ஒரு நிலையாய் நின்றார். இதை அவர் சொன்னபோது எங்களுக்குச் சிரிப்பாய் வந்தது. எங்களை அழித்துவிட்டால் மட்டும் இவருக்குக் குழந்தை பிறப்பது நின்று போய் விடுமா என்ன!

"விளையாட்டுக்குத்தான் அப்படிச் சொன்னார் என்று நினைத்தேன். மறுநாள் நிஜமாகவே ஆசாரியை அழைத்துக் கொண்டு வந்து நிறுத்தியும் விட்டார். அப்பொழுது நீ உன் அம்மாவின் வயிற்றில் ஆறோ ஏழோ மாதம். உங்கம்மாவுக்கோ அழுகையாக வந்தது. அழுவதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும் அந்த அம்மாவால்! உங்கப்பா பிடித்தால் ஒரே பிடி என்பதுதான் பிரசித்தமாயிற்றே! புருஷன் என்னதான் சமர்த்தராக இருந்தாலும் ஒரு பெண்ணிடம் ஏமாறத்தான் வேண்டு மென்பதை உங்கம்மா நிரூபித்து விட்டாள். என்ன சாமர்த்தியமாகச் செய்து விட்டாள் தெரியுமா! எங்களை மட்டும் தனி டப்பாவில் போட்டு பீரோவின் அடியில் மறைத்து விட்டு மற்றவைகளை யெல்லாம் நிறுத்துக் கொடுத்து ஒரே சங்கிலியாகச் செய்யச் சொல்லி விட்டாள்."

"இப்பொழுது இந்த வீண் பேச்சு எல்லாம் என்னத்துக்கு! நான் முடித்து விடுகிறேன் கேள், விமலா!" என்றது வலது கை வளையல்.

"நானும்தான் பார்க்கிறேன். இந்த வீட்டில் எத்தனையோ சின்னஞ் சிறு குழந்தைகள் பிறந்து விட்டன. உன் அண்ணா பாபுவின் மனைவிக்கு ஒன்றாவது தங்கினால்தானே! ஏனென்று கேட்கிறாயா! எங்களுடைய சாபம்தான். இல்லை...... இல்லை...தப்பு...என் அருமை பாபுவின் குழந்தைக்குச் சாபமிட எங்கள் மனம் துணியுமா! எத்தனை அடக்கியும் எங்களை அறியாமலே வெளிவரும் பெருமூச்சுதான் காரணமாயிருக்க வேண்டும். எங்களுக்கு நீண்ட சிறைவாசத்திலிருந்து விடுதலை கொடுத்தால் இந்த வீட்டில் மீண்டும் குழந்தைகள் விருத்தியாகும்" என்று கூறிவிட்டு 'டக்'கென்று குதித்தோடி மறைந்துவிட்டன வளையல்ஜோடிகள்.

* * *

"தனி அறை கிடைத்ததென்று சுகமான நித்திரையிலாழ்ந்து விட்டாயோ, விமலா! கீழே தடபுடல் படுகிறது காதில் விழவில்லையா! நீ எப்போ குளித்து அத்தைக் காப்பு போட வரப் போகிறாய்!" என்று எழுப்பினாள் அம்மா.

"அம்மா, உன் பீரோ சாவியைக் கொடேன்!" என்று நான் கேட்டபோது அம்மாவுக்கு வியப்பாகப் பட்டிருக்க வேண்டும். "பீரோவில் என்ன எடுக்கப் போகிறாய்!" என்ற கேள்வியோடு சாவியை என் கையில் போட்டாள்.

பாண்டு வாத்யம் ஊரையே கிடுகிடுக்கச் செய்தது. நாயனக்காரரோ ஸ்வரத்தை வெளுத்துக் கட்டிக் கொண்டிருந்தார். என் பெற்றோர்கள், தாத்தா பாட்டியாகிவிட்ட பெருமிதத்தில் மூழ்கிப் போயிருந்தார்கள். குழந்தையின் பெற்றோரைப் பற்றியோ கேட்க வேண்டியதில்லை. இந்த உலகத்தையே மறந்து ஒரே பரவச நிலையிலிருந்தார்கள் என்றுதான் சொல்லவேண்டும். வந்திருந்த சுற்றத்தார்களோ தங்கள் பாஷன்களை ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொள்வதிலும் குசலப்பிரச்னம் மாற்றிக் கொள்வதிலும் பொழுதைப் போக்கினார்கள். "ஏனோ குழந்தையே தங்கவில்லை. இதற்கு ஏதாவது பரிகாரமிருந்தால் அதையும் இதோடு சேர்த்து..." என்று இழுத்தாள் அம்மா. "ஏதாவது பெருகின குடும்பத்து நகை, முக்கியமாக வளையல் இருந்தால் முதலில் போட்டு விட்டு மேலே நடத்தலாமே" என்றார் புரோகிதர்.

"பெருகின குடும்பம்! நம்ம குடும்பம் பெருகிய குடும்பந்தான். ஆனால்......" அப்பாவின் கண்களில் நீர் துளித்தது. அம்மா எதையோ சொல்வதா வேண்டாமாவென விழித்தாள்.

அவசர அவசரமாகக் கையிலிருந்த பொட்டலத்தைப் பிரித்தேன். என்னிடம் முறையிட்டுக் கொண்ட யானை முடி வளையலைக் குழந்தையின் கைகளில் அணிவித்தபோது யாவரும் அதிசயித்துப் பார்த்தனர் என்னை. அவர்கள் பார்வை படவில்லை என் நெஞ்சில். அந்த அழகு வளையல்கள் சிறை நீங்கி ஆனந்த நடனமிடும் காட்சி என் மனக் கண்முன் தோன்றியது. அப்பொழுதுதான் தெரிந்திருக்க வேண்டும் என் அம்மாவுக்கு, சாவி ஏன் கேட்டேனென்று.

"என்ன இருந்தாலும் என் விமலி முன்யோசனைக்காரிதான்! எனக்குக்கூட நம் குடும்பத்தில் வெகு காலமாக 'ஆகி வந்த' இந்த வளையலைப் பற்றி நினைவே யில்லை!" என்று போற்றினாள் அம்மா... அப்பா கூடத் தன் வர்மத்தை மறந்து விட்டு அந்த வளையலணிந்த பேரனை ஆசையுடன் தூக்கிக் கொண்டாரென்றால் மற்றவர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா!




அழகி என்பதில் ஐயமில்லை; அவள் அறிவும் இருவருக்குப் போதுமானது! இந்த ஸ்வப்ன ஸௌந்தரிக்கு சமையல் மட்டும் தெரிந்து இருந்தால் ......... பேஷாகத் தெரியும். சொல்லப் போனால் அவள் பாக சாஸ்திர மேதை ......... அவள் சமையல் திறனை வளர்த்தது




தயாரிப்பு :

மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்பொரேஷன் லிட்.

மேட்டூர் அணை R. S. :: சேலம் ஜில்லா

மானேஜிங் ஏஜண்டுகள் :

சேஷசாயி பிரதர்ஸ் லிமிடெட்

திருச்சிராப்பள்ளி

பூரண விற்பனை ஏஜண்டுகள் :

அல்லைட் இண்டஸ்ட்ரியல் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் லிமிடெட்

120, அரமனைக்காரத் தெரு,

மதராஸ்




அன்று ஆபீஸை விட்டுப் புறப்பட்டதும் நேரே சென்ட்ரல் ஸ்டேஷனுக்கு வந்து பெரம்பூருக்குப் போகும் ரயிலில் ஏறி உட்கார்ந்தேன். நான் ஏறியிருந்த பெட்டியில் அன்று கூட்டம் இல்லை. நானும் இன்னொரு பெரியவரும்தான் இருந்தோம்.

வண்டி புறப்படுவதற்கு இன்னும் சில நிமிஷங்களே இருந்தன. அச்சமயம் இன்னொரு வாலிபன் வந்து நாங்கள் இருந்த பெட்டியில் ஏறினான். அவனுக்கு வயது இருபத்துமூன்று இருக்கும். 'ப்யூக்' காரின் மேற்புறம் மாதிரி கிராப்பை மழுமழு வென்று படிய வாரி விட்டிருந்தான். அவன் முகத்திலும் நல்ல வசிகரம் இருந்தது.

பெரியவர், தம் எதிரில் உட்கார்ந்த அவனை ஏற இறங்கப் பார்த்தார். பிறகு ஒரு முறை தொண்டையைக் கனைத்துக் கொண்டார்.

"ரயில் புறப்படுவதற்கு இன்னும் நேரம் ஆகுமோ?" என்று பெரியவர் வாலிபனைப் பார்த்துக் கேட்டார்.

அவன், "இல்லை, புறப்படுகிற நேரந்தான்!" என்றான். வண்டியும் நகர ஆரம்பித்தது.

"நீங்கள் எதுவரையில் போகிறீர்கள்?" என்று கேட்டார் பெரியவர்.

"வில்லிவாக்கம்" என்றான் வாலிபன்.

"பட்டணத்தில் உத்தியோகமோ?" என்று கேட்டார் பெரியவர்.

"ஆமாம். ரயில்வேயில் குமாஸ்தாவாக இருக்கிறேன்"—என்று அவருடைய அடுத்த கேள்விக்கும் சேர்த்துப் பதில் சொன்னான்.

"உங்களுக்குச் சொந்த ஊர் எதுவோ?" என்று கேட்டார் பெரியவர்.

"திருச்சி ஜில்லா" என்றான் வாலிபன்.

"திருச்சி ஜில்லாவில் எந்த ஊர்?"

"குளித்தலை."

"தாயார் தகப்பனார் இருக்கிறார்களா?"

"இருக்கிறார்கள்."

"தகப்பனாருக்கு என்ன வேலை?"

"பள்ளிக்கூடத்தில் தலைமை உபாத்தியாயராயிருக்கிறார்."

"உங்கள் தகப்பனார் பெயர்?"

"சங்கர நாராயணய்யர்!"

சரமாரியான இந்தக் கேள்விகளுக்குப் பிறகு, பெரியவரின் குறுக்குக் கேள்விகள் ஆரம்பமாயின. வாலிபன் அவருக்கு நாடகப் பாணியில் பாதிக் கேள்வியிலேயே மடக்கிப் பதிலளித்த தோரணை சுவாரஸ்யமாயிருந்தது.

பெரியவர் ஆரம்பித்தார்: "வில்லிவாக்கத்தில் உங்களுடைய..."

வாலிபன் முந்திக் கொண்டு "...பந்துக்கள் இருக்கிறார்கள்!" என்றான்.

"உங்களுடன் பிறந்த..." என்று பெரியவர் ஆரம்பித்ததும் இளைஞன்... "தங்கைகள் இரண்டு பேர், தம்பிமார்கள் இரண்டு பேர்" என்று வாக்கியத்தை முடித்தான்.

"உங்களுக்கு மேலே...?"

"...இல்லை. நான்தான் மூத்தவன்..."

"நீங்கள்...காலேஜிலே..."

"...பி. ஏ., பாஸ் செய்திருக்கிறேன்!"

"உங்கள் தங்கைகளுக் கெல்லாம்..." என்று தொடங்கினார் பெரியவர்.

"...கல்யாணம் ஆகிவிட்டது" என்று முடித்தான் இளைஞன்.

பெரியவர் முகம் மலர்ந்தது.

"உங்கள் பெயர்?"

"கல்யாணராமன்."

பெரியவர் புன்முறுவலுடன், "நல்ல பெயர்! உம். உங்களுடைய..." என்று ஏதோ கேட்க ஆரம்பித்தார்.

உடனே கல்யாணராமன் இடைமறித்து "வாதூல கோத்திரம்!" என்றான்.

"ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. எனக்கு ஆத்திரேய கோத்திரம். இப்படியல்லவா வாய்க்க வேண்டும்!"

கல்யாணராமன் நாசுக்காக ஒரு சின்னச் சிரிப்புச் சிரித்தான்.

பெரியவர் முகத்தில் அளவு கடந்த மகிழ்ச்சி பொங்கியது.

"மிஸ்டர் கல்யாணராமன், தயவு செய்து உங்கள் தகப்பனாருடைய......!"

"......விலாசந்தானே? பேஷாய்த் தருகிறேன்!" என்று சொல்லி விட்டுக் கல்யாணராமன் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு சின்னக் காகிதத் துண்டில் எழுதிக் கொடுத்தான்.

பெரியவர் "மிஸ்டர் கல்யாணராமன்!" என்று அழைத்துக் கொஞ்சம் தயங்கினார். பிறகு, "...உங்களுக்கு......!" என்று ஆரம்பித்தார்.

"...கல்யாணம் ஆகி விட்டது! மூன்று மாசம் ஆகிறது" என்று கல்யாணராமன் அந்த வாக்கியத்தைப் பூர்த்தி செய்தான்.

அதற்குள் வண்டி பெரம்பூர் ஸ்டேஷனில் வந்து நின்றது. நான் கீழே இறங்கினேன். வண்டி நகர்ந்தது. வண்டிக்குள் இருந்த பெரியவர் முகத்தைப் பார்க்க முடியவில்லை.




## 17. பழி தீர்ந்தது!

சிவப்பிரகாசம் பொன்னி பத்திரமாக ஒளிந்து கொண்டு விட்டாள் என்பதை அறிந்ததும் தைரியமடைந்தார். பிறகு அவர் அறை வாசற்படியில் நின்று கொண்டிருந்த மரகதத்தை நோக்கி, "மரகதமா! வா, நான் கூடத் தூங்கவில்லை" என்றார்.

மரகதம் அந்த அறையைச் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டே உள்ளே நுழைந்தாள். அவளுக்குப் பின்னால் செங்கம்மாவும் நின்று கொண்டிருந்தாள். சட்டென்று மரகதம் திரும்பிச் செங்கம்மாவிற்குக் கண் ஜாடை காட்டினாள். அதை அறிந்து கொண்ட செங்கம்மா அந்த அறையின் கதவைச் சாத்தி உள்புறம் தாளிட்டாள்.

அந்த அறையிலிருந்த விளக்கின் மங்கிய ஒளியில் அந்த இரு ஸ்திரீகளின் முகங்களும் கற்பாறை போல் ஜீவனற்றுக் கோரமாகத் தென்பட்டன. அதைக் கண்ட சிவப்பிரகாசத்தின் மனத்திலும் திடீரென்று ஏதோ ஒரு வகையான பயம் எழுந்தது. அவர் அதை வெளியே காட்டிக் கொள்ளாதவர் போல், "என்ன மரகதம்...!" என்றார் சகஜமான குரலில்.

"இந்த அறையிலிருந்து ஏதோ பேச்சுக் குரல் கேட்டது போலிருந்ததே! யாராவது இங்கு வந்து பேசிக் கொண்டிருந்தார்களா!" என்று மரகதம் சற்றுக் கடுமையான குரலில் கேட்டாள்.

"பேச்சுக் குரலா! இங்கு அப்படி ஒன்றுமில்லையே!" என்று சொல்லிவிட்டுத் திடீரென்று ஏதோ உணர்ச்சி வசப்பட்டவர் போல, "நான் ஏதோ பாடிக் கொண்டிருந்தேன், எனக்குள்ளாக. அதுதான் உன் காதில் விழுந்திருக்க வேண்டும். எனக்கு எப்பொழுதும் பாடுவதில் பிரியமுண்டு என்றுதான் உனக்குத் தெரியுமே! என் குரல் கூட இனிமையாய் இருக்கிறது என்று நீ எத்தனையோ தடவை சொல்லி இருக்கிறாயே! இதெல்லாம் உனக்கு ஞாபகம் இல்லையா! பழைய காலத்தை நினைத்துக் கொண்டு விட்டால் அப்பொழுது நான் பாடிக் கொண்டிருந்த இரண்டொரு பாடல்கள் இப்பொழுதும் என் ஞாபகத்திற்கு வருகின்றன. எத்தனை வருஷங்கள் ஓடி விட்டன. அப்பொழுது நீயும் நானும்..." என்று சொல்லி நிறுத்தினார்.

"நான் இப்பொழுது அதையெல்லாம் பற்றிப் பேச வரவில்லை. அந்த நாட்களெல்லாம் ஒன்றுக்குப் பின் ஒன்றாகச் செத்துவிட்டன. நான் இப்பொழுது எதற்கு இங்கே வந்தேன், தெரியுமா! இப்பொழுது நடக்கும் விவகாரங்களைப் பேசித் தீர்த்துக் கொள்ளலாம் என்று தான்" என்றாள் மரகதம் வெறுப்போடு.

சிவப்பிரகாசம் ஒரு தடவை தன் தோளை உலுக்கிக் கொண்டு கனைத்தார். அந்த அசந்தர்ப்பமான வேளையில் தடுக்க முடியாத விவாதத்திற்குத் துணிந்து நிற்பவர் போல், "சரி, நீ என்ன சொல்ல வேண்டுமென்று இங்கு வந்தாய்!" என்று கேட்டார்.

"வேதாவை இந்த இடத்திலிருந்து அழைத்துக் கொண்டு போய்விட வேண்டும் என்ற எண்ணத்தில் தானே நீ இன்னும் இருக்கிறாய்!"

"அதற்காகத் தானே நான் இங்கு வந்தேன்!" என்றார் அலட்சியமாக சிரித்துக் கொண்டே சிவப்பிரகாசம்.

மரகதம் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள். "ஹும். இதைக் கொஞ்சம் நீ யோசித்துச் செய்" என்றாள். மரகதத்தின் குரல் எச்சரிக்கை செய்வது போலிருந்தாலும் அதில் ஒரு தழுதழுப்பு இருந்தது. பீரோவிற்குப் பின்னால் ஒளிந்து கொண்டிருந்த பொன்னி இவைகளையெல்லாம் மிகவும் கவனமாக உணர முடிந்தது. "இந்தப் பதினேழு வருஷங்களாக, வேதா பிறந்த நாளிலிருந்து அவளை நானும் சாரதாவும் தான் வளர்த்து வருகிறோம். எங்கள் குடும்பத்தையே பாழாக்கிய உன்னைப் போன்ற கேவலமான மனிதனின் கண்களில் அவள் படக்கூடாது என்பதற்காகத் தான் இந்தத் தனிமையான இடத்தில், இந்தக் கட்டிடத்தில் அவளைக் கொண்டு வந்து வைத்து வளர்த்தோம். நாங்களும் அவளுடைய தாயாரும் அனுபவித்த கஷ்டங்களை அவளும் அனுபவிக்கக் கூடாது என்பதற்காகத் தான் அவளை எந்த மனிதன் கையிலும் ஒப்படைக்க நாங்கள் இஷ்டப்படவில்லை" என்றாள் மரகதம்.

"ஹும்...அப்புறம்...!" என்று உறுமினார் சிவப்பிரகாசம்.

"இதெல்லாம் பைத்தியக்காரத்தனமாய் இருக்கலாம். அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. நீ எங்களைக் கெடுத்து, அவளுடைய தாயாரையும் கொன்று விட்டாய். இந்தமாதிரி தன்மை கெட்ட எந்த மனிதன் கையிலும் வேதாவை ஒப்படைக்கக் கூடாது என்று நானும் சாரதாவும் தீர்மானம் செய்து விட்டோம். அவள் வயதில் வளர்ந்த பிறகுகூட இந்த உலகத்தில் எந்த ஆண் பிள்ளைகளின் உதவியையும் எதிர் பாராமல் இந்தக் கட்டிடத்திலிருந்து கொண்டே வாழும்படி செய்ய வேண்டும் என்பது தான் எங்கள் நோக்கம்......"

"அருமையான நோக்கம். ஆனால் சாரதா இறந்து விட்டாள். நீ எத்தனை நாளைக்கு இருந்து வேதாவை இந்த நரகத்தில் அடைத்து வைத்துக் கொண்டு பாதுகாக்க முடியும்!"

"சாரதாவின் காலம் குறுகி விட்டது. ஆனால் எங்கள் இருவரின் காலமும் ஒரே சமயத்தில் ஓய்ந்துவிடாதல்லவா! வேதாவிற்குச் சுய உணர்வு வரக்கூடிய வயதாகிவிட்டது. இனிமேல் எங்களுடைய வழியையும், எங்களுடைய கொள்கைகளையும் அவள் பின்பற்றும்படி செய்வேன். எனக்கு வயதாகிவிட்டது. இருந்தாலும் உன்னைவிட இரண்டு வயது சிறியவள்தான் நான். ஆகவே, இன்னும் சில வருஷங்களாவது உயிரோடு இருப்பேன் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. நான் சீக்கிரம் இறந்து விடுவேன் என்ற எண்ணம் எனக்கு ஏற்பட்டால் நான் வேதாவை நல்ல ஹிருதயமுள்ள ஒரு மனிதன் கையில் ஒப்படைப்பேனே தவிர, உன்னைப் போன்ற மூர்க்கன் கையில் அவளை ஒப்படைக்க மாட்டேன்......"

"நீ ஒரு பைத்தியக்காரி!"

"ஆமாம். நான் பைத்தியக்காரிதான். நான் மாத்திரமல்ல. நாங்கள் அக்கா தங்கைகள் மூவருமே பைத்தியக்காரிகள்தான். இல்லாவிட்டால் உன்னைப் போன்ற ஆண் பிள்ளையை நம்பி மூவருமே வாழ்க்கையைக் குட்டிச் சுவராக்கிக் கொண்டிருப்போமா! நான் இங்கு பேச ஆரம்பித்த பொழுது நம்முடைய பூர்வீகத்தைப் பற்றி ஞாபகப்படுத்தினாய். எல்லாம் ஞாபகத்திலிருக்கிறது. இந்த நெஞ்சு மறந்து விடுமா! இப்பொழுது அதைப் பற்றிக்கூடத் தாராளமாகப் பேசலாம். நீ என் தகப்பனாரிடம் உத்தியோகத்திற்கு வந்த பொழுது அழகும் குணமும் நிறைந்த வாலிபனைப் போலத்தான் வந்தாய். நீ ஆரம்பத்தில் நடந்து கொண்ட ஒழுங்கான முறையிலிருந்து என் தகப்பனார் உன்னிடம் நம்பிக்கையும் அன்பும் வைத்துத் தன் ஜமீன் முழுவதையும் உன் கண்காணிப்பிலேயே விட்டார். அப்பொழுது எங்கள் வீட்டில் அமைதியும் ஆனந்தமும் சூழ்ந்திருந்தன. அழகும் இளமையும், அறியாமையும் கொண்ட பெண்ணாகிய நான் உன் நயவஞ்சகக் கண் பார்வையில் சிக்கிவிட்டேன்" என்று சொல்லிச் சிறிது நிறுத்தினாள் மரகதம்.

"அதையெல்லாம் பற்றி இப்பொழுது என்ன!" என்றார் சிவப்பிரகாசம்.

"ஏன் உனக்குக் கேட்க வெட்கமாய் இருக்கிறதா! நீதானே கடந்த காலத்தைப் பற்றி ஆரம்பத்திலேயே ஞாபகப்படுத்தினாய்! நீ எத்தகைய கெட்ட எண்ணத்துடன் எங்கள் வீட்டிற்கு வந்தாயோ! என் தகப்பனார் சில நாள் பழக்கத்தில் உன்னைப் பூரணமாக நம்பிவிட்டார். நானும் சிலநாள் பழக்கத்தில் உன் மாய வலையில் விழுந்துவிட்டேன். என் தகப்பனார் உன் மனதையும் என் மனதையும் அறிந்து நமக்கு விவாகம் செய்து வைத்தார். பிள்ளை இல்லாத வீட்டிற்கு மாப்பிள்ளையாக வந்து விட்ட நீ உன் சூழ்ச்சி முறைகளையெல்லாம் காட்டத் துணிந்து விட்டாய்" என்று கூறிவிட்டு மரகதம் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள்.

"மரகதம் இதெல்லாம் இப்பொழுது பேச வேண்டிய விஷயமல்ல" என்றார் சிவப்பிரகாசம்.

"ஏன் பேசக் கூடாது! பேசித் தீர்த்தால்தான் என் மனது ஆறும். நான் என் இருதயத்தை உனக்குக் கொடுத்து உன் கைப் பொம்மையாகி



விட்டேன் அப்பொழுது. என்னுடைய தகப்பனாரின் சொத்து முழுவதையும் நீயே அடைந்து அனுபவிக்க வேண்டுமென்ற நோக்கத்தில் என் தகப்பனாரை விஷமிட்டுக் கொல்லத் துணிந்தாய். உன் ஆசை வலையில் சிக்கிய நானும் அதற்கு உடந்தையாக இருந்து விட்டேன். என் தகப்பனாரைக் கொன்றுவிட்டு என் சகோதரிகளை ஏமாற்றிச் சொத்து முழுவதையும் அபகரித்துக் கொண்டு ஆனந்தமாக வாழலாம் என்று நீ போட்ட திட்டத்துக்கு ஈடு கொடுத்துத் தகாத காரியங்களையெல்லாம் செய்தேன். என் தகப்பனாரைக் கொன்ற பழி எனக்கும் உண்டு. என்னுடைய இளமையில் உன்னோடு சேர்ந்த தோஷத்தினால் கண்மூடித்தனமாகத் தகாத காரியங்களெல்லாம் செய்து விட்டேன்!"

"இப்பொழுது வயதான காலத்தில் உனக்கு நல்ல புத்தி வந்து விட்டது போலிருக்கிறது. இதெல்லாம் வீண் கதை......" என்றார் சிவப்பிரகாசம் அலக்ஷ்யமாக.

"ஆமாம்! இப்பொழுதுதான் நல்ல புத்தி வந்தது. நான் உன்மீது நேசம் வைத்திருந்தது போல் உலகத்தில் எந்தப் பெண்ணும் எந்த மனிதனிடமும் அவ்வளவு குருட்டுத்தனமாக நேசம் வைத்திருக்க மாட்டாள். போகட்டும். நான்மட்டும் உன் வஞ்சனைக்குப் பலியாகவில்லை. என்னுடைய இரு சகோதரிகளும்கூட உன் வஞ்சனை வலையில் விழுந்து விட்டார்கள். சாரதாவின் பருவமும் அழகும் உன் மனத்தை உறுத்தியது. அவளையும் உன் நய வஞ்சகப் பேச்சில்



மயக்கி விட்டாய். வேறு வழியில்லாமல் அவளும் உன்னையே கல்யாணம் செய்து கொண்டாள். என் மனது வருத்தமடைந்த பொழுது எனக்கு ஏதேதோ சமாதானமெல்லாம் சொன்னாய். மூன்றாவதாக நீ கமலாவையும் விட்டு வைக்கவில்லை. அவளுக்கு நீ செய்த துரோகத்தை ஒருவராலும் பொறுக்க முடியாது. அவளிடம் நீ ரகசியமாக வைத்திருந்த கட்டு வெளியானதும் எப்படியாவது அவளைக் கொன்று விடத் தீர்மானித்தாய். எங்களுடைய சொத்தை யெல்லாம் அழித்துவிட்டு உன் மோச வலையில் விழுந்த அவளையும் இரக்கமில்லாமல் வீண் பழி சொல்லிக் கல்யாணம் செய்து கொள்ளாமல் கைவிட்டாய். உலகத் தூற்றுதலுக்கும் பழிக்கும் அஞ்சி அவள் ஒரு பெண் குழந்தையைப் பெற்று எங்களிடம் ஒப்புவித்து விட்டுத் தன்னுயிரைத்தானே மாய்த்துக் கொண்டாள். ஆண் பிள்ளையாகிய நீ என் போன்ற பெண்களை இப்படி யெல்லாம் சோதனை செய்து விட்டு வெட்கமில்லாமல் எங்கோ ஓடிவிட்டாய்...'' என்று சொல்லி நிறுத்திய மரகதம் ஒரு பெருமூச்சு விட்டாள். அவள் எவ்வளவு ஆவேசமும் பதட்டமும் அடைந்திருக்கிறாள் என்பதை அவளுடைய வார்த்தைகள் உணர்த்தின. அவள் உணர்ச்சி பொங்கப் பேசிய ஒவ்வொரு வார்த்தைகளும் ஒளிந்து கொண்டிருந்த பொன்னியின் செவிகளில் நன்கு விழுந்தன. மரகதத்தின் வாய் மொழியாக வந்த கதைகளைக் கேட்கக் கேட்கப் பொன்னியின் தேகம் புல்லரித்தது. உடல் பதறியது. அவள் மூச்சைப் பிடித்துக்கொண்டு பீரோவிற்குப் பின்னாலேயே நின்று கொண்டிருந்தாள்.

சிவப்பிரகாசம் எவ்விதமான பதிலும் சொல்லாமல் நின்று கொண்டிருந்தார். ஆனால் அவர் பார்வை மரகதத்தை வெட்டி விடுவதுபோல் கொடூரமாய் இருந்தது.

மரகதம் மறுபடியும் பேச ஆரம்பித்தாள். "நீ எங்களுடைய சொத்துக்களை யெல்லாம் அழித்து எங்கள் வாழ்க்கையையும் கெடுத்து விட்டு ஓடிய பிறகு, எங்களிடமிருந்த ஒரு சில நகைகளை விற்றுப் பணமாக்கிக் கொண்டு எங்களுக்குப் பூர்வீகச் சொத்தாக இந்த ஊரில் இருக்கும் இந்தக் கட்டிடத்தில் வந்து வசிக்கிறோம். ஆனால் இன்னும் உன்னுடைய சுயநலமும் வஞ்சனையும் ஏமாற்று வித்தையும் ஒழியவில்லை. எங்களை நாசமாக்கியது போதாதென்று அபலைப் பெண்ணாகிய வேதாவின் வாழ்க்கையையும் குலைக்கப் பார்க்கிறாய். இது நியாயமா! உண்மையில் மனிதனாய் இருந்தால் சிந்தித்துப் பார்... பதினேழு வருஷங்களுக்குப் பிறகு நீ என் எதிரில் வந்து நீ கண்ணால் கூடப் பார்க்காமல் உதறித் தள்ளிவிட்டுப் போன குழந்தைக்காக வழக்காட வந்திருக்கிறாய்...உன்னிடம் நான் வேதாவை ஒப்படைத்தால் அவளுடைய தாய்க்கு என்ன கதி ஏற்பட்டதோ, அதே கதிதான் அவளுக்கும் உன்னால் ஏற்படும்...'' என்று சொல்லி நிறுத்தினாள்.

"மரகதம், என்னுடைய கோபத்தை நீ அதிகமாக்கிக் கொண்டிருக்கிறாய்...'' என்றார் ஏதோ எச்சரிக்கை செய்கிறவர் போல் சிவப்பிரகாசம்.

"உன்னுடைய கோபத்திற்கு இனி அச்சப்பட்டுப் பயனில்லை. கணவனென்ற முறையில் உனக்கு நான் எவ்வளவோ மதிப்புக் கொடுத்துப் பொறுமையாக அடங்கி நடந்தேன். அதற்கெல்லாம் தக்க பலன் கிடைத்து விட்டது. உன்னை அவமரியாதையாக நடத்துவதினால் எனக்கு எந்த நரகம் வந்தாலும் வரட்டும். ஆனால் என் கண்ணெதிரே அநியாயத்தையும் கொடுமையையும் வளரவிடமாட்டேன். வேதாவை உன்னோடு அனுப்பும் அளவிற்கு அவ்வளவு கோழைத்தனமான, புத்தியற்றவளல்ல நான். என்னை எப்படிப்பட்ட ஸ்திரீ என்று நீ நினைத்தாய்! இவ்வளவு அழகான பெண்ணை இவ்வளவு நாளும் இந்த இடத்தில் பத்திரமாகக் காப்பாற்றி வளர்த்துக் கடைசியில் உன் கையில் ஒப்படைத்து அவள் வாழ்வையே நாசமாக்க விட்டு விடுவேனா! அறியாமை நிறைந்த அவளை உன்னோடு அனுப்பினால் அவளுடைய புனிதத் தன்மையைப் பாழாக்கி விடுவாய். அவளுடைய அழகை எங்காவது விலை பேசி விற்று விடுவாய். அவள் உடல் உயிர் எல்லாவற்றையும் நாசமாக்கிவிடுவாய். நீ துளிக்கூட இரக்கமற்ற கொடும்பாவி என்பது எனக்கு நன்றாகத் தெரியும். அவள் உன்னுடைய பெண்ணாயிருந்தாலும் அவளை உன்னோடு அனுப்ப மாட்டேன்!'' என்று சீறினாள்.

சிவப்பிரகாசம் மரகதத்தைச் சுட்டு விடுவது போல் பார்த்து விட்டு ஒரு பேய்ச் சிரிப்புச் சிரித்தார். "வேதா என் பெண். அவளை நான் அழைத்துக் கொண்டு போவதை உன்னால் தடுக்க முடியாது. அதைத் தடுக்க உனக்கு அதிகாரமும் இல்லை. நீ இவ்வளவு நாளும் அவளை வளர்த்தாயானால் அதற்கு நான் ஜவாப்தாரியாக மாட்டேன். அவளை வளர்க்கும்படி உன்னை நான் கேட்டுக் கொள்ளவில்லை'' என்றார்.

"இப்படி அநாதையாக விட்டு விட்டுப் போன குழந்தையைப் பின் யார் வளர்ப்பார்கள்!''

"யாராவது வளர்க்கிறார்கள்! அநாதை ஆசிரமத்தில் கொண்டு போய் விட்டிருந்தால் அவர்கள் வளர்க்கிறார்கள். உன்னோடு வீண் தர்க்கம் எதற்காக! வேதாவை நாளைக் காலையில் என்னோடு அழைத்துக் கொண்டுதான் போகப் போகிறேன். அது நிச்சயம்" என்றார் சிவப்பிரகாசம்.

"அப்படியா!" என்ற மரகதத்தின் கடுமையான குரல் அங்கு எதிரொலி செய்தது. திடீரென்று அவள் சிவப்பிரகாசத்தருகே பாய்ந்தாள். அவளுடைய கையில் சாண் நீளமுள்ள கத்தி ஒன்று பளபளவென்று மின்னிக் கொண்டிருந்தது. அதைக் கண்டு சிவப்பிரகாசம் நடுநடுங்கினார்.

"மரகதம் என்னிடம் விளையாடுகிறாயா......! என்னைக் கொல்ல நினைக்கிறாயா! நீ கத்தி முனையைக் காட்டிப் பயமுறுத்தினால் நான் வேதாவை விட்டு விட்டுப் போய் விடுவேன் என்று நினைத்தாயா! இதெல்லாம் என்னிடம் பலிக்காது" என்று கத்தினார் சிவப்பிரகாசம்.

அவர் கொண்டு வந்திருந்த கத்தி மேஜைமீது இருந்தது. அந்தச் சமயத்தில் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள அதை நாடினார். ஆனால் அதை அவர் கண் பார்வையிலேயே அவருக்கு முன்னால் செல்லம்மா எடுத்துக் கொண்டாள்.

பீரோவிற்குப் பின்னால் ஒளிந்து கொண்டிருந்த பொன்னி மெதுவாக எட்டிப் பார்த்தாள். ஹா! என்ன கோரம்! சிவப்பிரகாசத்தின் எதிரே கத்தியை ஓங்கிய வண்ணம் பத்திரகாளிபோல் மரகதம் நின்று கொண்டிருந்தாள். அந்தப் பயங்கரமான வீட்டில், பயங்கரமான நிசி வேளையில் இவ்வளவு நாளும் இல்லாத ஏதோ ஒரு பயங்கரமான காரியம் நடக்கத்தான் போகிறது என்று அவள் முடிவு கட்டி விட்டாள்.

"இது விளையாட்டல்ல. இது உண்மை. ஒரு பொழுதும் உன்னோடு வேதாவை அனுப்பமாட்டேன். நீ செத்து விழுந்தால்தான் என் மனது ஆறும். வேதாவின் தாயைக் கைவிட்டு அவளைச் சாக அடித்து, எங்கள் வாழ்க்கையையும் கெடுத்த உன்னைக் கொன்றால்தான் கொஞ்சமாவது பழிக்குப் பழி தீர்த்துக் கொண்டதாகும். ஆனால் நீ தப்பித்துப் போய் விடுவதானால் இப்பொழுதே போய்விடு......நீ இந்த வீட்டிலிருப்பதை இனிமேல் ஒரு நிமிஷம் கூடப் பொறுக்க மாட்டேன்" என்றாள் மரகதம் கடுமையான குரலில் கத்தியை அவன் நெஞ்சுக்கு நேர் நீட்டிய வண்ணம்.

"முடியாது; நான் போக முடியாது. வேதாவை அழைத்துக் கொண்டுதான் போவேன். அவளை விட்டு விட்டுப் போவது என்பது முடியாத காரியம்" என்றார் சிவப்பிரகாசம். அவர் குரலில் சிறிது நடுக்கம் இருந்தது.

"இன்னும் உனக்கு அந்த எண்ணம் போகவில்லையா...!" என்று உறுமினாள் மரகதம்.

"அந்த எண்ணத்தை என்னால் மறக்க முடியாது. அதற்காகத்தானே நான் இங்கு வந்தேன்! மரகதம், மரியாதையாக அந்தக் கத்தியை என்னிடம் கொடுத்துவிடு!" என்று சொல்லிக் கத்தியைப் பிடித்திருந்த அவளுடைய கையைப் பிடித்துக் கொண்டார் சிவப்பிரகாசம்.

மரகதம் அவரது கைப்பிடியிலிருந்து தன் கையை உதறிக் கொண்டாள். அடுத்த கணம் "ஹா...ஐயோ..." என்ற சத்தம் அந்த வீடு முழுவதும் பேய் அலறுவது போல் எதிரொலி செய்தது.

சிவப்பிரகாசம் தரையில் விழுந்து கிடந்தார். மரகதம் கையில் பிடித்திருந்த கத்தியிலிருந்து ரத்தம் சொட்டிக் கொண்டிருந்தது.

அந்த நடு நிசியில் எங்கும் பயங்கரமான பேய் அமைதி சூழ்ந்திருந்தது. (தொடரும்)

# ஏன் நம்பவில்லை?

காலையில் எழுந்ததும் காய்கறி வாங்கி வருவதற்காகப் பையுடன் கிளம்பினேன். பாதி தூரம் சென்றதும் யாரோ என் முதுகில் 'பளார்' என்று அறைந்ததும் திடுக்கிட்டுத் திரும்பினேன். என் நண்பன் பாலு சிரித்துக் கொண்டே, "ஒரு அதிசயம் கேட்டாயா?" என்றான்.

"என்ன பெரிய அதிசயத்தைக் கண்டு விட்டாய்? சீக்கிரம் சொல்லு! நாழியாகிறது" என்றேன் நான் பொறுமை யிழந்து.

"நேற்று நானும் என் மனைவியும் சினிமாவுக்குப் போவதாக ஆறு மணிக்குத் தீர்மானித்தோம். என் மனைவியிடம் நான் 'சினிமாவுக்குப் புறப்பட வேண்டும்' என்று சொன்னதும் அவள் இரண்டே நிமிஷத்தில் டிரஸ் செய்து கொண்டு புறப்பட்டு விட்டாள். வழக்கம் போல் ஒரு மணி நேரம் காத்திருந்தாலும் கிடைக்காத பஸ் தயாராக எங்களுக்காகக் காத்திருப்பது போல் நின்று எங்களிருவரையும் ஏற்றிக் கொண்டு சென்றது. ஐந்து நிமிஷத்தில் டவுனை அடைந்து விட்டோம். ஹோட்டலில் நுழைந்ததும் எங்களுக்கு டேபிள் கிடைத்து விட்டது. சாப்பிட்டுவிட்டுக் கொட்டகைக்குள் நுழைந்தோம். இரண்டு மணி நேரம் 'க்யூ'வில் கால் கடுக்க நின்று தவங் கிடக்காமலே டிக்கெட் வாங்கிக் கொண்டு உள்ளே சென்றோம். போனவுடன் அப்பொழுதுதான் ஆட்டம் ஆரம்பிப்பதற்கு வேண்டிய மணி ஒலித்தது. நேற்று பதினைந்து நிமிஷங்களில் சாதித்த காரியத்தைத்தான் உன்னிடம் சொல்ல வந்தேன்" என்றான் பாலு மூச்சுவிடாமல்.

"போடா! நீ சொல்லுவதை நான் நம்பவில்லை. எல்லாம் கற்பனையில் நடந்ததோ?" என்று கேட்டேன்.

"ஏன்? எதனால் நான் சொல்லுவதெல்லாம் பொய் என்று கருதுகிறாய்? பஸ்ஸும், சினிமா டிக்கெட்டும் இவ்வளவு எளிதாகக் கிடைத்துவிட்டதாலா?" என்று கோபத்துடன் கேட்டான் அவன்.

"இல்லை, இல்லை! பஸ், சினிமா டிக்கெட் எல்லாம் எளிதில் கிடைத்துவிட்டது என்பதையெல்லாம் கண்டு நான் சந்தேகப்படவில்லை. உன் மனைவி இரண்டே நிமிஷத்தில் டிரஸ் செய்து கொண்டு புறப்பட்டு விட்டாள் என்று சொன்னதிலிருந்துதான் நீ கூறியதெல்லாம் கற்பனை என்று தீர்மானித்தேன்" என்றேன். பாலு என் பதிலைக் கேட்டுத் திகைத்துப்போய் விட்டான். நானும் காய்கறிக் கடையை நோக்கி நகர்ந்தேன். —பி. என். மணி

மற்றெந்த ரகத்தையும் விட
பெருவாரியான மக்கள்
பிரிட்டானியா
பிஸ்கோத்துகளையே
வாங்குகின்றனர்.

சிறந்த பிஸ்கோத்து
பிரிட்டானியா




DX 389 TM






வெண்மையாக
சலவை செய்யப்
பட்டுள்ளன

பிரகாசமாக
சலவை செய்யப்
பட்டுள்ளன

ஸன்லைட்
சோப்பில்
தான்




துணிகளை அடித்துத்துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும் சலவை செய்கிறது!

S. 183-50 TM

# கசந்த வாழ்க்கை



சிங்களக் கதை : குணதாஸா அமரசேகரா

மொழி பெயர்ப்பு : வாஞ்சி

பியதாஸாவை எனக்கு வெகு காலமாகத் தெரியும். நானும் அவனும் ஒரே பள்ளிக்கூடத்தில் வாசித்தவர்கள்.

அவன் அவனுடைய அத்தை வீட்டில் சாப்பிட்டுக் கொண்டு வாசித்து வந்தான். அது எங்கள் வீட்டுக்கு அடுத்த வீடுதான்.

எங்கள் வீட்டுக் கொல்லைப்புறத்தில் ஒரு பெரிய புளிய மரம் இருந்தது. அதன் அடியில்தான் நாங்கள் எல்லோரும் ஒவ்வொரு நாளும் மாலையில் விளையாடுவது வழக்கம். பியதாஸாவும் எங்களுடன் விளையாடுவது உண்டு.

சில வருஷங்களுக்கு முன் பியதாஸாவுக்குக் கல்யாணமாகி விட்டதாக நான் கேள்விப்பட்டேன். ஒரு நாள் கொழும்புவில் உள்ள கடை யொன்றில் திடீரென்று அவனைச் சந்தித்தபோது எனக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. ஏனெனில் பால்ய நண்பனை அவனை நான் பார்த்துப் பல ஆண்டுகள் ஆகிவிட்டன அல்லவா!

பியதாஸாவுடன் அவனுடைய மனைவியும் இருந்தாள். சிறுவனாக இருந்த போது அவன் முகத்தில் படர்ந்திருந்த சோகை இப்போது இன்னும் அதிகமாக இருந்தது. எதையோ பறி கொடுத்தவன் போல் விழிக்கும் சுபாவமும் அவனை விட்டபாடில்லை. மொத்தத்தில் அவனைப் பார்த்தால், கல்யாணம் செய்துகொண்டு குழந்தை குட்டிகளுடன் குடித்தனம் செய்யக் கூடியவன் என்று யாரும் நினைக்க மாட்டார்கள்!

அவன் என்னைப் பார்த்ததும் மெதுவாகச் சிரித்தான். பியதாஸா எப்பொழுதுமே அதிகமாகச் சிரித்து, குதூகலமாக இருக்கும் சுபாவம் உடையவன் அல்ல. எனவே, அவன் சிரிப்பைக் கஷ்டப்பட்டு வருவித்துக் கொள்பவன் போல் தோன்றியது. இருந்தாலும் என்னைக் கண்டதில் அவனுக்கு உண்மையில் திருப்தி என்பதை நான் தெரிந்து கொள்ளாமல் இல்லை.

பியதாஸாவின் மனைவியை அழகி என்றே சொல்ல வேண்டும். கொடிபோல் துவண்டிருந்த அவளுடைய தேகம் அவளது அழகை இன்னும் அதிகப்படுத்தியது.

பியதாஸா என்னை அவளுக்கு அறிமுகப்படுத்திய போது, அவள் என்னைப் பார்த்து லேசாகப் புன்முறுவல் செய்தாள். பிறகு முகத்தை அப்பால் திருப்பிக் கொண்டாள். அதிலிருந்து அவள் நாணமும் அடக்க ஒடுக்கமும் மரியாதையும் உள்ளவள் என்று தோன்றியது.

பிறகு மற்றொரு தடவை நான் பியதாஸாவைச் சந்தித்தபோது அவன் நான் குடி வந்த வீட்டுக்கு அடுத்த வீட்டில் வசிக்கிறான் என்பதைத் தெரிந்து கொண்டேன்.

நான் வாடகைக்கு அறை எடுத்துக் கொண்ட வீட்டுக்கும் அவன் வீட்டுக்கும் நடுவில் ஒரு தோட்டம்தான் இருந்தது.

அதிலிருந்து அநேகமாக தினசரி மாலையில் நான் அவன் வீட்டுக்குப்போய் அவனுடன் பேசிவிட்டுத் திரும்புவது வழக்கமாகியது. பியதாஸா குஷியாகப் பேசும் சுபாவம் உள்ளவன் அல்ல என்பது எனக்குத் தெரியும். எனினும் அவனது வணங்க மற்ற நல்ல குணமும் சாத்துவிக சுபாவமும் என்னை ஆகர்ஷித்தன.

நான் பியதாஸாவின் வீட்டுக்கு அடிக்கடி செல்ல ஆரம்பித்தபோதுதான், முதலில் எண்ணியபடி பியதாஸாவின் மனைவி ஸோமா அவ்வளவு அடக்க ஒடுக்கம் உள்ளவள் அல்ல என்பது எனக்குத் தெரிந்தது.

சிற்சில சமயங்களில் பியதாஸா மட்டும் வீட்டில் இருப்பான். ஸோமா எங்கேயாவது போய் விடுவாள். பல நாட்கள் அவள் தனியாகச் சினிமாவுக்குச் சென்று விட்டு நேரம் கழித்து வருவதும் உண்டு.

ஒரு நாள் மாலை ஸோமா எங்கேயோ சென்றிருந்தாள். என் நண்பன் மாத்திரம் வீட்டில் இருந்தான். அப்போது அவன் என்னிடம் தன் ஹிருதயத்தைத் திறந்து காட்டினான்.

"எனக்கு ஸோமாவைக் கல்யாணம் செய்து கொள்வதில் கொஞ்சமும் இஷ்டம் இல்லை. என் உறவினர் யாவரும் சேர்ந்து வற்புறுத்தி அவளைக் கல்யாணம் செய்து வைத்து விட்டார்கள். அவள் செல்வந்தர் வீட்டுப் பெண்; படித்தவள், வட துருவத்துக்கும் தென் துருவத்துக்கும் எவ்வளவு தூரமோ, அவ்வளவு தூரம் அவள் சுபாவத்துக்கும் என் சுபாவத்துக்கும் இருக்கிறது. எங்களுக்கு மூன்று வயதான ஆண் குழந்தை ஒன்று இருந்தது. அதன் மூலம் எங்கள் இருவருக்கும் ஓரளவு மன ஒற்றுமை ஏற்பட்டிருந்தது. துரதிர்ஷ்டவசமாக அது இறந்து விட்டது. அதிலிருந்து நான் வீட்டைவிட்டு வெளிக் கிளம்புவதே இல்லை; அவள் மாலை நேரங்களில் வீட்டில் இருப்பதே இல்லை" என்றான் அவன்.

ஒரு நாள் மாலை பியதாஸாவின் வீட்டுக்கு நான் புறப்படுகையில், ஸோமா என் அறைக்கு வந்ததைக் கண்டதும் நான் திடுக்கிட்டுப் போனேன்.

என் மனதில் உள்ளதை அறிந்தவள் போல், "நான் வருவதைக் கண்டு பயந்து விட்டீர்களா!" என்றாள் ஸோமா கேலியாக.

"இல்லை..." என்று இழுத்தேன்.

"இப்படி சிறிது நேரம் உலாவி விட்டு வரலாம். வாருங்களேன்" என்று அவள் கூறியது மேலும் என்னைத் தூக்கி வாரிப் போட்டது.

அதே சமயம், "வர முடியாது" என்று கூறும் துணிச்சலும் எனக்கு உண்டாகவில்லை.

எனவே அவளுடன் கூடச் செல்லுவதைத் தவிர வேறு வழியில்லை. அவளுடைய கலகலப்பான

பேச்சும், சிரிப்பும், நடையுடை பாவனைகளும் என் மனத்தை என்னவோ செய்தன.

ஏற்கெனவே இலங்கையின் இயற்கைக் காட்சிகள் எவரையும் பரவசம் அடையச் செய்யும். அதிலும் அப்போது மரங்கள் பூத்துக் குலுங்கும் பருவ காலம். எங்கு பார்த்தாலும் அசோக மரங்கள் புஷ்ப மயமாக இருந்தன.

லோமா சிறிதும் சங்கோசமின்றி என்னுடன் பேசிக் கொண்டு வந்தாள். பியதாஸாவின் வறண்ட பேச்சுக்கும் லோமாவின் இனிய பேச்சுக்கும் எவ்வளவு வித்தியாசம் என்றது என் மனம். ஆம், தண்ணீர், ஸோடா போன்ற சாதாரண பானத்துக்கும் போதையைக் கொடுக்கும் மது பானத்துக்கும் வேற்றுமை உண்டு அல்லவா!

மறுநாளும் லோமா என் வீட்டுக்கு வந்து என்னை உலாவ அழைத்துக் கொண்டு போனாள். ஒரு யந்திரத்தைப் போல் நான் அவளுடன் சென்றேன் என்றாலும், என் மனச்சாட்சி மாத்திரம் என்னை உறுத்திக் கொண்டேயிருந்தது. நான் மன நிம்மதியை இழந்தேன்.

ஒரு நாள் அவளுடன் நான் உலாவச் சென்ற போது, "நீங்கள் எப்போதாவது எந்தப்பெண்ணையாவது காதலித்திருக்கிறீர்களா!" என்று லோமா ஒரு கேள்வியைத் தூக்கிப் போட்டாள்.

அதைக் கேட்டதும் சிறிது நேரம் பிரமித்துப் போய் விட்டேன். பிறகு "இல்லை" என்று மெதுவாகச் சொன்னேன்.

அவள் சிரித்தாள். அந்தச் சிரிப்பு என்னை ஏளனம் செய்வது போல் இருந்தது.

என்னை ஏளனம் செய்வதற்கு என்ன இருக்கிறது! நான் கூறியது உண்மைதான். நான் இது வரையில் யாரையும் காதலித்ததில்லை. பள்ளிக்கூடத்தில் வாசித்த போது நான் ஒரு பெண்ணிடம் சிநேகமாக இருந்தேன் என்பது உண்மைதான். எனினும் அதைக் காதல் என்று சொல்ல முடியாது. காதல் புரிவதற்குள்ள வயது எனக்கு இன்னும் வரவில்லை அல்லவா!

ஒரு நாள் பியதாஸாவின் தோட்டத்தில் பூத்த ரோஜா புஷ்பங்களைச் செண்டாகக் கட்டி லோமா எனக்கு அனுப்பியிருந்தாள்.

அன்று மாலை நான் என் அறையில் ஏதோ புத்தகத்தை வாசித்துக் கொண்டிருந்த போது லோமா வந்தாள். அன்று அவளுடன் உலாவப் போவதில்லை என்று உறுதி கொண்டிருந்தேன்.

"என்ன நிமல்! நீங்கள் இன்று உலாவ வரவில்லையா!" என்று கேட்டாள்.

அவளைக் கண்டதும் என் உறுதியெல்லாம் தளர்ந்து விட்டது.

"நான் இன்று வரவில்லை" என்றேன்.

"நீங்கள் வருவீர்கள் என்று நம்பிக் கொண்டு வந்தேன்" என்று ஒரு பெரு மூச்சு விட்டாள்.

என் மனம் இளகியது.

"இன்று வெளியே போக வேண்டாம் என்று நினைத்தேன். நீங்கள் அழைக்கும் போது எப்படி மறுப்பது!" என்று சொல்லிக் கொண்டே எழுந்து அவளுடன் புறப்பட்டேன்.

அன்று அஸ்தமித்து விட்டது. "வீட்டுக்குத் திரும்பிப் போகலாம்" என்றாள் லோமா.

வீட்டுக்குத் திரும்பிச் செல்லும்போது லோமா என்மேல் இடித்துக் கொண்டே நடந்து வந்தாள். அவளை அங்கேயே விட்டுவிட்டு ஓடிவிடலாமா என்று நினைத்தேன். ஆனால், அவ்வாறு செய்வதற்கு வேண்டிய தைரியம் எனக்கு ஏற்படவில்லை. நான் சுயபுத்தியை அடியோடு இழந்தவன் போல் அவளுடன் சென்றேன்.

அவள் வீட்டுக்கு அருகில் சென்றதும், "நீங்களும் உள்ளே வாருங்களேன். உங்கள் நண்பர் வெளியூருக்குப் போயிருக்கிறார். இரவு நேரம் கழித்துத்தான் வருவார்" என்றாள் என்னை உற்றுப் பார்த்துக் கொண்டே.

அந்தப் பார்வையின் அர்த்தம் என்ன! என் மனதில் புயல் வீசத் தொடங்கியது. இரவு நேரத்தில் அவள் என்னை உள்ளே அழைத்தது ஒழுங்கற்ற காரியமாகத் தோன்றியது.

அப்போதாவது நான், "நாழிகையாகிவிட்டது" என்று சொல்லி என் வீட்டுக்குச் சென்றிருக்கக் கூடாதா!

பேசாமல் உள்ளே சென்றேன். "இந்த நாற்காலியில் உட்காருங்கள்" என்றாள்.

நான் அப்படியே உட்கார்ந்தேன். சிறிது நேரம் மௌனம் நிலவியது.

பிறகு லோமா திடீரென்று என் அருகில் வந்து நாற்காலியின் கைச் சட்டத்தின் மீது என் மேல்



சாய்ந்த வண்ணம் உட்கார்ந்தாள். என் தோளில் கையைப் போட்டுக் கொண்டாள்.

இந்த அக்கிரமத்தைக் கண்டு என்னையறியாமல் என் உடல் நடுங்கியது. பதறிப் போய் அவளை வெறிக்கப் பார்த்தேன். என் கண்களில் நீர் ததும்பியது.

அப்போது லோமாவின் முகம் இரத்தம் போல் சிவந்திருந்தது. கண்களில் வெறி நடனமாடியது. அவளது உதடுகள் துடித்தன. அவள் ஹிருதயம் படபட வென்று அடித்துக் கொண்டது.

அங்கிருந்து எழுந்து ஓடி விட வேண்டும் என்று நினைத்தேன். என்னை அறியாமல் என் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக வழிய ஆரம்பித்தது. என்னால் கண்ணீரை அடக்கிக்

கொள்ள முடியவில்லை. முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டேன்.

அது என்ன பைத்தியக்காரத்தனம்! அவ்விதம் ஏன் கண்ணீர் விட்டேன் என்பது எனக்கே தெரியவில்லை. ஒரு பெண் அவ்வாறு நடந்து கொள்வாள் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை.

நான் கண்ணீர் விட்டதைக் கண்ட லோமா என் மனோ நிலையை அறிந்து கொண்டாள். என் தோளிலிருந்து மெதுவாகக் கையை எடுத்து விட்டு நாற்காலியிலிருந்து எழுந்து அப்பால் சென்றாள். அப்போது அவள் மனத்தில் விவரிக்க முடியாத பெரும் போராட்டம் ஏற்பட்டிருக்க வேண்டும்.

நான் பேசாமல் எழுந்து வீட்டுக்கு வந்து விட்டேன். நான் சிக்கிக் கொண்டிருந்த ஒரு பயங்கரமான ஆபத்திலிருந்து விடுபட்டது போன்ற உணர்ச்சி எனக்கு உண்டாயிற்று.

அன்று வெகு நேரம் வரையில் நான் தூங்கவில்லை. லோமாவின் போக்கு எனக்கு மிகுந்த



ஆச்சரியத்தைக் கொடுத்தது. அவளிடம் நான் நடந்து கொண்ட விதம் அதை விட அதிக ஆச்சரியத்தைக் கொடுத்தது. நான் புத்திசாலியாக இருந்தால், நிலைமை இவ்வளவு தூரம் முற்றுவதற்கு இடம் கொடுக்காமல் இருந்திருக்கலாம் அல்லவா!

எனினும் என் நாற்காலிச் சட்டத்தின் மீது உட்கார்ந்து கொண்டு அவள் என்னைப் பார்த்த பார்வையை எத்தனை ஜன்மங்கள் சென்றாலும் நான் மறக்க முடியாது!

* * *

மறுநாள் அதிகாலையில் அந்த வீட்டு வேலைக்காரி என் அறைக் கதவைத் தடதடவென்று தட்டினாள். நான் திடுக்கிட்டுப் போனேன்.

கதவைத் திறந்ததும் அவள் கூறிய பயங்கரமான செய்தி என்னைத் தூக்கி வாரிப் போட்டது. லோமா முதல் நாள் இரவு இறந்து விட்டதாக அவள் கூறினாள்.

அதைக் கேட்டதும் நடுநடுங்கிப் போய், "ஏன் இறந்தாள்!" என்று அலறினேன்.

"எனக்குத் தெரியாது. அவள் கணவன் போய்ப் பார்த்தபோது, அவள் படுக்கையில் இறந்து கிடந்தாளாம்" என்றாள்.

அவளை மேற்கொண்டு விசாரிக்க என் மனம் துணியவில்லை. பயமும் துக்கமும் என்னை ஆட்கொண்டன. முதல் நாள் இரவு நடந்த சம்பவம் காரணமாக அவள் தற்கொலை செய்து கொண்டிருக்க வேண்டும் என்று ஊகித்தேன்.

அவளுடைய நடத்தை பியதாஸாவுக்குத் தெரிந்திருக்குமோ! அதற்காக அவன் அவளைக் கண்டித்திருப்பானோ! இப்படியெல்லாம் என் மனதில் பல கேள்விகள் எழுந்தன.

களங்கமற்ற மனச்சாட்சியுடன் பியதாஸாவை எப்படிப் பார்ப்பது என்று நான் தவித்துக் கொண்டிருக்கையில், பியதாஸாவே விவரிக்க முடியாத பரபரப்புடன் என் அறைக்கு வந்தான். முதல் நாள் இரவு அவன் வரும் வரையில் அவள் விழித்துக் கொண்டிருந்தாளாம். எப்போதும் தன் வரவை எதிர்பார்க்காமலேயே தூங்கி விடும் வழக்கம் உள்ள லோமா அன்று அவ்வளவு நேரம் விழித்துக் கொண்டிருந்தது அவனுக்கு ஆச்சரியமாக இருந்ததாம்.

அவள் இறந்ததற்குக் காரணம் என்ன என்பது பியதாஸாவுக்குத் தெரியவில்லை. "இரவு வெகு நேரம் கழித்து யாருக்கோ ஒரு கடிதம் எழுதியதாகவும், அதை உடனே தபால் பெட்டியில் போட்டுவிட்டு வரும்படி சொன்னதாயும் வேலைக்காரி சொன்னாள்" என்றான் அவன்.

மறுநாள் எனக்கு ஒரு கடிதம் வந்தது! அதன் உறையைக் கிழித்தபோது என் கைகள் நடுங்கின. பலவீனமான உணர்ச்சி வசப்பட்டவனாய் மிகுந்த பரபரப்புடன் அக்கடிதத்தை வாசித்தேன்.

"...உங்கள்மீது மிகுந்த அநுதாபம் கொண்டே இக்கடிதம் எழுதுகிறேன். ஏனெனில், என்னுடைய மரணத்துக்கு நீங்கள்தான் காரணம் என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால், தாங்கள் அவ்வாறு நினைக்கக்கூடாது. நீங்கள் களங்கமற்ற உள்ளம் படைத்தவர்கள். நண்பனுக்குத் துரோகம் செய்யக்கூடாது என்ற உங்களுடைய புனிதமான உறுதியைக் கண்டு நான் பிரமித்துப் போனேன். கணவனுக்குத் துரோகம் செய்ய நினைத்த பாவியான எனக்கும் உங்களுக்கும் எவ்வளவு வேற்றுமை!

எனவே, என் மரணத்துக்குத் தாங்கள் அணுவளவும் பொறுப்பாளியல்ல. இனி நான் உயிர் வாழ்வது பூமிக்கு வீண் பாரம் என்ற எண்ணத்தினாலேயே என் உயிரைப் போக்கிக் கொள்கிறேன். என்னுடைய வரலாற்றைக் கேட்டால், நான் அவ்விதம் தீர்மானித்தது சரிதான் என்று நீங்களும் ஒப்புக் கொள்வீர்கள்.

எனக்குக் கல்யாணம் நடந்து ஆறு வருஷங்கள் ஆகின்றன. என் கணவர்—உங்கள் நண்பர் பியதாஸா,—எவ்வளவு உயர்ந்த குணமும் ஒழுக்கமும் உள்ளவர் என்பதை உங்களுக்குக் கூற வேண்டியது என் கடமை. அவரை அன்பும் பொறுமையும் உருவெடுத்தவர் என்றே சொல்ல வேண்டும். எனினும், அவர் என்னை என்றைக்காவது காதலித்தாரா என்பது சந்தேகம்தான். அவரைப் போன்ற சுபாவம் உள்ளவர்கள் ஒரு

பெண்ணின் இருதய தாபங்களை அறிய முடியுமா! முடியாது என்பதே என் அபிப்பிராயம். நீங்களும் அவரது சுபாவத்தை நன்கு அறிந்து கொண்டிருக்கலாம்.

எங்கள் இருவரது போக்கிலும் மிகுந்த முரண்பாடு இருந்தும்கூட நாங்கள் அன்னியோன்னியமாகவே குடும்ப வாழ்க்கை நடத்தி வந்தோம். எனினும் ஒரு விஷயத்தை உங்களிடம் மறைக்காமல் கூற விரும்புகிறேன். எங்களிடையே சண்டை சச்சரவு எதுவும் இல்லையே யொழிய, என் வாழ்க்கை இன்பமாகவும் சந்தோஷமாகவும் இருந்தது என்று கூறமுடியாது.



எனக்கு என்னென்ன தேவையோ அதெல்லாம் பியதாஸாவின் அன்பினால் எனக்குக் கிடைத்தது என்பது உண்மையே. அவ்விஷயத்தில் எனக்கு அணுவளவும் குறை இல்லை. ஆனால் தாம்பத்ய வாழ்க்கையில் நான் எதிர்பார்த்த அளவுக்குப் பரிபூரண இன்பம் கிடைக்கவில்லை.

நாங்கள் மணம் செய்து கொண்ட ஒரு வருஷத்துக்கெல்லாம் எங்களுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. தாம்பத்ய வாழ்க்கையின் மூலம் எனக்குக் கிடைக்காத பரிபூரண இன்பம் அந்தக் குழந்தையின் மூலம் எனக்குக் கிடைத்தது என்றே கூற வேண்டும். அக் குழந்தையின் மீது என் உயிரைக் காட்டிலும் அதிக பாசம் வைத்திருந்தேன். என் வாழ்க்கைச் சக்கரம் சுளிவமாக ஓடி வருவதற்குற்ற சுழியாணி போல் அக்குழந்தை இருந்தது. வறண்டு கிடந்த என் வாழ்க்கை அந்தக் குழந்தையினால் துளிர்க்கத் தொடங்கியது.

ஆனால், என் துரதிர்ஷ்டத்தை நான் யாரிடம் சொல்லிக் கதறுவேன்! என் செல்வக் குழந்தை, எனக்குப் புத்துயிர் அளித்த என் அருமை மகன் மூன்றாவது வயதில் என்னையும் இந்த உலகத்தையும் விட்டு ஓடிப் போய்விட்டான்.

அதனால் ஏற்பட்ட சோகத்தை என்னால் சகிக்கவே முடியவில்லை. நான் மாதக் கணக்கில் அழுது கொண்டிருந்தேன். அந்தக் குழந்தையின் மறைவிலிருந்து என் கண் பார்வையே மறைந்து விட்டது போல் இருந்தது. என் வாழ்க்கையை அந்தகாரம் சூழ்ந்து கொண்டு விட்டது போல் தோன்றியது.

அதிலிருந்து என் மன நிலையே அடியோடு மாறத் தொடங்கியது. வீட்டில் இருக்கவே எனக்குப் பிடிக்கவில்லை. நியாயம் — அநியாயம், தர்மம் — அதர்மம் எல்லாம் ஒன்றாகத் தோன்றியது. அச்சம், நாணம் எல்லாம் என்னை விட்டுப் பறந்தோடி விட்டன. தாம்பத்ய வாழ்க்கையின் புனிதத் தன்மை வெறும் பிரமை என்ற எண்ணம் எனக்கு ஏற்பட்டு விட்டது.

அதிலிருந்து என் மனம் நிலைகுலைந்து தடுமாறியது. இன்ப வாழ்வு என்பது மனம் போன போக்கில் செல்லுவதே என்ற ஆபத்தான ஒரு சித்தாந்தம் என்னை ஆட்கொண்டது.

என் மனதில் ஏற்பட்ட இந்த மாறுதலைப் பியதாஸா கவனித்தாரா என்பது எனக்குத் தெரியாது. நான் அவரிடம் விசுவாசமாக இருந்த போதும் சரி, அவருக்குத் துரோகமாக நடந்து கொண்டபோதும் சரி, அவர் களங்கமின்றி ஒரே விதமாகத் தான் இருந்தார். அவரிடம் யாதொரு மாறுதலையும் நான் காணவில்லை.

என்னிடம் தென்பட்ட மாறுதல்களை அவர் கவனித்திருந்தால் நான் மேலும் மேலும் நெறி தவறிப் போயிருக்க மாட்டேன். எனக்கு இந்தப் பரிதாபமான கதி நேர்ந்திராது.

என் ஆர்வத்தைப் பூர்த்திசெய்து கொள்ளவே நான் தங்களுடன் நட்புக் கொண்டேன். ஆனால் நீங்கள் நடந்து கொண்ட விதம் என் மனதை அடியோடு மாற்றி விட்டது. என் தவறுகளை எனக்குப் படம் பிடித்தாற் போல் காட்டி விட்டது. இத்தனை நாளாக என் கண்களை மறைத்திருந்த திரையை உங்களுடைய குணமும் ஒழுக்கமும் முற்றிலும் நீக்கி விட்டன.

இதையெல்லாம் பியதாஸாவிடம் ஒப்புக் கொண்டு அவரது மன்னிப்பை நாடுவது என்று நினைத்தேன். அதன் பிறகு, பாழ்பட்டுப் போன என் வாழ்க்கையில் ஒரு புது அத்தியாயத்தை ஆரம்பிக்கலாம் என்பது எண்ணம்.

நான் செய்த துரோகத்தை அவர் மன்னிப்பாரா! உயர்ந்த குணம் படைத்த அவர் அதை மன்னித்தாலும், என் மனதில் நிம்மதி ஏற்படுமா! குழந்தையையும் இழந்து, பியதாஸாவின் பரிபூரணமான அன்புக்கும் வழியில்லாமல் இந்த உலகில் வாழ்வதால் என்ன பலன்!

எனவே, என் சம்பந்தமான பல்வேறு பிரச்னைகளைத் தீர்க்கும் சுலபமான ஒரே வழி மரணம் தான் என்ற முடிவுக்கு வந்தேன்.

ஸோமா"



கணவன்:—அந்தப் பிச்சைக்காரனுக்குத் தினம் சாதம் போடுகிறாயே! நம்ம குடித்தனம் கட்டி வருமா?

மனைவி:—போனால் போகிறான். நல்லவனாயிருக்கிறான். சமையலைப் பற்றி நாறு கோளாறு சொல்லாமல் சாப்பிடுகிறான்.

## உலகெங்கும், வெற்றிபெற்ற மனிதர்கள்

# ஜில்லெட்

## உபயோகிக்கிறார்கள்...



ஒரு தனவந்தர் ப்ளு ஜில்லெட்டை விட உயர்ந்தரக பிளேடை வாங்க முடியாது. ஆயினும் இதன் விலை மிகவும் சரசமாயிருக்கிறது. இந்த புகழ்பெற்ற பிளேடுகள் நீடித்தகாலம் உழைப்பதால் ஒவ்வொரு மனிதனும் சமமான சுகபோகத்தை அனுபவிக்க முடியும். ப்ளு ஜில்லெட் பிளேடுகளையே வாங்குங்கள். (மின்சாரத்தால் கெட்டியாக்கப்பட்டதும் பிரத்தியேகமாக பதப்படுத்தப்பட்டதுமான எஃகில் தயாரித்தது). உங்கள் நாகரீகமான தோற்றத்தினால் வாழ்க்கையில் வெற்றிபெற்ற மனிதர்களிடையே நீங்களும் இடம் பெறுங்கள்.



# ப்ளு ஜில்லெட் பிளேடுகள்

**5 பிளேடுகளுக்கு 14 அணு**

# கடுமையான ஜலதோஷமும் விரைவில் விலகும்




இடையுறாது உள்ள சளியை நிறுத்த சிறிது கிபாக்கை உங்கள் மூக்கினுள் தடவிக் கொள்ளுங்கள். மார்பு, நெஞ்சு, முதுகு முதலிய பாகங்களில் இரவில் படுக்குமுன் நன்றாகத் தடவி தேய்த்துக்கொண்டால், ஒரு மணி நேரத்திற்குள்ளாகவே சுவாச அடைப்பு நீங்கி சுகமாக சுவாசிக்க இயலும்.

முற்றிலும் தீங்கற்றதும் ஆவிரூபமாக மாறக்கூடியதுமான கிபாக்கிலுள்ள எண்ணைச் சத்துக்கள் சுவாச மார்க்கத்தில் ஏற்படும் அடைப்பு முதலிய தடைகளை எளிதில் நிவர்த்திக்கும்.

## கிபாக்

முகரவும் தேய்க்கவும் உகந்தது.

*வெஸ்ட் மினஸ்டர் லாபரட்டரீஸ் லிமிடெட் லண்டன், தயாரிப்பு.*

ஏஜெண்டுகள்: ஓரியண்டல் மெர்க்கன்டைல் ஏஜென்ஸி,

99.A., அரண்மனைக்காரத் தெரு, மதராஸ்.1.

SISTAS—WL—30-A TAMIL

# பாதத்திலுள்ள புண்கள்! நான்கு நாட்களிலேயே தகருகின்றன

## குத்து வலியும் நமைச்சலும் 7 நிமிஷங்களில் நிறுத்தப்படுகிறது



உங்கள் பாதங்கள் அதிகமாக வெறுப்படையுமாறு நமைச்சல் எடுக்கிறதா? வெடித்துக் காயமடைகின்றனவா? பாதங்களின் மேலும் விரல்களுக்கிடையிலும் கொப்பளித்து வெந்திருக்கிறதா? மேலும் கொப்புளங்களை உண்டாக்குகின்றனவா? ரத்தம் கசியும்படி பாதங்கள் புண்ணாகின்றனவா? இது ஏதோ கிருமி அல்லது தோலில் ஏற்படும் அழுகல் என்பதையும் இவற்றை ஒழித்தாலன்றி, உபாதைகளிலிருந்து விடுதலை பெற முடியாதென்பதையும் நீங்கள் உணர வேண்டும்.

### மூலகாரணத்தையே அழிக்கிறது

களிம்புகளோ தைலங்களோ அதிக குணத்தை அளிப்பதில்லை. உபாதைக்கு மூலகாரணத்தை அவை கொல்லுவதோ வெல்லுவதோ கிடையாது. அதிருஷ்டவசமாக, டாக்டர்கள் சிபார்சு செய்யும் நிக்ஸோடெர்ம் இருக்கிறது. ஒரு பிரபல ஆங்கில சரும நிபுணர் தயாரித்தது; பிரபல மருந்து வியாபாரிகளால் இறக்குமதி செய்யப் படுகிறது. நிக்ஸோடெர்ம் உங்கள் பாத உபாதையைக் கட்டாயம் போக்கிவிடும் என்பதற்கு உத்தரவாதம் அதன் மூன்று முக்கிய குணங்களாவன: (1) பாதங்களில் ஏற்படும் உபாதைக்கும், படைக்கு மூலகாரணமான கிருமிகளையும், அவற்றை வளர்க்கும் இதர புழுக்களையும்கொன்றுவிடுகிறது. (2) நமைச்சலை நிறுத்தி சருமத்தை ஏழே நிமிஷங்களில் குளிர்வுறச் செய்து இதமளிக்கிறது. (3 சருமத்தைச் சுத்தமாகவும், வழவழப்பாகவும் மிருதுவாகவும் செய்கிறது.

### பரீக்ஷைக்கு உத்தரவாதம்

இன்றே நிக்ஸோடெர்ம் வாங்குங்கள். இன்றிரவே ஒரு முறை போட்டுப் பார்த்தால் மறுநாள் காலை அற்புதமான தேர்ச்சி ஏற்படும். நாலு நாட்களில் பாதங்களில் ஏற்படும் உபாதைகளும் தீர்ந்துவிடும். உங்கள் சருமம் சுத்தமாகவும், வழவழப்பாகவும் மிருதுவாகவும் ஆகும். தொடர்ந்து மூன்று நாட்கள் போட்டால் உங்கள் பாதங்களில் ஏற்படும் நமைச்சல், கொப்புளங்கள் குணமடையாவிட்டால் நிக்ஸோடெர்ம் மதிப்பை இழந்ததாகிறது. இந்த உபத்திரவத்தின் பேரில், நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் இதுதான். ஏழு நாட்களுக்கு நிக்ஸோடெர்ம் போட்டு பரீக்ஷை செய்து பாருங்கள். உங்களுக்கு திருப்தி ஏற்படாவிட்டால், காலிப் பெட்டியைத் திருப்பிக்கொடுத்தால் பணத்தைத் திரும்பப் பெறுவீர்கள். உங்கள் மருந்து வியாபாரியிடம் இன்றே நிக்ஸோடெர்ம் வாங்குங்கள். அதற்கு அளிக்கப் பட்டிருக்கும் உத்தரவாதமே உங்களைப் பாதுகாக்கும்.

# விமலாவின் சித்தி

எஸ். கிருஷ்ணன்

**வா**சலில் வந்து நின்ற வண்டியிலிருந்து கணவன் பசுபதி இறங்கிக் கொண்டிருந்ததை விமலா ஆச்சரியமும் மகிழ்ச்சியும் பொங்கக் கவனித்தாள். முன் தகவல் கொடுக்காமல் இப்படி வருவார் என்று அவள் எதிர்பார்க்க வில்லை. பசுபதி வண்டிக்காரனுக்கு வாடகையைக் கொடுத்தனுப்பி விட்டு ஹோல்டாலுடன் வீட்டுக்குள் வந்தான். பிரசவத்துக்காக எட்டு மாதம் முன் விமலாவை அவன் பிறந்தகத்துக்கு அனுப்பி யிருந்தான். புண்ணியா வசனத்துக்குக் கூட அவனால் வர முடியவில்லை. கம்பெனியில் நினைத்தபொழுது லீவு கிடைக்குமா? அவனுடைய ஐந்து மாதக் குழந்தை கண்ணன் தொட்டிலில் தூங்கிக் கொண்டிருந்தான். விமலாவிடம், "சௌக்கியம்தானே?" என்று கேட்டுக் கொண்டே தொட்டிலின் அருகில் சென்றான். அதைக் கண்ட விமலா, "குழந்தையை எடுத்துக் கொள்கிறீர்களா?" என்று கேட்டாள்.

"வேண்டாம். குழந்தையை எழுப்பாதே!" என்றான் பசுபதி.

இதே சமயம் வீட்டுப் பின் கட்டிலிருந்து வந்த ராஜம், "யார், மாப்பிள்ளையா? வாருங்கள்! விமலாவுக்கு நேற்று வந்த கடிதத்தில் கூட இன்னும் இரண்டு மாதம் கழித்துத்தான் வர முடியும் என்று எழுதி யிருந்ததாகச் சொன்னாளே?" என்றாள்.

அதைக்கேட்ட பசுபதி சிரித்துக்கொண்டே, "அப்படியானால் இப்பொழுது திரும்பிப் போகச் சொல்கிறாயா, அத்தை? கம்பெனி வேலையாகப் பெங்களூருக்கு விமானத்திலே வந்திருந்தேன். போகிறபோது விமலாவையும் கூட்டிக்கொண்டு போய்விடலாமே என்று எண்ணிக் கொண்டு வந்தேன். மறுபடியும் கல்கத்தாவிலிருந்து வருகிறதென்றால் இலேசா?" என்றான்.

அதற்குப் பதில் சொல்லாமல் ராஜம் விமலாவிடம், "நீ அடுப்பைப் பற்ற வைத்துச் சீக்கிரம் காப்பி போடு. முன்பு ஒரு தடவை சொன்னதுபோல் முடியாதென்று சொல்லி விடாதே!" என்று கூறிவிட்டுச் சிரித்தாள்.

பசுபதியும் அந்தச் சிரிப்பில் கலந்து கொண்டு, "ஆனால் இப்பொழுது நான் பழைய பசுபதி யல்லவே!" என்றான்.

சமையலறையில் அடுப்புப் பற்ற வைத்துக்கொண்டிருந்த விமலா வெட்கத்தோடு அந்த நிகழ்ச்சியை நினைத்துக் கொண்டாள்.

**ஐ**ந்து வருஷங்களுக்கு முன் பசுபதி கல்கத்தாவிலிருந்து அத்தையைப் பார்க்க வந்தபோது விமலாவுக்குப் பன்னிரண்டு வயது. மூன்று வருஷங்களுக்குப் பின் இதே பசுபதி தனக்குக் கணவனாகப் போகிறான் என்று அறிய விமலாவுக்கு அப்பொழுது ஞானதிருஷ்டி யில்லை. ஆகவே, பசுபதிக்குக் காப்பி போட்டுக் கொடுக்கும்படி சித்தி சொன்னபோது, விமலா "யார் யாருக்கோ காப்பி போட்டுக் கொடுக்கிறதுதான் எனக்கு வேலையோ?" என்றாள் துடுக்காக.

சித்தி இந்தப் பதிலைக் கேட்டுச் சற்றும் வியப்படையவில்லை. அவள் தன் அண்ணன் மகன் பசுபதியிடம், "இதுதான் இவள் குணம் என்று நினைத்து விடாதே, பசுபதி! குழந்தைதானே? ஒவ்வொரு சமயம் சோம்பல் ஏற்படுவது சகஜமே அல்லவா?" என்று சொல்லிவிட்டுத் தானே சமையலறைக்குச் சென்று விட்டாள்.

அன்று சித்தி சொன்னது இன்று அவளுக்கு நினைவு வந்தது. "இன்றைக்கு யாரோவாக இருக்கும் பசுபதி ஒரு காலத்தில் உனக்கு எல்லாரையும் விட முக்கியமானவனாகி விடப் போகிறான். சித்தி சொல் பலிக்கிறதா இல்லையா என்று பார்!" என்று சொல்லி யிருந்தாள். அதுவும் நிறைவேறி விட்டது.

பசுபதிக்குத் தாயார் இல்லை. ஆகவே, ஐந்து வயது முதல் அத்தை ராஜமே அவனை வளர்த்து வந்தாள். தன் இருபதாவது வயதில் விவாகமாகி அவள் விமலாவின் சித்தியாக வந்துவிடவே, அத்தை யில்லாத வீட்



பையன் :— அம்மா, தூங்குச் சுப்புணி வந்திருக்கார்.

தாயார் :— சித்தப்பாவைப் பேர் சொல்லிக் கூப்பிடப்படாது; சித்தப்பா என்று சொல்லணும். தெரிந்ததா......

டில் பதின்மூன்று வயதுள்ள பசுபதியும் அவன் தகப்பனாரும் மிகவும் சிரமப் பட்டார்கள். மூன்று வருஷங்களில் எஸ். எஸ். எல். ஸி. தேறியவுடன் பசுபதி கல்கத்தாவுக்கு உத்தியோக வேட்டைக்காகச் சென்றான். ஒரு தாராள சிந்தையுள்ள அமெரிக்க என்ஜினீயர் அதிர்ஷ்டவசமாக அவனைத் தன் உதவியாளனாக வைத்துக்கொண்டு இரண்டு வருஷம் வேலை பழக்கிக் கொடுத்தார். பிறகு அமெரிக்காவுக்குத் திரும்பும்பொழுது அவர் தம் ஸ்தானத்துக்குப் பசுபதியைச் சிபார்சு செய்து விட்டுப் போனார்.

மூன்று வருஷங்களுக்கு முன் பசுபதி ஊருக்கு வந்தபோது அறுநூறு ரூபாய் சம்பளம் வாங்கிக் கொண்டிருந்தான். அவன் தன் அத்தை சொல் தட்டாமல் விமலாவைக் கலியாணம் செய்து கொண்டான்.

ஐயாயிரம் ஆறாயிரம் என்று வரதக்ஷிணை கொடுக்க வந்தவர்கள் பேச்சைக் கேட்காமல் ஏழையின் பெண் விமலாவைக் கல்யாணம் செய்து கொண்ட பசுபதி, "தாயாரிடம் இருக்க வேண்டிய பாசத்துக்கு உரியவள் என் அத்தை. அவள் பேச்சைத் தட்ட எனக்கு வலிமை எங்கே?" என்று விமலாவிடம் சொல்லி யிருக்கிறான்.

காப்பிக் கூஜாவைக் கூடத்து மேஜைமேல் வைத்த விமலா தன் கணவனைப் பார்த்தாள். பிறகு தனக்கு அவனைக் கணவனாக அடைய உதவி புரிந்த சித்தி ராஜத்தை நன்றியுடன் பார்த்தாள்.

சித்தியைப் பற்றிய சிந்தனையில் ஆழ்ந்த அவள் மனம் பல பழைய நிகழ்ச்சிகளை எண்ணிக் குன்றிவிட்டது.



சித்தி வந்த போது விமலாவுக்கு எட்டு வயது. விமலாவின் தகப்பனார் எண்பது ரூபாய் சம்பளம் வாங்கும் ஒரு கடைக் கணக்கெழுத்துக்காரர். ஷாப் சட்டமும் சுகாதாரச் சட்டமும் அணுகப் பயந்து எட்டிப் பார்க்காமல் நின்றிருந்த ஒரு சிறு தெருவில் பகல் பத்து மணியும் இரவு நான்கு மணியும் விமலாவின் தகப்பனாரிடம் வேலை வாங்கியது ஒரு மண்டிக்கடை. "இந்தப் பிழைப்பை விட்டுச் சன்னியாசியாகி எங்கேனும் போய் விட வேண்டும் போலிருக்கிறது!" என்று அவர் ஒவ்வொரு சமயம் அலுத்துக் கொள்வார். அப்பொழுது சித்தி, "விமலாவை ஒருவனிடம் ஒப்படைத்து விட்டு நாம் இரண்டு பேருமே பரதேசிகளாகக் கிளம்பி விடலாம்" என்பாள் சிரித்துக் கொண்டே. எந்த ஈசனிடம் தவம் கிடந்து ராஜம் சித்தி முன் ஜன்மத்தில் வரம் வாங்கி யிருந்தாளோ, தெரியவில்லை! பொறுமை தளராத மனமும் புன்முறுவல் மறையாத முகமும் அவளுக்கு வாய்த்திருந்தன.

விமலாவின் தகப்பனார் விமலாவை ஆறும் பாரம் தேற வைத்தார் என்றால் அதற்குச் சித்தியின் சீரும் சிக்கனமும்தான் உதவியாயிருந்தன. விமலா தனக்கு வேண்டுமென்று தோன்றிய சோப்புப் பெட்டிகளுக்கும் பௌடருக்கும் காசு கிடைக்காமல் சித்தியை எத்தனையோ தடவை திட்டியிருக்கிறாள். ஆனால் அதற்காகச் சித்தி கோபித்துக் கொண்டதோ வருத்தப்பட்டதோ இல்லை.

விமலா நான்காம் பாரம் படித்துக் கொண்டிருந்த போது பள்ளி மாணவிகள் இருநூறு பேர் உல்லாசமாகப் பாபநாசம் அணைக்கட்டுப் பார்க்கச் செல்லப் பள்ளித் தலைமை ஆசிரியை ஏற்பாடு செய்தாள். விமலாவுக்கும் அவர்களுடன் போக வேண்டுமென்று அளவற்ற ஆசை. ஆனால் அதற்குப் பத்து ரூபாய் வேண்டுமே! விமலா எங்கே போவாள்? தன் சிறு தாயாரிடம் கேட்டாள். "இந்த மாதம் செலவு அதிகம் என்று உனக்குத் தெரியாதா, விமலா?" என்றாள் சிறு தாயார். "என்ன செலவாம்? செலவில்லாத பொழுது எப்பொழுதுதான் வரப்போகிறதோ?" என்று கசந்துகொண்ட விமலாவுக்குச் சித்தி பதிலே சொல்லவில்லை.

மறுநாள் பள்ளித் தோழிகள் பலரும் ஆசிரியைகள் சிலரும் ரயிலடிக்குச் சென்ற காட்சியைக் கண்ட விமலா வீட்டில் வந்து மூலையில் உட்கார்ந்துகொண்டு அழுதாள். மத்தியானம் சாப்பிடுவதற்காக வீட்டுக்குள் நுழைந்த அவளுடைய தந்தை அவள் அருகில் வந்து, "நானும் உன் சித்தியும் உனக்குத் துரோகம் செய்கிறோம் என்று எண்ணிக் கொள்ளாதே, விமலா! நீ ஏழை வயிற்றில் பிறந்து விட்டாய். ஆனால் உன் எதிர்காலம் நன்றாயிருக்கும். உன் மனம் நொந்தால் எங்களுக்குச் சந்தோஷம் என்றா நினைக்கிறாய்? இதோ இந்தப் பத்து ரூபாய்

இருக்கிறது. அடுத்த வாரம் உன் அம்மாவுக்குச் சிராத்தம். அது நடக்கவேண்டாமா? உன் தாயாரைப் பற்றிச் சொல்லி அந்த ஞாபகம் உன் மனதைக் கிளறலாகாதே என்றுதான் சித்தி அதைச் சொல்லவில்லை. உன் தாயாரை நினைத்து அந்தச் சிராத்தத்தைச் செய்யாமலிருந்தால் அவள் ஆத்மா நம்மை என்னவென்று நினைக்கும், விமலா?'' என்று கேட்டார், ஒரு பத்து ரூபாயைக் காட்டிக் கொண்டு.

அவர் கண்களில் நிறைந்த நீர் விமலாவின் இருதயத்தைத் தொட்டு விட்டது. ''எனக்குத் தெரியாமல் எதையோ சொல்லி விட்டேன், அப்பா! என்னை மன்னித்து விடுங்கள்'' என்றாள் அவள்.

அதற்குப் பிறகு ஒரு மாதம் விமலா சித்தியின் மனதில் தைக்கும்படி எதையும் செய்யவோ சொல்லவோ இல்லை.

அன்று 'தை வெள்ளிக்கிழமை. விமலா பள்ளிக்குச் செல்லவில்லை. வீட்டில் மாவிளக்கு ஏற்ற ஏற்பாடாகியிருந்தது. காலையில் பத்து மணிக்கு ஒருவன் பல நிறமுள்ள ரிப்பன்கள் தொங்கும் குச்சி ஒன்றுடன் தெருவில் வந்தான். சூரியப் பிரகாசத்தில் பகட்டுடன் தக தக வென்று ஜொலித்த அந்த ரிப்பன்களைப் பார்த்த விமலா தன் சித்தியிடம் ''ரிப்பன்'' என்றாள். ஆனால் அவள் சிரித்துக் கொண்டு மௌனமாயிருந்து விட்டாள். பணம் இல்லை போலிருக்கிறது என்று எண்ணி விமலாவும் பேசாமல் இருந்து விட்டாள்.

ஆனால் அன்று மாலை வாசலில் துணி விற்றுக் கொண்டு போனவனைக் கூப்பிட்டுச் சித்தி ஒரு கஜம் வாயில் துணி வாங்கினாள். அதைக் கண்ட விமலா, ''சித்தி, இந்தத் துணி வாங்க உங்களுக்கு ஒன்றே கால் ரூபாய் எங்கேயிருந்து கிடைத்ததோ?'' என்று அடக்க மாட்டாத கோபத்தோடு கேட்டாள்.

சித்தி அதற்கும் மறுமொழி கூறவில்லை.

சித்தி அன்று சாப்பிடக் கூப்பிட்ட போது வர மறுத்ததோடு மட்டுமல்லாமல், ''எனக்கு வஞ்சனை செய்தாவது ரவிக்கைத் துணி வாங்கிப் போட்டுக் கொள்ளும் கொடுமை உன்னிடமிருக்குமென்று நான் எண்ணவேயில்லை, சித்தி! உன்னிடம் எப்படித்தான் நான் கடைத்தேறப் போகிறேனோ?'' என்றாள் விமலா வெகு ஆக்ரோஷத்துடன். அதற்கும் அவள் சித்தி மறுமொழி கூறவில்லை. அதற்குப் பிறகு அவள் சித்தியுடன் ஒரு வாரம் வரை பேசுவதையே நிறுத்தி விட்டாள்.



அடுத்த வெள்ளிக்கிழமை வந்தது. சித்தி விமலாவிடம் வந்து, ''இன்றைக்கு வெள்ளிக்கிழமை. நீ பள்ளிக்கூடம் போகவேண்டாம். அம்பாளுக்கு மத்தியானம் நமஸ்காரம் பண்ண வேண்டும்!'' என்றாள்.

விமலா, ''நமஸ்காரம் பண்ணிக் கொள்ளுங்கள், நீங்களே! நான் எப்படிப் போனால் உங்களுக்கு என்ன?'' என்று கூறிக்கொண்டு பள்ளிக்கூடத்துக்குச் சென்று விட்டாள்.

மத்தியானம் சாப்பிட வந்த விமலா கூடத்தில் அடுத்த வீட்டு விசாலம் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தாள். அவளுக்கு எதிரே வெற்றிலைத் தட்டில் சித்தி அன்று வாங்கின ரவிக்கைத் துணியும் இருந்தது. ''விமலா, உன் சித்தி உனக்காகத்தான் காத்துக்கொண்டிருக்கிறாள். சீக்கிரம் போய்க் கைகால் அலம்பி விட்டு வந்து விளக்கின் முன் நமஸ்காரம் செய். உன் அம்மாவையும் நினைத்துக்கொள்'' என்றாள் விசாலம். அப்பொழுதுதான் விமலாவுக்கு விஷயம் விளங்கிற்று. தன் தாயாருக்குப் போனவருஷம் சிராத்தமான பிறகு இதே மாதிரி ஒரு வெள்ளிக்கிழமை அன்று ஒரு ரவிக்கைத் துண்டு வைத்துச் சித்தி விசாலத்துக்குக் கொடுத்ததை நினைத்துக் கொண்டாள்.

விமலா விளக்கின் முன் நமஸ்கரித்தாள். அவள் அருகில் நின்றிருந்த சித்தி, ''இல்லாமைக் கொடுமை நீங்கி உன் ஆசைகளை நிறைவேற்ற அருள் செய்யும்படி பிரார்த்தனை செய்து கொள், விமலா!'' என்று சொன்னாள்.

இந்தச் சித்தியைத் தான் துரோகி என்று எண்ணி ஒரு வாரமாக இவளுடன் பேசாமல் இருந்தோம் என்பதை நினைத்தபோது அவள் மனம் துணுக்குற்றது. உடனே சட்டென்று சித்தியின் பாதங்களிலும் விழுந்து நமஸ்கரித்து விட்டு, ''ஏன் சித்தி! நான் செய்யும் குற்றங்களை யெல்லாம் மன்னித்து விடும் உன்னைப் போல் ஆண்டவனும் என்னை மன்னிப்பானா?'' என்று கேட்டாள், வந்த அழுகையை அடக்க முயன்று கொண்டே.

''கட்டாயம் மன்னிப்பார். குழந்தைகள் தெரியாமல் செய்வதை மன்னிக்க முடியாத தகப்ப



னார் உண்டா, விமலா?" என்று கேட்டு விட்டுச் சற்றுத் தயங்கிய சித்தி, "ஆனால் அப்படிப்பட்ட குற்றம் ஒன்றும் நீ செய்யவில்லையே, விமலா? ஏன் இப்படி வருத்தப்படுகிறாய்?" என்று கூறிக் கொண்டு விமலாவைக் கையைப் பிடித்துச் சமையல் அறைக்கு அழைத்துச் சென்றாள்.

இரவு எட்டு மணிக்கு விமலா வீட்டுக்குள் நுழைந்தபோது வீடு இருட்டில் மூழ்கிக் கிடந்தது. அந்தக் கட்டிடத்தின் மின்சார வசதி சட்டென்று தடைப்பட்டு விட்டதுதான் அதற்குக் காரணம். இருட்டிலேயே தன் அறையை அடைந்து விடலாம் என்று எண்ணிய விமலா யாருடனோ மோதிக் கொண்டதை உணர்ந்தாள். மறு கணம் விளக்குப் பிரகாசித்தது. சித்தி மூச்சுப் பேச்சு இல்லாமல் கீழே விழுந்து கிடப்பதைக் கண்டதும் விமலா பயந்து போய், "சித்தி, சித்தி!" என்று உரக்கக் கூப்பிட்டாள். சித்தி மெதுவாகத் தலையைத் தூக்கி, "அடுத்த வீட்டு ரங்குவைக் கூப்பிட்டு அப்பாவை அழைத்து வரச் சொல்லு!" என்று சொன்னாள். அடுத்த கணம் மறுபடியும் தலை தொங்கிவிட்டது. வேதனை தாங்காமல் சித்தியின் முகம் சுளிவதைக் கவனித்த விமலா ரங்குவைத் தேடி அவன் வீட்டுக்கு மிகவும் வேகமாக ஓடினாள்.

விமலாவின் தகப்பனார் வரும்போதே டாக்டரை அழைத்துக் கொண்டுதான் வந்தார். டாக்டர் விமலாவை வெளியே போகும்படி அனுப்பி விட்டு அவள் சித்தியைப் பரிசோதிக்கலானார்.

டாக்டர் என்ன சொல்கிறார் என்று கேட்க ஆர்வத்துடன் அடுப்பின் முன் உட்கார்ந்திருந்த விமலாவின் காதுகளில், "அப்பரேஷன் செய்ய வேண்டியிருக்கும் என்று தோன்றுகிறது!" என்று டாக்டர் சொல்லிக் கொண்டிருந்தது விழுந்தது. அவள் "அப்படியானால் நான் கொலைகாரியாகவா போய்விடுவேன்?" என்று வாய் விட்டே கேட்டுவிட்டாள். சித்திக்குக் கர்ப்பப்பையில் அடிபட்டு விட்டதாகவும் மூன்றுமாத கர்ப்பம் கலைந்து விட்டதாகவும் தெரிந்து கொண்ட விமலா கர்ப்பச் சிதைவால் இறந்த தன் தாயை நினைத்துக் கொண்டாள். சித்தியும் போய் விடவா போகிறாள்?

விமலா வெறிகொண்டவள் போல் சமையலறையை விட்டு வெளியே வந்து டாக்டரிடம், "எப்படியாவது சித்தியைப் பிழைக்க வையுங்கள், டாக்டர்! என்னால் பழியுடன் இந்த உலகில் வாழவே முடியாது!" என்று கெஞ்சினாள்.

டாக்டர் கனிவுடன், "என்னால் முடிந்ததைச் செய்கிறேன், அம்மா! வீணாகக் கவலைப்படும்படி ஒன்றுமே இல்லை!" என்று விமலாவுக்கு ஆறுதல் கூறினார்.

சித்தி இரவே ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டாள். மூன்று நாட்கள் விமலா சித்தியைப் பார்க்கப் போக அனுமதிக்கப்படவில்லை. நான்காம் நாள் வெளிறிப் போன முகத்துடன் படுக்கையில் துவண்டு படுத்திருந்த சித்தியைப் பார்க்க அவளுக்கு அனுமதி கிடைத்தது. அவளைக் கண்டதும் சித்தி தன் இயற்கையான புன்முறுவலுடன், "உன் பிரார்த்தனைக்கு ஈசுவரனே மனமிரங்கி விட்டார், விமலா! இன்று சற்று முன்புதான் டாக்டர், 'அந்தக் குழந்தையின் மனம் நோகக்கூடாது என்பதற்காகவே ஆண்டவன் உங்களுக்கு உயிர்ப் பிச்சை அளித்தார். என் திறமையால் நீங்கள் பிழைத்தெழவில்லை!' என்று சொன்னார்" என்றாள்.

சித்தி பிழைத்து எழுந்து விட்டாள். ஆனால் அந்த அப்பரேஷனால் சித்தி அடைந்த அந்த மகத்தான நஷ்டம்!

சில நாள் முன் சித்தி விமலாவின் குழந்தையை எடுத்துக் கொஞ்சிக் கொண்டிருந்ததற்கிடையே "கண்ணன் பரம பாக்கியவானாக இருப்பான், விமலா!" என்றாள்.

அதைக் கேட்ட விமலா, "அதில் சந்தேகமில்லை, சித்தி! உத்தமியின் பேரன் அல்லவா கண்ணன்? ஆனால் தாயான பிறகுதான் நான் உங்களுக்கு ஏற்பட்ட நஷ்டத்தை உணர்கிறேன். என்னால்தானே நீங்கள் தாய்மைப் பதவியை அடைய முடியாமல் போய்விட்டது? அந்தக் குற்றத்தைத் தெய்வம் பொறுக்குமோ என்றுதான் பயப்படுகிறேன்!" என்றாள்.

விமலாவின் சொற்களைக் கேட்டுச் சிரித்துக் கொண்டே சித்தி, "ஏன் அப்படி நினைக்கிறாய், விமலா? என் பெண் நீ! உன் தாயாரான எனக்கு ஏதாவது குறையிருக்குமென்று நினைக்கிறாய்?" என்றாள்.

அதற்கு விமலா, "சித்தி, நீ தாய் மட்டுமல்ல, என்னைத் தடுத்து ஆட்கொண்ட தெய்வம்" என்று சித்திக்குப் பதில் கூறினாள்.

• • •

"என்ன, விமலா! பசுபதி வந்திருக்கிறான். அவனுக்கு என்ன வேணும் என்று கேள். சமையலறையில் வந்து உட்கார்ந்திருக்காதே!" என்று சித்தி சொன்ன பின்தான் விமலா சிந்தனைகலைந்து கூடத்துக்கு வந்தாள்.




டாக்டர்கள் நிரூபிக்கின்றனர் நீங்களும்

அழகிய சருமத்தை 14 நாட்களில் அடையலாமென்று!



டாக்டர்கள் நிரூபிக்கும் உபாயம்

இதுதான்: பாமோலிவ் சோப்பால் உங்கள் முகத்தைக் கழுவுங்கள். பிறகு பாமோலிவ்வின் மிருதுவான இன்ப சுகந்தரும் நுரையால் உங்கள் சுத்தமான முகத்தை 60 விநாடிகள் தேயுங்கள். அலம்புங்கள்! ஒரு நாளைக்கு மூன்று வேளைகள் வீதம் 14 நாட்கள் இவ்வாறு செய்யுங்கள். இவ்விதம் சுத்தி செய்யும் தேய்ப்பு உங்கள் சருமத்தை மிருதுவான வழவழுப்பான, இளமையான தோற்றமளிக்கச் செய்கிறது.

நீங்களும் 14 நாட்களிலேயே இந்த
கைய பலன்களை எதிர்பார்க்கலாம்.
பிரகாசமுள்ள அதிகச் சுத்தமான சரு
மம் ★ உயர்ந்த ரகம் ★ நல்லிசை ★
மிகவும் குறைந்த மாசுமறுக்கள் ★
குறைந்த தெய்ப்பு ★ வழவழுவென்றி
ருக்கும்சருமம் ★ மிகப் புதிய நிறம் ★




சோப்பு மட்டுமில்லை — ஓர் அழகு சாதனம்!



உலகின்கண் எல்லா இடங்களிலுமுள்ள விவசாயிகள்

வற்புறுத்தி வாங்குவது



**MYERS** AUTOMATIC ELECTRIC PUMPS

பரிபூரணத் திருப்தி யளிப்பதால்

மிகவும் நம்பகமாக தேர்ந்தெடுக்கப்படுவது.

சோல் ஏஜெண்டுகள் :

வாட்டர் சப்ளை ஸ்பெஷலிஸ்ட்ஸ் லிட்.

23-24, செகண்ட் லைன் பீச், மதராஸ்

---

## உயிரைக் காப்பாற்றிக்கொள்ள நல்ல வழி



அமெரிக்கன் மாடல் பிஸ்டல், லைசென்ஸ் அவசியமில்லை. டிராமா, சர்க்கஸ், பணத்தைக் காப்பாற்றிக் கொள்ள, உயிரைக் காப்பாற்றிக் கொள்ள இதற்கு மிஞ்சிய ஸாதனமில்லை. சுட்டபொழுது நிஜமான பிஸ்டல் மாதிரி பயங்கரமான சப்தம் உண்டாகி நெருப்பு ரவைகள் வெளிவரும். விலை 8-8-0 போஸ்டேஜ் 1-8-0 தனி. தோல் பெட்டி 2-8-0. பிஸ்டலுடன் 25 குண்டுகள் இலவசம். தனியாக தோட்டாக்கள் வேண்டுமானால் 1 டஜன் 1-8-0.

## வீட்டில் சினிமா (புரொஜக்டர்)



வீட்டிலேயே சினிமா பார்த்து ஆனந்த மடையலாம். இந்த சலனப் படங்களை திரையின்மேல் பார்க்கலாம். இது பிரகாசமாகவும், கவர்ச்சிகரமாகவும் பிரதிபலிக்கிறது. விலை ரூ. 7-8-0 வி. பி. பி. சார்ஜ் ரூ. 2-0-0. மேற்கொண்டு பிலிம் கெஜம் 1-க்கு அணா 8 தனி.

## கொசு வலை

கொசுக்கடியின் உபத்திரவத்திலிருந்து எங்களது உயர்ந்த ரக வலையினால் காப்பாற்றிக் கொள்ளுங்கள். வெளியிடங்களில் ரூ. 15க்கு கூட கிடைப்பது கஷ்டம். விலை ரூ. 7-8-0. வி. பி. பி. சார்ஜ ரூ. 1-8-0 தனி.

## 14 பாஷைகள் 48 மணி நேரத்தில்

ஆங்கிலம், ஹிந்தி, மராத்தி, குஜராத்தி, பர்மீஸ், தமிழ் முதலிய பாஷைகளை 48 மணி நேரத்தில் கற்கலாம். விலை ரூ. 5. வி. பி. பி. சார்ஜ் அணா 12.

## எலக்ட்ரிக், ரேடியோ கைட்

மின்சார சக்தியின்றி இயக்கக் கூடிய ரேடியோவை ரூ. 15 செலவிலேயே தயாரியுங்கள். ரேடியோ ரிப்பேர், எலக்ட்ரிக் ஒயரிங் முதலியவைகளைக் கற்றுக்கொண்டு மாதம் ரூ. 200 சம்பாதியுங்கள். விலை ரூ. 4-4-0. வி. பி. பி. சார்ஜ் அணா 12 தனி.

## தொழில் புஸ்தகங்கள்

சோப் தயாரிக்கும் முறை ரூ. 3. வாசனை திரவியங்களுக்கானது ரூ. 3. தையல், கட்டிங் முறை ரூ. 3-8-0. போட்டோகிராபிக் ஆசான் ரூ. 3. டிராயிங், பெயிண்டிங் ரூ. 4. ரப்பர் தொழில் ரூ. 3. வி. பி. பி. சார்ஜ் தனி.

**கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுத வேண்டும்**

**SANSAR TRADING Co., (P. 11) Kanwariganj, Aligarh U. P.**

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரஸ்வாமி

## 10. செவிப்புலன்

ஐம்புலன்களில் செவி மிக முக்கியமானது; அபூர்வமும் சூட்சமமுமானது. மூளை, சத்தத்தை இதன் மூலமாகத்தான் அறிகிறது. இது சரியாய் வேலை செய்யவில்லை யென்றால், மூளை நன்றாயிருந்தாலும், நாம் நாதத்தைக் கேட்க முடியாது. அல்லது காது நன்றாயிருந்து அதைச் சேர்ந்த மூளைப் பகுதி கெட்டிருந்தாலும் நாம் சத்தத்தைக் கேட்க முடியாது.

காதை நான்கு பாகமாகப் பிரிக்கலாம். முதலாவது வெளிச் செவி. இது சாதாரணமாய் நமக்குத் தெரியும். காதின் வெளி பாகம்தான். இது ஒலியைச் சேர்த்து உள்ளே செலுத்துகிறது. இரண்டாவது சத்தம் செல்லும் குழாய். மூன்றாவது நடுச் செவி. இது மண்டை எலும்புடன் சேர்ந்திருக்கின்றது. இங்குதான் செவிப்பறை இருக்கிறது. அதன் எதிரில் மூன்று சிறு எலும்புகள் உண்டு. அவை சத்தத்தை உட்செவிக்குச் செலுத்துகிறது. நான்காவது உட்செவி. இங்கு நத்தைக் கூடுபோன்று ஒன்று உள்ளது. இது ஒரு எலும்புக் குழிக்குள் இருக்கும். இக்குழிக்குள் ஒருவித திரவம் உண்டு. இது ஒலி அலைகளின் மோதுதலைத் தடுக்கும். இது மூளையை அடுத்து அமைந்திருக்கின்றது. செவிப் பறையில்தான் முதலில் சத்தம் தாக்குகிறது. பிறகு பக்கத்திலிருக்கும் எலும்பு அதனை உட்செவிக்குக் கொண்டு செல்லுகின்றன. அங்கிருந்து மூளைக்கு எட்டுகிறது. இந்தச் செவிப் பறை என்பது ஒருவித மெல்லிய சவ்வினாலானது. இதைச் சுற்றி யிருக்கும் இடம் காற்றினால் நிரம்பப் பெற்றிருக்கும். இக்காற்றின் அழுக்கம் சரியாய் இருந்தால்தான் காது சரிவரக் கேட்கும்.

செவியில் பலவிதமாகக் கோளாறு ஏற்படலாம். புறச் செவிக்கு ஏதாவது ஏற்பட்டால் பரவாயில்லை. கட்டி, புண் முதலியன வந்தாலும் வெளியில் தெரிவதால் சுகப்படுத்தி விடலாம். உள்ளே ஏதாவது ஏற்பட்டால்தான் கஷ்டம். உள்ளே சிறு கட்டிகள் ஏற்படலாம். ஜலதோஷம் பிடித்தால் காதையும் நெருக்குப் பாதிக்கும். ஆகையால் எப்பொழுதும் காதை வெகு ஜாக்கிரதையாய்ப் பாதுகாக்க வேண்டும். சிலர் காதில் அடிக்கடி குச்சியைக் கொண்டு குத்திக்கொண்டே யிருப்பார்கள். சிறிது அஜாக்கிரதையாய்ச் செவிப் பறையில் பட்டு விட்டால் பறை கிழிந்துவிடும். அதனாலும் செவிட்டுத்தனம் ஏற்படுவது உண்டு. சாதாரணமாக ஜலதோஷத்தினால் காது நோய் கண்டால் அதை மருந்து போட்டுக் குணப்படுத்தி விடலாம். ஆனால் முக்கியமாய் முதலில் ஜலதோஷத்தைப் போக்கடிக்க வேண்டும். காதில் சிறு கட்டிகள் உண்டானால் அதையும் மருந்து போட்டு சுத்தம் செய்வதின் மூலமாகவே குணப்படுத்தி விடலாம். இதற்கெல்லாம் சிரசாசனம் செய்வதனால் குணமாகாது. ஒருகால், சிரசாசனம் செய்பவர்களுக்கு இந்த மாதிரி ஏற்பட்டால், அவர்கள் காது வலியிருக்கும்போது சிரசாசனம் செய்யக் கூடாது. சிறிது நாள் சிரசாசனத்தை ஒத்திவைக்க வேண்டும். சிரசாசனம் செய்பவர்களுக்கு மேற்கண்ட ஜலதோஷம் சம்பந்தமான காது நோய் கட்டி, புண்கள் முதலியன உண்டாகவே உண்டாகாது. பொதுவாய் வலி யிருக்கும் போது சிரசாசனத்தை யாரும் செய்யக் கூடாது.

சிலருக்கு நரம்பு பலவீனத்தால் காது மந்தமாய் விடும். நரம்புகள் நல்ல சுறுசுறுப்புடன் இருந்து, ரத்தோட்டமும் நன்கு இருந்தால்தான் எந்த அவயவமும் வேலை செய்யும். காதும் அம்மாதிரியே. அதிலுள்ள நுட்பமான உறுப்புக்கெல்லாம் ரத்த போஷணை மிக மிக அவசியம். வயதாகி இயற்கையாய் ரத்த போஷணை குன்றி, காது மந்தப்படுவர்களும் உண்டு. சாதாரணமாய் சதா ஏதாவது நோயினால் பாதிக்கப்பட்டு அதனால் காது மந்தப்படுவதும் உண்டு. அடிக்கடி ஜுரங்கள் வந்து, அதற்காக 'கொயினா' போன்ற மருந்துக்களைக் கணக்கின்றி விழுங்கி, நரம்பு பலவீனமடைந்து காது கேளாமல் போவதும் உண்டு. இவ்வகையான காதுக் கோளாறுகளைச் சுலபமாய் சிரசாசனத்தின் மூலம் நிவர்த்திக்க முடியும். சிரசாசனம் செய்வதனால், பூமியின் ஆகர்ஷண சக்தி ரத்தத்தை நிறைய சிரசிற்கு இழுக்கிறது. அதிலுள்ள செவிப் புலன்கள் நன்றாய் ரத்தத்தினால் போஷிக்கப் படுகின்றன. மூளையும் போஷணை அடைகிறது. நரம்புகள் புத்துயிர் பெறுகின்றன. இந்த நரம்புகளின் லகானைப் பிடித்து வைத்திருக்கும் பிட்யூடரி கோளமும் ஊக்குவிக்கப்படுகிறது. அதனால் நரம்புகள், உணர்ச்சி பெறுகின்றன. மந்தமான காது மறுபடியும் குணமடைந்து, நாளடைவில் கேட்கத் தொடங்குகிறது.

இத்தனையும் எந்த மருந்தினாலும் காதுக்குச் செய்ய முடியாது. ஏதோ காதில் கட்டி, புண் போன்றவை ஏற்பட்டால் மருந்து போடலாம்; சுத்தம் செய்யலாம். ரத்தப் போக்கில்லாமல்



புதிதாக வந்தவர் (வேலைக்காரனைப் பார்த்து):— ஏனப்பா, உள்ளே போய் எஜமானரைப் பார்க்கணும். இந்த நாய் இப்படிக் குரைத்துக் கொண்டே இருக்கிறதே! உள்ளே எப்படிப் போவது?

வேலைக்காரன்:— நீங்க ஒண்ணும் பயப்படாதீங்க, போங்க! எஜமானரே நாய்க்கடி வைத்தியத்தில் பேர் போனவர் ஆச்சுங்களே!

உலர்ந்துவிட்ட நரம்புகளுக்கு மருந்துகள் எப்படி உணர்வு கொடுக்க முடியும்! அந்த அற்புதமான சாதனையைச் சிரசாசனத்தைச் செய்வது மூலமாகத்தான் பெற முடியும்.

பெண்மணிகள் அடிக்கடி பிரசவிப்பதனாலும், குறைப் பிரசவமேற்படுவதினாலும் காது கேட்காமல் போவதுண்டு. ஆரம்பத்தில் காதில் ''ஙொய்'' என்ற ஒருவித சத்தம் உண்டாகும். அதற்கு ஏதோ சீதளம் என்று மருந்து போடுவார்கள். சிறிது குணம் போல் தெரியும். சில நாட்களில் கழுத்தைத் திருப்பினால் காதில் ''கர்'' என்று சத்தம் கேட்கும். பிறகு சிறிது காது மந்தமாய் இருக்கும். சில நாட்களான பிறகு காது பாதியளவோ முற்றிலுமோ கேட்காமற் போய்விடும். அவ்வளவுதான் என்று கைவிட்டு விடுவார்கள். நல்ல 'டானிக்'குகள் சாப்பிட்டு உடலில் நல்ல சக்தி ஏற்பட்டால் ஏதாவது சிறிது காது கேட்கலாம். சில ஸ்திரீகளுக்கு என்னதான் 'டானிக்'குகள் சாப்பிட்டு உடம்புக்குத் தெம்பை வரவழைத்துக் கொண்டாலும், காது என்னமோ பழையபடியே இருக்கிறவர்களும் உண்டு. அப்பேர்ப்பட்டவர்கள் எல்லாம் சிரசாசனம் செய்தால் கட்டாயம் காது மறுபடியும் கேட்கும். உடலில் நல்ல பலமும் உண்டாகும்.

செவிப் பறை கிழிந்தோ, உட்செவி அதிகப் புண்பட்டுக் கெட்டுப்போய்க் காது கேளாமல் இருக்குமானால், சிரசாசனம் செய்வதில் காது கேளாது. ஆனால் நல்ல தெம்பு ஏற்படும்.

செவிக் கோளாறு உள்ளவர்கள் யாரும் எடுத்ததும் சிரசாசனம் செய்யக்கூடாது. புஜங்காசனம் மூன்று தடவை, சலபாசனம் மூன்று தடவை, பஸ்சிமோத்தானாசனம் மூன்று தடவை சர்வாங்காசனம் முதலில் ஒரு நிமிஷத்தில் ஆரம்பித்து சில வாரங்களில் ஐந்து நிமிஷம் வரை செய்ய வேண்டும். இப்படி இரண்டு அல்லது மூன்று தடவை செய்தபின் மத்ஸ்யாசனம் இரண்டு நிமிஷம் செய்ய வேண்டும். இம்மாதிரி செய்ய வந்த பின் சிரசாசனம் ஆரம்பிக்கலாம். இதற்கு ஒரு மாதம் அல்லது ஒன்றரை மாதமாவது ஆகும். உடலும் சிரசாசனம் செய்வதற்கு லாயக்காகும். அதன்பின் சிரசாசனத்தை அரை நிமிஷம் வீதம் மூன்று தடவைகள் முதல் வாரத்தில் பழகி, பிறகு வாரத்திற்கு அரை நிமிஷமோ ஒரு நிமிஷமோ அதிகமாக்கி வந்து பத்து நிமிஷம் வீதம் மூன்று தடவைகள் செய்யலாம். மேற் சொன்ன முறைகளில் வயது, உடல் நிலை, பலத்திற்குத் தக்கபடி மாறுதல் செய்யவேண்டியிருக்கும்.



சமையல்காரர் (பருமனான எஜமானரிடம்):—நான் என் சொந்த ஊருக்குப் போய்விடலாம் என்று தீர்மானித்து விட்டேன். உங்கள் வீட்டிலே சமையல் வேலை செய்ததற்கு அடையாளமாக உங்கள் குடும்பத்துப் போட்டோ ஒன்று கொடுங்கள், போதும். அதை வைத்துக் கொண்டே இனிமேல் நான் பிழைத்துக் கொள்ளுவேன்!

சிரசாசனம் செய்யும்போது தும்மலோ, இருமலோ, கொட்டாவி விடவோ, உமிழ்நீரை விழுங்கவோ கூடாது. ஏனென்றால், நாம் தும்மினாலோ, விழுங்கினாலோ, உட்செவியிலுள்ள செவிப் பறை அமுக்கப்படும். அப்பொழுது செவிப் பறையைச் சுற்றியுள்ள காற்றும் அதிகம் அமுக்கம் அடையும். இது சாதாரணமாயிருக்கும்போது நிகழக் கூடியது. அதேமாதிரிதான் நாம் சிரசாசனம் செய்யும் பொழுது, தும்மினாலோ, கொட்டாவி விட்டாலோ, இருமினாலோ, உமிழ்நீர் விழுங்கினாலோ நிகழும். ஆனால் சிரசாசனம் செய்யும் பொழுது செவிப் பறையைச் சுற்றிலுள்ள காற்றுள்ள இடத்தைச் சுற்றியும் ரத்தம் அதிகம் பாய்ந்து ரத்த அமுக்கம் அதிகமாய் இருக்கும். அப்பொழுது நாம் தும்மினாலோ, இருமினாலோ கொட்டாவி விட்டாலோ, உமிழ்நீரை விழுங்கினாலோ காற்றின் அமுக்கம் ஏற்படும். அப்பொழுது அங்கு விரிந்து கொடுக்க முடியாது. செவிப் பறைதான் அந்தக்காற்றை அமிழ்த்தும். அப்பொழுது காது வலிக்கும். இது ''குளிக்கப் போய்ச் சேறு பூசிக் கொண்ட'' கதையாய் முடிந்து விடும். ஆகையால்தான் சிரசாசனம் செய்யும்போது தும்மல், இருமல், கொட்டாவி முதலியவை வந்தால் அல்லது வரும்போல் இருந்தால் உடனே கீழே இறங்கிவிட வேண்டும். உமிழ்நீர் சுரந்தால் அடக்கி வைத்திருந்து சிரசாசனத்தைக் கலைத்த பிறகு துப்பிவிடலாம்.

சிலருக்குச் சிரசாசனம் செய்தால் தலை சுற்றும். அவர்கள் காலையில் அரை ஆழாக்குப் பால் சாப்பிட்டு அரை மணி நேரம் கழித்துச் சிரசாசனம் செய்யலாம். காலையில் பித்தப் பை நிரம்பி வரும் ஆகாரத்துடன் சேருவதற்காகத் தயாராயிருக்கும். சிரசாசனம் செய்யும்போது குடல்கள் 'டயாப்ரம்' மேல் அழுத்த டயாப்ரம் பித்தப் பைமேல் அழுத்துகிறது. அப்பொழுது சிலருக்குப் பித்தம் வெளிப்பட்டு ஆகாரப் பையில் கலக்கும். அதனால் அவர்களுக்கு மயக்கமாகவும், வாந்தி வருவதுபோலவும் தலையைச் சுற்றும். இம்மாதிரி எல்லோருக்கும் ஏற்படாது. ஒரு சிலருக்குத்தான் ஏற்படும். அப்பேர்ப்பட்டவர்கள் ஆசனம் செய்வதற்கு முன் அரை ஆழாக்குப் பாலைச் சாப்பிட்டால் பித்தப் பையில் நிறைந்திருக்கும் பித்த நீர் பாலுடன் கலந்து குடலுக்குள் போய் விடும். அப்பொழுது பித்தப் பையில் பித்த நீர் குறைந்திருக்கும். பால் சாப்பிட்ட அரை மணி நேரத்திற்குப் பின் ஆசனம் செய்தால் பாலும் குடலுக்குள் சென்று ஆகாரப் பையும் காலியாயிருக்கும். பித்தமும் குறைந்திருக்கும். மயக்கம் ஏற்படாது.

சிலருக்கு உடல் பலவீனத்தின் காரணமாகவும், மயக்கம் தலைச் சுற்றல் ஏற்படுவது உண்டு. அவர்களும் அரைமணிக்கு முந்தி பாலைச் சாப்பிட்டால் சற்று தெம்பாய் இருக்கும். பாலைத் தவிர, காப்பி, டீ முதலிய எதுவும் சாப்பிடக் கூடாது. (தொடரும்)




வீரசோழன் ஆற்றுப் பக்கத்தில் இருந்து அடித்த காற்று பொன்னிறக் கதிர்கள் மீண்டும் வயல்களின் மீது விழுந்து வந்து கொண்டிருந்தது. அவ்வப்போது காற்று சற்று வேகமாகவும் சீதான மாகவும் அடித்துக் கொண்டிருந்தது. எதிரே தூரத்தில் தெரிந்த களத்து மேட்டை நோக்கி, விரிந்து கிடக்கும் வயல்களுக்கு மத்தியிலிருந்த பெரிய வரப்பின்மீது நடந்து கொண்டிருந்தேன். நான் நடந்து சென்ற வரப்புக்கு இருபுறமும் கண் ணுக்கு எட்டிய தூரம் கடல்போல பரந்து கிடந்த நன்செய் நிலங்களில் நெற்கதிர்கள் முற்றி அறு வடைக்குத் தயாராய்த் தலை சாய்ந்து கிடந்தன. மாலைக் கதிரவனின் பொன்னொளி பட்டு அவை தங்கம் போல் மின்னின. பச்சைக் கிளிகள் நெற் கதிர்களைக் கொத்திக் கொண்டு பறந்து செல்லும் காட்சி மனத்துக்கு இன்பமூட்டின. தூரத்தில் சில உழவர்கள் வயலைச் சுற்றிப் பார்த்து விட்டு வீடு திரும்பிச் சென்று கொண்டிருந்தனர். 'எத்தனை உழவர்கள் இரவு பகல் என்று பாராமல், வெய் யில் பனி என்று சிந்திக்காமல், மழை குளிர் என்று கருதாமல் வியர்வைத் துளிகள் மூலம் தங்கள் பலத்தை எல்லாம் சிந்தி உழைத்திருப்பார்கள்! அவர்களின் மங்காத உழைப்பின் பலன் அல்லவோ இந்தப் பொன்னான விளைச்சல்! வாழ்க உழவர்கள்!' என்று என் உள்ளம் எண்ணி வாழ்த்தியது.

களத்து மேட்டில் தலையாரி தங்கமுத்து உட் கார்ந்து கொண்டிருந்தார். களத்தில் கிடந்த நெல் பட்டறைகளுக்கு அவர் காவல் காத்துக் கொண்டிருந்தார். அடிக்கடி சற்றுத் தூரத்தில் தெரிந்த கூரை வீடுகளைப் பார்த்துக் கொண்டிருந் தார். அந்தத் திறந்த வெளியிலிருந்து வந்த வீர சோழன் ஆற்றின் ஜில்லென்ற காற்றையும் பொருட்படுத்தாமல் மார்பைத் திறந்து போட்டுக் கொண்டு தலையில் முண்டாசு கட்டியிருந்தார். அவர் உட்கார்ந்திருந்ததைப் பார்த்தால் ஒரு இளம் வாலிபனைப் போலவே இருந்தது. ஒரு சின்னஞ் சிறு இரும்பு உரலில் வெற்றிலையும் பாக்கையும் போட்டு இடித்துக் கொண்டிருந்தார். அங்கு நிலவியிருந்த அமைதிக்கு மத்தியில் 'டக்' 'டக்' கென்று அவர் பாக்கு இடிக்கும் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. வெற்றிலைப் பாக்கை இடித்துக் கொண்டே, "வாங்க, தம்பி! பட்டணத்தி லிருந்து எப்போ வந்தீங்க! ஏது இவ்வளவு தூரம்!" என்று என்னை வரவேற்றார். அவர் குர லில் ஒரு அன்பும் உயர்ந்த பண்பும் கலந்திருந்தன.

நான் பதில் ஒன்றும் சொல்லாமல் களத்து மேட்டிலிருந்த வைக்கோல் போர்மீது சாய்ந்த வண்ணம் உட்கார்ந்தேன்.

"வெற்றிலை போடுகிறீர்களா, தம்பி!" என்று கேட்டார் தங்கமுத்து.

வேண்டாம் என்பதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் ஆட்டினேன்.

"இப்படிப் பல ஊர்களைச் சுற்றிப் பார்த்தால் தானே ஊர் நிலவரமும் மக்களின் நிலைமையும் தெரிந்து கொள்ள முடியும்! அப்பொழுதுதானே மக்களுக்கு உங்களால் ஆனதைச் செய்யலாம்! ஆனால், மக்கள் உங்களுடைய சேவை இல்லாமலே சௌகர்யமாக இருக்கிறார்கள் என்று நினைக்கிறீர் களா! ஆமாம், அதுவும் நியாயந்தானே! நீங்கள் என்ன வீரசோழன் ஆறா! அல்லது விளைச்சல் நிலமா! இல்லை; அரிசியா! துணியா! உங்க ளைப் பற்றி அவர்கள் நினைப்பதற்கு!" என்று கேட்டு விட்டுக் கல கல வென்று சிரித்தார். பாக்கு உரலில் இடிபட்டுப் பதமாகியிருந்த வெற் றிலைப் பாக்குத் தூளை எடுத்து வாயில் போட்டுக் கொண்டே தங்கமுத்து மேலும் சொன்னார்:

"எனக்கு இப்பொழுது அறுபது வயதுக்குமேல் ஆகிறது. என் வாழ்க்கையில் பல ஊர்கள் சுற்றி இருக்கிறேன். எவ்வளவோ விஷயங்களைப் பற் றித் தெரிந்து கொண்டிருக்கிறேன். சொல்ல முடியாத கஷ்டங்களை அனுபவித்திருக்கிறேன். பசியாலும் பட்டினியாலும் வாடித் துடித்திருக் கிறேன். அதிலிருந்து நான் தெரிந்து கொண்ட தைச் சொல்லுகிறேன். நம் நாடும் நம் மக்களும்

முன்னேற வேண்டுமானால் எல்லாருடைய சிந்தனையும் கிராமத்தை நோக்கியே இருக்க வேண்டும். அப்பொழுதுதான் நாட்டையும் நாட்டு மக்களையும் சீர்திருத்தலாம். மக்களைப் பசியிலிருந்தும் பட்டினியி லிருந்தும் காப்பாற்றலாம்.

"சுதந்திரம் பெற்று விட்டோம், சுதந்திரம் பெற்றுவிட்டோம் என்று சொல்லிக் கொள்கிறீர்களே, அதைப் பற்றி இந்தக் கிராமத்து மக்களுக்கு ஏதாவது தெரியுமா! அதன் பெருமையை யாராவது எடுத்து அவர்களுக்குச் சொல்லியிருக்கிறீர்களா! கிராம மக்களுக்குப் படிப்பு வாசனையோ கிடையாது. அதைப் பற்றி யாராவது சிந்தித்தது உண்டா! வேலை செய்வதற்கு அவர்கள் பிறந்தார்கள். வேலை செய்து விட்டுச் சாகிறார்கள். ஒரு கூட்டம் உழைத்துச் சாகிறது. இன்னொரு கூட்டம் உண்டு களித்து வாழுகிறது. உங்களைப் போன்ற படித்தவர்கள், நாலு ஊரைச் சுற்றிப் பார்த்தவர்கள் இதைப் பற்றி எல்லாம் சிந்திக்க வேண்டும். எல்லா மக்களையும் உழைக்கும்படித் தூண்ட வேண்டும். உழைப்பவர்கள் தான் சமூகத்தில் உயர்ந்தவர்கள் என்ற நிலைமையை உண்டாக்க வேண்டும். அப்பொழுது தான் பெற்ற சுதந்திரத்தைப் பேணி வளர்க்கலாம். நாட்டு மக்களை நல்வழிப் படுத்தலாம்" என்று மூச்சுவிடாமல் சொல்லி விட்டுச் சிறிது நேரம் மௌனமாக இருந்தார் கிழவர் தங்கமுத்து.

நான் அவருடைய பேச்சைக் கேட்டுச் சிந்திக்கத் தொடங்கினேன். அந்தக் கிழவரின் உள்ளப் பண்பை எண்ணி வியந்தேன். அப்பொழுது யாரோ ஒரு பெண் பாடும் கீதம் காற்றிலே மிதந்து வந்தது. என் சிந்தனை தடைப்பட்டு விட்டது. அந்த இன்பகீதம் என்னை என்னவோ செய்து விட்டது. திரும்பிப் பார்த்தேன். தூரத்தில் தெரிந்த இரண்டொரு கூரை வீடுகளுக்கு மத்தியில் ஒரு பெண் பாடிக் கொண்டிருந்தாள். வெகு தூரத்தில் இல்லாததால் அந்தப் பெண் உருவத்தை ஒருவாறு பார்க்க முடிந்தது. புள்ளிமான் ஒன்று பெண் உருவம்பெற்று விட்டதுபோலிருந்தாள். என் மனம் அந்தப் பெண்ணை நாடித் துள்ளி ஓடியது.

"பாடுவது யார் தெரியுமா! என் பேத்திதான். என் பேத்தியாக இருந்தால் என்ன! அவளும் பெண்தானே! உங்களைப் போன்ற வாலிபர்கள் திடீரென்று பெண்களை நம்பி விடுவார்கள். நான் இந்த மாதிரி விஷயங்களிலும் அனுபவம் பெற்றவன். பெண்கள் விஷயத்தில் மட்டும் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருங்கள். உலகில் உள்ள எந்தப் பொருளையும் விடப் பெண்களிடம் மிகவும் கவனமாய் இருக்க வேண்டும். தம்பி! என் வாழ்நாளில் என் எதிரிலேயே நடந்த கதை ஒன்றைச் சொல்லுகிறேன். அதைக் கேட்டால் போதும். உங்களால் ஒரு மாதிரி பெண்களைப் புரிந்து கொள்ள முடியும்" என்று சொல்லி விட்டு அந்தப் பாக்கு உரலில் இருந்த இன்னும் கொஞ்சம் வெற்றிலைப் பாக்குத் தூளையும் எடுத்துப் பல் இல்லாத வாயில் போட்டுக் கொண்டார் தலையாரி தங்கமுத்து.

என்னுடைய கவனமும் அவர் சொல்லப்போகும் கதையை ஆவலுடன் கேட்கத் திரும்பியது.

சற்று நேரத்துக் கெல்லாம் தலையாரி தங்கமுத்து கதையைச் சொல்ல ஆரம்பித்தார்.

"பக்கத்துக் கிராமத்தில் வீரப்பன் என்று ஒரு வாலிபன் இருந்தான். இந்த வட்டாரத்தில் அவனைத் தெரிந்து கொள்ளாதவர்கள் யாருமே கிடையாது என்றுதான் சொல்ல வேண்டும். அவனுக்குச் சிலம்ப வித்தை, மல்யுத்தம் எல்லாம் தெரியும். யாரையும் வலுச் சண்டைக்கு இழுக்க மாட்டான். வந்த சண்டையையும் விட மாட்டான். அந்தக் கிராமத்து ஜனங்களுக் கெல்லாம் அவனைக் கண்டால் பிடிக்காது. அவனைச் சாக அடிப்பதற்கு மந்திர தந்திரங்களை எல்லாம் செய்தனர். மகமாயியிடம் முறையிட்டுக் கொண்டனர். அஞ்சாமலைப் பண்ணையாரைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்களே! அவர், வீரப்பனைக் கொன்று விட்டால் கருங்கல் கோயில் கட்டி வைக்கிறேன் என்று ஐயனாரை வேண்டிக் கொண்டார். மக்களின் அறியாமையை என்னவென்று சொல்லுவேன்! மனிதனை உண்மை மனிதனுக்கும் வல்லமையைப் படைத்த கடவுளிடம் மனிதன் தன்னை மிருகமாக்க வேண்டிக் கொள்கிறான். மக்களின் இந்த வேண்டுதலுக் கெல்லாம் செவி சாய்த்தால் கடவுளுக்கு அப்புறம் ஓய்வு கிடைக்குமா! வீரப்பன் உயிரோடேயேதான் இருந்தான். இன்னும் நன்றாகவே இருந்தான்.

"நான் சொல்லுவது சுமார் இருபது வருடங்களுக்கு முந்தி யிருக்கும். அப்பொழுதும் இதைப் போலவே ஒரு களத்து மேட்டில் நெல் பட்டறைகளுக்குக் காவல் காத்துக் கொண்டிருந்தேன். அந்தக்களத்துக்கு



வெகு சமீபத்தில்தான் இருந்தது அல்லிக் குளம் கிராமம். அல்லிக் குளம் ஆறுமுகமும் அவன் மகள் வள்ளியும் இப்பொழுது நீங்கள் வந்தீர்களே அதுபோல் களத்து மேட்டுப் பக்கம் வருவார்கள். ஆறுமுகமும் என்னிடம் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பான். அவன் ஒரு புரட்சி மனப்பான்மை யுள்ளவன். சீர்திருத்த நோக்க முள்ளவன். வயதில் சிறியவனாக இருந்தாலும் நல்ல ஞானம் உள்ளவன். அவன் சொன்னது எனக்கு இப்பொழுது கூட நினைவுக்கு வருகிறது. 'வயிறார உண்ணும் வசதி படைத்த பணக்காரர்கள் இருக்கிறார்களே, அவர்கள் ஏழைகளை மனிதர்களாகவே மதிப்பதில்லை. ஏழையும் பணக்காரனும் ஒருவருக்கு ஒருவர் எதிரிகள் தான். இந்த நிலைமை மாறி, மனிதனும் மனிதனும் சமம் என்ற நிலைமை வர வேண்டும். அதற்கான வழிகளை அறிவுள்ளவர்கள் செய்ய வேண்டும்' என்று அடிக்கடிச் சொல்லுவான். இதையும் என் ஒருவனிடம்தான் மனம் விட்டுச் சொல்லுவான்.

" ஆறுமுகத்தின் மகள் வள்ளியைப் பற்றி என்ன சொல்லுவேன். அல்லிக்குளம் வள்ளி என்றால் அத்தனை பேரும் வாயைத் திறப்பார்கள். அவ்வளவு அழகி. பேசும் பொற் சித்திரம் என்றுதான் அவளைச் சொல்ல வேண்டும். அவள் அழகை வர்ணிக்க எனக்கு வார்த்தைகளே கிடைக்க வில்லை. வீணையில் வேண்டுமானால் அவள் அழகை மீட்டிக் காண்பிக்கலாம்.

" அல்லிக் குளம் வள்ளியின் அழகில் பாலைவனமாக வறண்டுபோன வாலிப உள்ளங்களைக் கணக்கிட்டுச் சொல்ல முடியாது. வீரப்பனைச் சாக அடிக்க வேண்டிக் கொண்டாரே அஞ்சாமலைப் பண்ணையார், அவர் வள்ளியை மணந்து கொள்ளப் பெரும்பாடு பட்டார். யார் யார் மூலமாகவோ முயன்று பார்த்தார். கடைசியில் தாமே நேரில் சென்று ஆறுமுகத்திடம் பெண் கேட்டார். தன்னுடைய சொத்து முழுவதையும் வள்ளியின் காலடியில் சமர்ப்பித்து விடுகிறேன் என்றார். அவர் எப்படி செல்வத்தில் சிறந்தவரோ அதே போல் அழகிலும் சிறந்து விளங்கினர். வயதும் முப்பது முடியவில்லை. என்ன இருந்து என்ன! 'கல்யாண விஷயம் என் மகள் வள்ளியின் இஷ்டம்' என்று சொல்லி விட்டான் ஆறுமுகம்.

" இதைக் கேட்ட வள்ளி ஓடி வந்தாள். 'அப்பா! அவருடைய சொத்தை எண்ணி என் சுதந்திரத்தை இழக்க ஆசைப்படவில்லை. தென்னை மரத்துப் பொந்தைவிட, பச்சைக் கிளிக்குத் தங்க மணிக்கூண்டு பெரிதல்ல' என்று சொல்லி விட்டாள். ஆறுமுகத்தின் உள்ளம் மலர்ந்தது!

" ஆறுமுகம் அப்படி ஒன்றும் வசதி படைத்தவன் அல்ல; கொஞ்சம் நிலபுலன் இருந்தது. வீண் செலவு செய்ய மாட்டான். வயல் வேலைகளை எல்லாம் தானே செய்வான். அவன் மகள் வள்ளி அவனுக்கு உதவியாக இருப்பாள். அவசியம் இருந்தாலொழிய வேலைக்காரர்களை வைத்துக் கொள்ளுவது தன்னைத் தானே நிருடிக் கொள்ளுவதாகும் என்று நினைப்பவன். ஆகவே சொற்ப நிலங்கள் உடையவனாயிருந்தாலும் அவன் கௌரவமாகக் காலம் கடத்தி வந்தான். ஆனால் மனிதன் தன்மானம் உள்ளவன். தன் மகள் வள்ளியிடம் எல்லையற்ற வாஞ்சை படைத்தவன். அவன் முடிவாகப் பண்ணையாருக்கு என்ன பதில் சொல்லி அனுப்பினன் தெரியுமா! 'பணவசதி படைத்தவர்களுக்கு இருதயமே கிடையாது. சுருக்கமாகச் சொன்னால் பணத்துக்காகத் தன் மானத்தையே இழக்கவும் தயாராக இருப்பார்கள். கௌரவத்துக்கு ஆசைப்பட்டுக் கட்டிய மனைவியின் கற்பை மறந்து விடுவார்கள். ஆகையால் என் மகள் வள்ளியை யாருக்குக் கொடுத்தாலும் மனச்சாட்சி யற்ற இந்தப் பணக்கார சாதிக்கு மட்டும் கொடுக்க மாட்டேன். என் வள்ளிக்கும் உங்களை மணந்து கொள்ள இஷ்டமில்லை' என்று சற்றுக் கடுமையாகவே சொல்லி விட்டான்.

" பணக்காரர்கள் எல்லாருமே அப்படியா இருக்கிறார்கள்! பணவசதி இல்லாத ஏழைகள் மட்டும் என்ன இரக்க முள்ளவர்களா! எல்லோருமே யோக்கியர்களா! மனித உணர்ச்சி படைத்தவர்களா! அது ஒன்றுமில்லை. ஏதோ ஆறுமுகத்தின் போக்கு அப்படி. அவன் மனத்தில் பணக்காரர்கள் மீது அவ்வளவு ஆத்திரம், வெறுப்பு இருந்தது.

" ஆறுமுகம் சொன்னதைக் கேட்டதும் பண்ணையார் முகம் கண்டிவிட்டது. அவர் உதடுகள் துடித்தன. மங்கிய கண்களில் கோபம் ததும்பியது. அவர் மூச்சு அனல் காற்றாக வீசியது. சற்று நேரம் ஆறுமுகத்தை முறைத்துப் பார்த்தார். பேசாமல் திரும்பி விட்டார். அவர் திரும்பிச் சென்றதைப் பார்த்தால் பின்னால் ஏதோ விபரீதம் நடக்கப் போகிறது என்று நன்றாகத் தெரிந்து விட்டது.



" ஒரு நாள் இரவு இப்படித்தான் களத்து மேட்டில் படுத்துக் கிடந்தேன். சந்திரன் பால் போலக் காய்ந்து கொண்டிருந்தான். அன்று எனக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. காற்று என்னமோ ஜிலு ஜிலு என்று



"இந்த ஹோட்டலில் எதையுமே சுத்தமாக வைத்துக் கொள்கிருர்கள்! என்ன, நான் சொல்லுவது சரிதானே?"

"ஆமாம், ஆமாம். இதோ பாருங்கள், சாம்பாரில்கூட 'சோப்பு'க் கிடக்கிறது!"

---

தான் வீசிக்கொண்டிருந்தது. சற்று நேரத்துக்கெல்லாம் அந்தக் காற்றிலே அருமையான கீதம் மிதந்து வந்து என் காதில் தேன்மாரி பொழிந்தது. அந்த இன்ப கீதத்தைக் கேட்டு என் இருதயம் நெகிழ்ந்தது. என் நரம்புகள் முறுக்கேறின. களத்து மேடே ஒரு இன்ப உலகமாக இருந்தது. வாழ்ந்தால் சதா சர்வ காலமும் இது போன்ற சங்கீதத்தைக் கேட்கும் வசதி படைத்தவனுக வாழ வேண்டும். இல்லையேல் செத்து மடிய வேண்டும் என்று எண்ணினேன். அவ்வளவு அபூர்வமான, அருமையான சங்கீதம் அது.

"வர வர அந்தச் சங்கீதம் என்னை நெருங்கிக் கொண்டிருந்தது. கண்ணை மூடி அதை அநுபவித்துக் கொண்டிருந்தேன். சட்டென்று சங்கீதம் நின்று விட்டது. எல்லையற்ற வான வெளியில் மிதந்து கொண்டிருந்த நான் திடீரென்று தரையில் விழுந்து விட்டேன். ஆமாம் உண்மையில் எனக்கு அப்படித்தான் இருந்தது. கண்களைத் திறந்து பார்த்தேன். வீரப்பன் மலர்ந்த முகத்துடன் என் எதிரில் நின்று கொண்டிருந்தான்.

"'வீரப்பனு! வா, அப்பா! வா! எங்கே உன்னை இந்தப் பக்கமே காணபதில்லை' என்றேன். அவன் இலேசாகச் சிரித்தான்.

"வாரிவிடாமல் கிடந்த அவன் சுருண்ட கேசம் நெளி நெளியாகக் காற்றிலே ஆடிக் கொண்டிருந்தது. அவன் கண்கள் இரண்டும் பள பள வென்று ஜ்வலித்துக் கொண்டிருந்தன. அவன் முகத்தில் குறு குறுப்புத் தாண்டவமாடியது. அவன் சிரித்த போது தெரிந்த பல் வரிசைகள் வயிரம் போல் பிரகாசித்தன. இவ்வளவு அருமையான பையன் போக்கிரி என்று பெயர் எடுத்திருக்கிருனே என்று எண்ணி வருந்தினேன்.

"'வீரப்பா! என்ன அழகாகப் பாடுகிருய்! எவ்வளவு அருமையான சங்கீதம். இதை யெல்லாம் யாரிடம் கற்றுக்கொண்டாய்!' என்று கேட்டேன்.

"'நான் யாரிடமும் போய்ப் பாட்டுக் கற்றுக் கொள்ள வில்லை. என்னுடைய தாத்தா கூத்து மேடைகளில் அபாரமாகப் பாடிப் புகழ்பெற்றவர். அவர் பாட்டைக் கேட்டே நான் பாடக் கற்றுக் கொண்டேன்!' என்று சொல்லி அண்ணாந்து பார்த்தான். வீரப்பனைப் பார்ப்பதற்கு வருவதைப் போல மேகங்களுக்கிடையில் மறைந்து கிடந்த சந்திரன் வெளியே வந்தான். அதைப் பார்த்தவுடன் வீரப்பன் பாட ஆரம்பித்து விட்டான்.

'எல்லை யில்லாத தோர் வானக் கடலிடை
வெண்ணிலாவே! விழிக்
கின்ப மளிப்பதோர் தீ வென்திலருவை
வெண்ணிலாவே!'

என்ற பாட்டைத் தன்னை மறந்து பாடினன்.

"நான் அந்தப் பாட்டைக் கேட்டுக் கொண்டே வான வீதியிலிருந்த வெண்ணிலாவுடன் பவனி செல்ல ஆரம்பித்து விட்டேன். என்னுடைய துக்கத்தையும் துயரத்தையும் மறந்து, இந்தத் துன்ப உலகையும் மறந்து கவலையின்றிச் சற்று நேரம் சஞ்சரித்துக் கொண்டிருந்தேன்.

"வீரப்பன் பாட்டை நிறுத்தினன். 'ரொம்ப அபாரமாய்ப் பாடினுய் வீரப்பா!' என்றேன். 'ஆமாம், மிகப் பிரமாதமாக இருந்தது' என்ருன் அல்லிக் குளம் ஆறுமுகம். ஆறுமுகத்தை அந்த வேளையில் அங்கு கண்டது எனக்கு வியப்பாகப் போய் விட்டது. 'நீ எப்போது வந்தாய்!' என்று ஆச்சரியத்துடன் கேட்டேன்.

"'எனக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. இப்படி வெளியில் வந்தேன். யாரோ பாடுவது போலிருந்தது. இவ்வளவு அருமையாகப் பாடுவது யாராயிருக்கும் என்று தெரிந்து கொள்ள, பாட்டு வந்த திசையை நோக்கி வந்தேன். அடாடா! ரொம்பவும் இனிமையாக இருந்தது பாட்டு' என்ருன். 'நூறு நூறு வருஷங்கள் வேண்டுமானுலும் தூங்காமல் இந்தச் சங்கீதத்தைக் கேட்டுக் கொண்டிருக்கலாம்' என்ருன். வீரப்பனுக்கு ஆறுமுகம் சொன்னது ரொம்பவும் திருப்தியாக இருந்தது என்பதை அவன் மலர்ந்த முகம் காண்பித்தது. துடிக்கும் அவன் உதடுகளும், பளபள வென்று மின்னிச் சுழன்ற கண்களும், குழிந்த கன்னங்களும், நிமிர்ந்த மார்பும் காண்பித்தன.

"அன்று முதல் தினமும் வீரப்பன் மாலை வேளைகளில் களத்து மேட்டுக்கு வருவான். ஆறுமுகமும் அவன் மகள் வள்ளியுடன் வருவான். வள்ளியைப் பார்த்த அன்று வீரப்பன் மிகுந்த உற்சாகத்துடன் பாடினன். அந்தப் பாட்டைக் கேட்டு நானும் ஆறுமுகமும் மெய்ம்மறந்து போனேம். வீரப்பனை எப்படி எல்லாமோ புகழ்ந்தான் ஆறுமுகம். ஆனல் வள்ளி மட்டும் ஒரு வித உணர்ச்சியும் இல்லாமல் மரக்கட்டை போல் முகத்தை ஒரு மாதிரியாக வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். வேண்டு மென்றுதான் அப்படி முகத்தை வைத்துக் கொண்டிருந்தாள் என்பது அவளைப் பார்க்கும்போதே நன்ருகத் தெரிந்தது.

"அவன் பாட்டை வள்ளி அநுபவிக்காவிட்டாலும் பாதகமில்லை. சும்மாவாவது இருக்கக் கூடாதா! சமயம் நேரும்போதெல்லாம் ஏதாவது 'சுருக்'கென்று சொல்லி வீரப்பன் மனத்தைப் புண்படுத்தி விடுவாள். ஆறுமுகத்துக்கு அது அவ்வளவாகப் பிடிக்கவில்லைதான். இருந்தாலும் வள்ளியின் மீதுள்ள அன்பு காரணமாகப் பொறுத்து வந்தான். வள்ளிக்குத் தாயார் கிடையாது. ஆகையால் வள்ளிக்குத் தாயாகவும் தந்தையாகவும் இருந்து மிகவும் செல்லமாக வளர்த்து வந்தான். அதனுல் வள்ளியை அவனுல் கோபித்துக் கொள்ளக் கூட முடியவில்லை. வள்ளி மிகுந்த புத்திசாலி. அத்துடன் ஒரு ஆண்பிள்ளைக்கு இருக்க வேண்டிய தைரியத்தையும் பெற்றிருந்தாள். அந்த மாதிரி தைரியத்தை வளர்த்தவனும் ஆறுமுகம்தான்.

"யாருக்குமே தலைவணங்காத வீரப்பன், எத்தனை எத்தனையோ இளம் பெண்களின் காதலை

உதறித் தள்ளிய வீரப்பன் வள்ளிக்குத் தலைவணங்கினான். அவள் காதலைப் பெறத் தவித்தான். தன் உள்ளத்தைக் காண்பிக்க எல்லா முயற்சிகளையும் செய்தான். வள்ளியிடம் வாய் திறந்தே கேட்டான். பாட்டாகப் பாடினான். அவன் பாட்டைக் கேட்டுக் கருங்கல் கூடக் கரைந்துவிடும். அவன் காதல் கீதத்தைக் கேட்டு இரும்புகூட இளகிவிடும். ஆனால் வள்ளியின் மனது கரையவில்லை. அவள் இருதயம் இளகவில்லை. வள்ளி பண்ணையார் பணத்தைக் கண்டும் மயங்கவில்லை. வீரப்பனின் காதல் கீதத்தைக் கேட்டும் இரங்கவில்லை. ஆறுமுகத்துக்குக் கூட தன் மகள் வள்ளியின் உள்ளத்தைத் தெரிந்துகொள்ள முடியவில்லை. பெண் மணிகளே அப்படித்தானே! எப்பொழுதுமே அவர்கள் ஒரு புரியாத புதிர் அல்லவா!

"இந்தச் சமயத்திலேதான் சிதம்பரம் என்ற ஒரு இளைஞன் ஆறுமுகத்தின் சொந்தக்காரன் என்று சொல்லிக்கொண்டு அவன் வீட்டுக்கு வந்தான். அவனை உபசரித்து ஊராருக்கெல்லாம் அறிமுகம் செய்து வைத்தான் ஆறுமுகம். அந்தக் காலத்தில் அல்லிக் குளம் கிராமத்தில் நாலு கட்சிகள். ஊரிலே ஒற்றுமை குலைந்து கிடந்தது. அந்த ஒற்றுமைக் குறைவைப் பயன்படுத்திக் கொண்டு ஒருவருக்கொருவர் விரோதம் மூட்டித் தங்கள் காரியங்களைச் சுலபமாக்கிக் கொண்டு வந்தனர் ஒரு சில பண்ணைக்காரர்கள். ஐயாயிரத்துக்கு மேல் ஜனத்தொகை உள்ள அந்தப் பெரிய கிராமத்தில் ஒரு பள்ளிக்கூடம் கிடையாது. ஒரு தபாலாபீஸ் கிடையாது. அதைப் பற்றிக் கேட்டால் 'அதெல்லாம் இல்லாமல் நாங்கள் என்ன கெட்டு விட்டோமா?' என்று அந்தக் கிராமத்தில் உள்ள சில பெரிய மனிதர்கள் சொல்லி வந்தனர். இதையெல்லாம் சிதம்பரம் பார்த்தான். அவன் மனம் வேதனைப் பட்டது. அல்லிக் குளம் கிராமத்து ஏழை மக்களுக்குச் சேவை செய்வது என்று தீர்மானித்தான்.

"பண்ணையார்களிடம் அடிமைகளைப் போல் உழைத்து வந்த உழவர்களுக்கு உற்சாக மூட்டி அவர்களை ஒற்றுமைப்படுத்தி அவர்கள் உரிமைகளைப் பெற வழி செய்து கொடுத்தான். அதனால் உற்பத்தி பெருகிற்று. எந்தக் குளத்தை வைத்து அந்தக் கிராமத்துக்குப் பெயர் வந்ததோ அந்த அல்லிக்குளம் கவனிப்பாரற்றுத் தூர்ந்து போய்க் கிடந்தது. கிராம மக்களை ஒன்று படுத்தி அல்லிக் குளத்தை ஆழமாக வெட்டிச் சுத்தப் படுத்தினான். மனுக்கள் மேல் மனுக்களாக எழுதிப் போட்டு ஒரு தபாலாபீஸ் திறக்க ஏற்பாடு செய்தான். நாலு கட்சியாக உருக்குலைந்திருந்த அல்லிக்குளம் சண்டை சச்சரவு இல்லாமல் ஒற்றுமையாக வாழ வழிப்படுத்தினான். எட்டு மைலுக்கு அப்பால் சென்று படித்து வந்த அல்லிக்குளத்துக் குழந்தைகளுக்குக் கிராமத்திலேயே பள்ளிக்கூடம் ஏற்படுத்தி அதில் படிக்க வசதி செய்தான். இது வரை பணம் படைத்த பணக்காரப் பிள்ளைகள் தான் எட்டு மைல் சென்று படித்து வந்தார்கள். இப்பொழுது ஏழைப் பிள்ளைகளும் படிக்க ஆரம்பித்தனர். இரவில் முதியவர்களை ஒன்று திரட்டி அவர்களுக்குத் தானே படிப்புச் சொல்லிக் கொடுத்தான். அரசியல் விஷயங்களை அவர்களுக்கு எடுத்துச் சொன்னான்.

"சிதம்பரம் எல்லாரையும் போல சுகமாக வாழ்வதாயிருந்தால் வாழலாம். அவன் படித்தவன்; பல விஷயங்களைத் தெரிந்தவன். ஆனால் வெறும் சோற்றுக்கும் துணிக்கும் வேண்டிப் பொய் பேசுவதை, வஞ்சனை செய்வதை, வேஷம் போடுவதை வெறுத்தான். அடாடா! அற்ப சுகத்தை வேண்டி எத்தனை பேர் திருடுகிறார்கள். கொலை புரிகிறார்கள்! விலைமதிப்பற்ற கற்பை விற்கிறார்கள்! ஒரு கண நேர இன்பத்துக்காக எதையும் செய்யத் தயாராயிருக்கிறார்கள். இதற்கெல்லாம் நேர் விரோதமாக சிதம்பரம் உண்மைக்காக உழைத்தான். ஏழை எளிய மக்களின் உயர்வை வேண்டித் தொண்டு புரிந்தான்.

"இதனால் அல்லிக்குளத்து மக்கள் அறிவு பெற்றனர். சிதம்பரம் அல்லிக் குளத்துக்கு வந்த பிறகு அல்லிக்குளம் கிராமமே ஒரு புதுமை பெற்று விளங்கியது.

வள்ளி சிதம்பரத்தின் இந்தப் பொது வேலைக்குப் பக்கபலமாக நின்று உதவினாள். கிராமத்துப் பெண்மணிகளுக்குத் தன்னாலான உதவிகளை எல்லாம் செய்து வந்தாள். இதைக் கண்டு ஊரில் உள்ள சிலர் பொறாமைப் பட்டனர். ஊரை ஏமாற்றிப் பிழைத்து வந்த ஒரு சிலரின் தகிடுதத்தங்கள் இப்பொழுது செல்லவில்லை. ஆகவே அவர்கள் சிதம்பரத்தை எப்படியாவது ஊரை விட்டே விரட்ட முயன்றனர். ஆறு





வந்தவர் :—என்டா அம்பி, எல்லோரும் ஹார்மோனியத்தை வெளுத்து வாங்கிண்டு இருக்காளே, நீயும் போய் வாசிக்கிறதுதானே!

பையன்:- நான் என்ன பண்ணுவேன் மாமா! எனக்கு ஹார்மோனியம் வாசிக்கத் தெரியாதே!

முகத்தை நெருங்கிச் சிதம்பரத்தைப் பற்றியும் அவன் மகள் வள்ளியைப் பற்றியும் அவதூறு சொன்னார்கள். ஆறுமுகத்துக்குப் பல வழிகளில் இடைஞ்சல் செய்து வந்தனர். ஆறுமுகத்தின் மனதும் கெட்டு விட்டது. சிதம்பரத்தை வீட்டை விட்டு அனுப்பி விட்டான். இது வள்ளிக்குக் கஷ்டமாக இருந்தாலும் அவள் தன் தந்தைக்கு விரோதமாக நடக்கவில்லை. ஆனால் அல்லிக்குளம் மக்கள் அவனை ஆதரித்தனர். அவனுக்கு ஊருக்கு ஓரமாக ஒரு சிறு வீடு கட்டிக் கொடுத்து அவனைப் போற்றினர். இதற்கு வள்ளி பெரிதும் உதவி புரிந்தாள். இதை அந்த நய வஞ்சகர்களால் தடுக்க முடியவில்லை. ஆறுமுகமும் வள்ளியைக் கண்டிக்க முடியாமல் தவித்தான்.

"வள்ளி தன்னை விரும்பாமல் யாரோ ஊர் பேர் தெரியாத ஒருவனுக்கு உதவி செய்து வருவதும் அவனுடன் சுற்றுவதும், ஆறுமுகமும் இதைக் கண்டும் காணாததுமாக இருப்பதும் வீரப்பனுக்கு மிகவும் வேதனையைக் கொடுத்தது. தனக்குப் போட்டியாக வள்ளியைக் கவர வந்துவிட்டான் சிதம்பரம் என்று நினைத்தான். வீரப்பனின் இந்த மாதிரி மன நிலையை அறிந்த சிலர், சிதம்பரத்தை எப்படியாவது தீர்த்துக் கட்டவேண்டும் என்று சொல்லிக்கொண்டு அவனை நெருங்கிச் சென்றார்கள். முதலில் வீரப்பனை வெறுத்து வந்தவர்கள் இப்போது அவனிடம் உறவாட ஆரம்பித்தனர். வீரப்பன் மாளவேண்டும் என்று மகாமாயியை வேண்டிக் கொண்டவர்கள்; அவன் செத்தால் ஐயனாருக்குக் கோயில் கட்டுவதாக வேண்டிக் கொண்ட அஞ்சாமலைப் பண்ணையார் எல்லாரும் வீரப்பனுடன் நட்புப் பாராட்டினர். இதற்கெல்லாம் காரணம் வள்ளி சிதம்பரத்துக்கு உதவியது தான். வள்ளியின் காதல் போட்டியில் தோற்று விட்ட எல்லாரும் ஒன்று திரண்டு சதி செய்ய ஆரம்பித்தனர். சிதம்பரத்தைத் தொலைத்து விட்டு வள்ளியை மணந்து கொள்ள வேண்டும் என்று ஒவ்வொருவரும் தங்கள் மனத்துக்குள் எண்ணங் கொண்டனர். அவள் அழகு அப்படிப் பைத்தியமாக்கி விட்டது அவர்களை. வள்ளியின் அழகு அல்லிக்குளத்துக்கே ஆபத்தை உண்டாக்கி விடுமோ என்று நினைக்கவேண்டி வந்துவிட்டது.

"திடீரென்று எதிர்பாராதது நடந்து விட்டது. சிதம்பரத்தை யாரோ அடித்து மண்டையை உடைத்து விட்டனர். அவன் மண்டை உடைந்து தன் உணர்வற்றுக் கிடந்தான். அதைக் கண்டு வள்ளி துடி துடித்துப் போனாள். அவனுக்கு வேண்டிய சிகிச்சைகளை எல்லாம் தானே செய்தாள். அப்போதும் அவனுக்கு நினைவு வரவில்லை. ஆறுமுகம் ஒன்றும் சொல்ல முடியாமல் திகைத்தான். இதற்குள் சிலர் வள்ளியிடம் சென்று வீரப்பன்தான் சிதம்பரத்தின் மண்டையை உடைத்தவன் என்று சொல்லி விட்டனர்.

"இதைக் கேட்ட வள்ளி வீராங்கனையாக மாறிவிட்டாள். அவளுக்கு அசாதாரணமான ஒரு துணிவு ஏற்பட்டுவிட்டது. வீரப்பனை நேரிலேயே போய்க் கேட்டு விடுவதாகப் புறப்பட்டாள். அவளுக்குத் துணையாக வந்தவர்களை எல்லாம் நிறுத்தி விட்டுத் தானே தன்னந்தனியாகப் புறப்பட்டாள். பொழுது போய் விட்டதையும் கவனிக்காமல் புறப்பட்டாள். நிலைமை விபரீதமாகி வருவதைக் கண்டு வள்ளியின் தகப்பன் பயந்து கொண்டிருந்தான். வள்ளியை வீரப்பன் ஏதாவது செய்து விடுவானோ! தன்னைப் பல தடவை அவமானப் படுத்தியதை நினைத்து வள்ளிக்குக் கேடு விளைவித்துவிடுவானோ! என்று நடுங்கி விட்டான். உடனே மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க என்னிடம் ஓடி வந்தான். விஷயங்களை எல்லாம் சொன்னான்.

"அவன் சொன்ன விஷயங்களைக் கேட்டதும் எனக்கு ஒரு கணம் என்ன செய்வது என்றே புரியவில்லை. இந்தச் சமயத்தில் வள்ளியைப் போக வேண்டாம் என்று சொல்லித் தடுக்க முடியாது. அப்படிச் செய்வதும் நியாயம் என்று தோன்றவில்லை. அவளைப் பின் தொடர்ந்து சென்று அவளுக்கு உதவி புரிய வேண்டியதுதான் என்று தீர்மானித்தேன். ஆறுமுகமும் என் யோசனையை ஏற்றுக் கொண்டான். நானும் ஆறுமுகமும் அவளுக்குத் தெரியாமல் வள்ளியைப் பின் தொடர்ந்து சென்றோம்" என்று சொல்லித் தலையாரி தங்கமுத்து கதையை நிறுத்தினார்.

நான் மேலே என்ன ஆயிற்று என்று கேட்கும் தோரணையில் அவர் முகத்தைப் பார்த்தேன். என் இருதயம் படபடவென்று அடித்துக் கொண்டிருந்தது. காற்றும் சில்லென்று வீசிக்கொண்டிருந்தது.

அவர் இரண்டு வெற்றிலையை எடுத்துச் சுண்ணாம்பைத் தடவி அதைப் பாக்கு உரலில் போட்டார். பிறகு கொஞ்சம் பாக்கையும் எடுத்துப் போட்டு இடிக்க ஆரம்பித்து விட்டார். அங்கு சூழ்ந்திருந்த நிசப்தத்தைக் கலைத்துக்கொண்டு 'டக்' 'டக்' கென்று அவர் பாக்கு இடிக்கும் சத்தம் கேட்டது. அந்தச் சத்தம் இப்பொழுது என்னைத் திகில் கொள்ளச் செய்தது. அவர் தலை முண்டாசுத் துணி காற்றில் சட சட வென்று அடித்துக் கொண்டிருந்தது. சூரியன் நன்றாக மறைந்து விட்டதால் எங்கும் இருள் சூழ்ந்து கொண்டிருந்தது. அந்த இருட்டு எனக்கு மிகவும் பயங்கரமாக இருந்தது. (அடுத்த இதழில் முடியும்)

## வீட்டில் சினிமா புரொஜக்டர்



வீட்டிலேயே சினிமாபார்த்து ஆனந்தமடையுங்கள். சலனப் படங்களை 1 முதல் 4 சதுர அடி அளவில் திரையின் மேல் கண்டு களிக்கலாம். இது பிரகாசமாகவும், கவர்ச்சிகரமாகவும் பிரதிபலிக்கிறது. விலை ரூ. 6-8-0. வி. பி. பி. சார்ஜ் ரூ. 2. தனி. மேற்கொண்டு பிலிம் அடி 1-க்கு அணா 4.

### தானாகவே ஆறு தடவைகள் சுடும் பிஸ்டல்



(லைசென்ஸ் தேவை இல்லை)

தானாகவே இயங்கி ஆறு முறைகள் சுடும் ரிபீட்டர் டயனுடன் கூடிய அமெரிக்கன் மாடல் பிஸ்டலை வாங்குங்கள். திருடர்களும், காட்டு மிருகங்களும் பயந்து நடுங்கும் அளவு பெரிய சப்தத்தையும் நெருப்பையும் கக்கும். விரோதிகள் எதிர்க்கும் சமயத்தில் உங்களுக்கு உற்ற தோழன். விலை ரூ. 6-0-0 பாக்கிங், தபால் செலவு ரூ. 1-8-0 தனி. 12 ரவைகள் இலவசம். மேற்கொண்டு ரவை டஜன் ரூ. 1-4-0. பிஸ்டல் கேஸ் ரூ. 2-8-0.

கடிதங்கள் ஆங்கிலத்தில் எழுத வேண்டும்.

**JANTA KARYALAYA**
**KILA GATE, HATHRAS U. P.**



கவியரசர் டாகூர் காந்தி மகாத்மாவின் பெருமையையும் அவர் இந்தியாவுக்கு ஆற்றியிருக்கும் அருந்தொண்டையும்

# மகாத்மா காந்தி

என்ற நூலில் அழகாக விளக்கியிருக்கிறார்

விலை அணா எட்டு

(தபால் செலவு தனி)

•

சசிதேவி எழுதிய

# விஜயா

முதலிய கதைகள்

விலை ரூ. 2-8-0

(தபால் செலவு தனி)

•

கிடைக்குமிடம்

**கல்கி காரியாலயம்**

கீழ்ப்பாக்கம் :: சென்னை



## ஆஸ்துமா சளி ஒரே நாளில் முற்றிலும் அகற்றப்பட்டது

மெண்டாகோ கண்டு பிடித்தது முதல் மூச்சுத் திணறல், சுவாஸ இழுப்பு, ஆஸ்துமாவினால் யாரும் அவதியுற வேண்டாம். மெண்டாகோ உபயோகித்தால் இன்ஜக்ஷனும் கெடுதலான புகையும் வேண்டாம். ருசியற்ற இரு மெண்டாகோ மாத்திரைகளை ஆகாரத்துடன் சாப்பிட்ட 10 நிமிஷத்தில் உடலிலுள்ள சளி உடனேயே கரைகிறது. சுலபமாக மூச்சு விடலாம். நரம்புகளுக்கு விச்ராந்தி, சுவாஸப் பைக்கு நன்மை, விருவிருப்பு ஏற்படும்.

### சிசுவைப் போல் அயர்ந்த நித்திரை

ஆஸ்துமாவினால் அவதியுற்ற ஆயிரக்கணக்கானவர்கள் மெண்டாகோ உட்கொண்டு முதல் நாள் இரவே ஆழ்ந்த நித்திரை செய்து சுகமடைந்தனர். திட ஆரோக்யமும் 5 முதல் 10 வருஷம் இளமையடைந்ததாகவும் உணர்ந்தனர். காரணம் ஆஸ்துமாவினால் ஏற்படும் இடையூறுகளை மெண்டாகோ இயற்கையில் தவிர்க்கிறது. (1) சளி, கோழையை இளக்குகிறது. (2) சுவாச மார்க்கத்திலுள்ள சிறு தசைகளுக்குப் பலம் அளிக்கிறது. (4) தேகத்திற்கு விருவிருப்புடன் ரத்த புஷ்டியையும் அளிக்கிறது.

### ஐந்து வருஷமாக ஆஸ்துமா இல்லை

சுலபமாக சுவாஸித்து நல்ல நித்திரையை அளிக்கிறது. மீண்டும் ஆஸ்துமா அண்டாது பண்படுத்துகிறது. மிஸ்டர் ஜே. ஆர். எழுதுகிறார்: "ஆஸ்துமாவினால் என் உயிரே போய் எடையில் 40 பவுண்டும் குறைந்து விட்டது. இழுப்பு, இருமல், மாரடைப்பினால் தூக்கமே இல்லை. சாவைத்தான் எதிர்பார்த்தேன். மெண்டாகோ முதல் இரவிலேயே எனக்கிருந்த பிடிப்பை விடுவித்தது. கடந்த இரண்டு வருஷங்களாக ஆஸ்துமாவே இல்லை." மிஸஸ். ஏ. டபிள்யூ எழுதுகிறார்: "கடந்த 25 வருஷமாக எனக்கு ஆஸ்துமா உண்டு. மெண்டாகோ உபயோகித்ததிலிருந்து இரவில் நல்ல தூக்கம். மீண்டும் ஆஸ்துமாவே இல்லை." மிஸஸ். ஜி. ஈ. எ. எழுதுகிறார்: "மெண்டாகோ பற்றி கேள்விப்பட்ட நன்னாளை வாழ்த்துகிறேன். கடந்த 35 வருஷங்களாக இராத் தூக்கமறியாத என்போன்ற ஏழை ஸ்திரீக்கு ஆண்டவன் அளித்த அமிர்தம் மெண்டாகோ. தூக்கமின்றி ஆஸ்துமாவால் உருகியே போனேன். அக்கஷ்டங்களை இப்போது மறந்துவிட வேண்டும் என உணருகிறேன்."

### கைமேல் காணும் பலன்

மெண்டாகோ முதல் வேளை சாப்பிட்டதுமே ரத்தத்துடன் கலந்து ஆஸ்துமாவை ஒழிக்கிறது. மெண்டாகோ யௌவன உணர்ச்சி, பலம் இவற்றை விரைவில் அளிக்கிறது. வாபஸ் உத்திரவாதத்தில் மெண்டாகோ உபயோகித்து தீர்ப்பளியுங்கள். சாப்பிட்ட பின் பூரண குணம் பெற்று திருப்தியளிக்காவிடில் காலிப் பெட்டியை அனுப்பினால் முழுத் தொகையும் வாபஸ் செய்யப்படும். இன்றே மருந்து வியாபாரியிடமிருந்து மெண்டாகோ வாங்குங்கள். இன்றிரவு எப்படித் தூங்குகிறீர்கள். மறு நாள் காலை எவ்விதத் தெம்புணர்ச்சி ஏற்படுகிறதெனப் பாருங்கள். உத்தரவாதம் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது.

**Mendaco**

**மெண்டாகோ**

★ ஆஸ்துமா ★ மார்ச்சளி நோய் ★ ஹே ஜுரம் இவற்றை அறவே அகற்றுகின்றது

# அந்த வயிற்று வலியை இப்போதே குணப்படுத்திக் கொள்ளுங்கள்!

## அலக்ஷியப்படுத்தப் பட்ட அஜீரணம் ஆபத்தை உண்டாக்கும்.

உங்களுக்குப் பிடித்ததைச் சாப்பிட முடியாதபடி அஜீரணம் உங்களுக்கு ஏற்படுகிறது என்றால் நீங்கள் பாதி உயிருடன்தான் வாழுகிறீர்கள் என்று அர்த்தம். மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர் உங்களுக்கு உதவியளிக்குமாக; அது உலகம் முழுவதிலுமுள்ள ஆயிரக்கணக்கான மக்களுக்கு உதவியளித்திருக்கிறது.

அஜீரணத்தினால் உண்டாகும் நோவை நிமிஷங்களுக்குள்ளாகவே ஒரே டோஸ் மருந்து குணப்படுத்தும். அஜீரணத்துக்குள்ளான தேக நிலையைச் சரிப்படுத்தி உதவுவதற்கு மருந்து ஒரு தவணைக்கு உட்கொள்ள வேண்டும். அலக்ஷியப்படுத்தப்பட்ட அஜீரணம் ஆபத்தானது; ஞாபகமிருக்கட்டும். இன்றைய அசௌகரியம் நாளைய நோயாகமாறி இறுதியில் ஆபத்தானதும் குணப்படுத்த இயலாததுமான தேக நிலையை உண்டாக்கிவிடும். மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடரிடம் நம்பிக்கை வைத்து உட்கொண்டு ருசிகரமான பண்டங்களை மீண்டும் சாப்பிட்டு மகிழுங்கள். உங்களுக்கு இஷ்டமானபடி விதவிதமாகச் சாப்பிடலாம். அப்போதுதான் வாழ்க்கை வாழக் கூடியதாக இருக்கும்.






ஞாபகமிருக்கட்டும். மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர் உலகப்பிரசித்தி பெற்றது. எனவே அநேகம்பேர் அதைக் காப்பியடிக்கப் பார்க்கிறார்கள். "அலெக்ஸ் சி. மக்ளீன்" என்கிற கையொப்பம் இருக்கிறதா என்று பார்த்து உண்மையான சரக்கையே வாங்குங்கள்.

# மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர்

வியாபார விவரங்களுக்கு:

ஜே. எல். மாரிஸன், ஸன் & ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட்

தபால் பெட்டி 6527, பம்பாய் 26; தபால் பெட்டி 387, கல்கத்தா

தபால் பெட்டி 1370, மதராஸ்

# பைல் பீன்ஸ்






அவள்
தோற்றத்தைக்
கண்டு பெண்களே
பொறுமைப்
படும்படி செய்தது



ஒரு காலத்தில் பெண்கள் அவள் தோற்றத்தைக் கண்டு கேலியாகச் சிரித்தனர். — புருஷர்கள் அவளை வெறுத்தனர் — அவள் ஊதிப் போயிருந்தாள். மதோன்மத்தமாக விளங்கினாள். நோயும் சக்திக் குறைவும் அவள் வசீகரத்தைப் போக்கி விட்டன. இப்போது மருந்து போர்டு அங்கீகரித்துள்ள பைல் பீன்ஸை அவள் ஒழுங்காக உட்கொள்வதிலிருந்து அவள் யௌவனத்துடன் இருக்கிறாள். ஒடிசலாக, கவர்ச்சியும், புதிய சக்தியும் பெற்றவளாக விளங்குகிறாள். எல்லோரும் அவளைப் போற்றுகின்றனர். பைல் பீன்ஸ் மலச்சிக்கல், வயிற்றுவலி, அசதி முதலிய நோய்களைப் போக்கி, உங்களை ஆரோக்கியமாகவும் ஆனந்தமாகவும் வாழச் செய்கிறது.

மருந்து போர்டு அங்கீகாரம் பெற்ற இந்த அசல் **பைல் பீன்ஸ்**களையே பார்த்து வாங்குங்கள்

ஏஜண்டுகள்: மெஸர்ஸ்.தாதா & கோ.,பி.டி., மதராஸ் FBY: 3





## உங்கள்
## சளி ஜுரத்தைக் குணமாக்கிக் கொண்டு

## சுலபமாக மூச்சு விடுங்கள்.

டாக்டர்கள் இந்த அற்புதமான பெப்ஸை சிபார்சு செய்கிறார்கள்.

# PEPS




இருமல், ஜலதோஷம், குளிர், தொண்டைப் புண், இன்புளுயன்ஸா, சளி ஜுரம், மார்வலி, சுவாச கோச நோய்கள் முதலியவற்றிற்கு உகந்தது. சளி ஜுரம் மிகவும் ஆபத்தானது. பெப்ஸ் அதைக் குணப்படுத்தும். பெப்ஸ் மாத்திரைகளை உட்கொள்ளுங்கள். நீங்கள் மூச்சுவிடும்போது, அவற்றின் நறுமணமுள்ள மருந்துச் சத்துக்கள் உங்கள் சுவாசக் குழாய்கள் வழியாக சுவாசக் கோசங்களுக்குச் செல்லும். பெப்ஸ் எரிச்சலைப் போக்கி புண்ணையும் நோவையும் ஆற்றுகிறது. அபாயகரமான கிருமிகள் உங்களுக்கு அதிகக் கெடுதலைச் செய்யுமுன் பெப்ஸ் அவைகளைக் கொன்று விடுகிறது. பெப்ஸ் மூச்சு விடுவதை எளிதாக்குகிறது. பெப்ஸ் அற்புதமானது.

பெப்ஸ் தொண்டைப் புண், மார்வலி நோய் நிவாரண மாத்திரைகள் FPY 3

ஏஜண்டுகள்: மெஸர்ஸ். தாதா & கம்பெனி, பி. டி., மதராஸ்



# சீக்கிரமாக மலிவாக

## வேலையை முடிக்க



**மண்வாரிகள்:**
மூன்றுவித நிறுவைகளில் பக்குவப்படுத் தப்பட்ட மரப்பிடிகள் பொருத்தப்பட்டவை. சீரான அமைப்புள்ளதால் வேலை செய்ய இலகுவாக இருக்கின்றன. ஆழமான அலகு வாய்ந்திருப்பதால் அதிகமான சாமான்களை தூக்க முடிகிறது.



**சுத்திகள்:**
செம்மட்டிகள் பலவித பரிமாணங்களில், மேலும் கல் உடைக்கும் சுத்திகள், ஆணி அடிக்கும் சுத்திகள், சாவி திறக்கும் சுத்திகளும் கிடைக்கின்றன. விசேஷமாக உஷ்ணமளிக்கப்பட்ட எஃகிலிருந்து தயாரிக்கப்பட்டவை.



**தோடாரிகள், செம்மட்டிகள்:**
நான்குவித அடிப்படையான நிறுவைகளில், சன்தாக்களிலும், சுரங்கங்களிலும் வேலை செய்பவர்களால் விரும்பப்படுகின்றன. விசேஷமாக உறுதியாக்கப்பட்ட, கூராக வெட்டும் முனைகள் வேலையை இலகுவாக்குகின்றன.

உறுதியான, நீடித்துழைக்கும்

# பத்து - வருஷ

# ட்ரெஷரி ஸேவிங்ஸ்

# டிபாஸிட்டு

# ஸர்ட்டிபிகேட்டுகள்

**$3\frac{1}{2}$ சத விகிதம் வட்டி தரும்**

## வட்டிக்கு வரி கிடையாது

**வருஷ வாரியில் உங்கள் விலாசத்துக்கு வட்டிப் பணம் அனுப்பப்படும்**

**ஸர்ட்டிபிகேட்டுகள் கிடைக்குமிடம் :**

(i) *ரிஸர்வ் பாங்க் ஆபிஸ்கள் : கல்கத்தா, பம்பாய், சென்னை, டில்லி ; மேலும் கவர்ன்மெண்ட் ட்ரெஷரி தொழில் பட்டுவாடா செய்யும் இம்பீரியல் பாங்க் ஆப் இந்தியாவின் பிராஞ்சுகள்.*

(ii) *இம்பீரியல் பாங்க் ட்ரெஷரி தொழில் பட்டுவாடா செய்யாத பார்ட் 'ஏ' ஸ்டேட்டுகளிலுள்ள ஜில்லா ட்ரெஷரிகள்.*

(iii) *பூஜ் (கட்ச்) இம்பால் (மணிப்பூர்), கூர்க் மெர்க்காரா (கொடகு), ஆகிய இடங்களிலிருக்கும் ட்ரெஷரிகள்.*

*நூறு ரூபாய்க் கணக்கில் ஸர்ட்டிபிகேட்டுகள் வெளியிடப்படும்.*

*ரூ. 25,000 வரை நீங்கள் முதலீடு செய்யலாம். இரண்டு பேர் கூட்டாக முதலீடு செய்யவும், ஸ்தாபனங்களுக்கும் முதலீட்டின் அளவு ரூ. 50,000. தர்ம ஸ்தாபனங்களுக்கு ரூ. 1,00,000.*

1951, ஜனவரி 22உ யன்று நிதி மந்திரி காரியாலய அறிக்கை நெ. 7 (1). B. /51 பிரகாரம் அதில் கண்டுள்ள நிபந்தனைகளுக்கு உட்பட்டு வெளியிடப் பட்டது.

*இதர விபரங்களுக்கு கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதுக :*

## நேஷனல் ஸேவிங்ஸ் கமிஷனர்,

காா்ட்டன் காஸில் : ஸிம்லா - 3

AC-347 TM.

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

பற்களை சுத்தம் செய்வது பாதி வேலை தான் . . .

தினமும் ஈறுகளைப் பாதுகாப்பது அந்த வேலையை பூர்த்திசெய்கிறது!

உங்கள் பற்கள் எவ்வளவு ஒழுங்கானவையாக இருந்தாலும் அவைகளை வலிக்கும் ஈறுகள் பலமிழந்தோ அல்லது நோயுற்றோ போனால் அவை உபயோகமற்றதாகி விடுகின்றன. அதனால் இந்த ஆபத்துக்குள்ளாகாதீர்கள்! தினமும் இருமுறை கிப்ஸ் எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகியுங்கள். பல் வைத்தியர்கள் ஈறுகளை உறுதியாகவும், ஆரோக்கியமாகவும் வைத்திருக்க உபயோகிக்கும் ஸோடியம் ரிஸினோலியேட் இதில் அடங்கியுள்ளது. மேலும் எஸ். ஆர். டூத்பேஸ்ட் பற்களை பளிச்சென்று வெண்மையாக சுத்தம் செய்கிறது.

கிப்ஸ்
ரிஜிஸ்டேர்ட்

**எஸ்.ஆர். டூத்பேஸ்ட்**




பற்களை பளிச்சென்று வெண்மையாகவும் ஈறுகளை ஆரோக்கியமாகவும் வைத்திருப்பதற்கென்றே பிரத்தியேகமாக தயாரிக்கப்பட்டுள்ளது

GSR. 76-50-55 TM

**Regd. No. M 4392**

*Registered as a newspaper in Ceylon*

## இக் கைகள் அழகை
## உருவாக்குகின்றன, ஆனால்...



... உருவாக்கும் கைகளும்கூட
அழுக்கு அடைகின்றன!

அழுக்கடைந்த கைகள்
மறைந்திருக்கும்
அபாயத்தைத்
தாங்குகின்றன !




லைப்பாயினால் அடிக்கடி கழுவுங்கள்

# லைப்பாய் சோப்

அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களை காப்பாற்றுகிறது!

L. 177-50 TM